இந்தியாவின் முதல் 'சாஷே ஷாம்புவை'
பிரசவித்த தாயின் சாதனை சரித்திரம்!

# ஹேமாலயம்

எழுத்து வடிவம் : எஸ்.பால அமுதா





# ஹேமாலயம்



எழுத்து வடிவம்
எஸ். பால அமுதா



வாழ்க்கை வரலாறு / Biography

ஹேமாலயம்

# Hemalayam

Tamil Text : S. Bala Amudha

M.N. 416
Mathi Nilayam : September 2013
200 Pages, Price Rs.125

Printed in India.

Mathi Nilayam
No.2/3, 4th Street,
Gopalapuram,
Chennai - 600 086.
Ph: 044-28111506

Website: www.mathinilayam.com

Email : mathinilayambook@gmail.com; info@mathinilayam.com

Design / Layout : N. Premkumar, JLP Designs

ஒயிலாய் ஒய்யாரமாய் உட்காந்திருக்கும் ஏகாந்த மயிலே !



ஏகாந்த மயிலே, இனிது இனிது ஏகாந்தம் இனிது என
மந்தையாய் மாண்டு போகும் மானுடத்திற்கு
உணர்த்துகின்றாயா?

தனித்திரு ! விழித்திரு ! பசித்திரு !

# ‘இது புத்தகம் மட்டுமல்ல, பொக்கிஷம்...!’

முத்தமிழ் அறிஞர், கலைமாமணி முனைவர் விக்கிரமன்
(ஆசிரியர், இலக்கியபீடம்)

டாக்டர் ஹேமா சின்னிகிருஷ்ணன் அவர்களை எனக்கும் பல ஆண்டு களாகத் தெரியும். அவருடைய புதல்வர்களுள் டாக்டர் சி.கே. ராஜ்குமார், சி.கே. அசோக்குமார் ஆகியோர்களுடன் பல நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டிருக்கிறேன். சி.கே. ரங்கநாதன், சி.கே. குமாரவேல் ஆகியோருடனும் அறிமுகம் உண்டு.

புதல்வர்கள் வழியாகவும், அவர்களது குடும்ப நண்பர் திரு. பாரி மூலமாகவும் டாக்டர் ஹேமா சின்னிகிருஷ்ணன் அவர்களுடைய இலக்கியப்பற்று, ஆன்மிகப்பற்று, மனிதநேயம் ஆகியவற்றை அறிந்திருக்கிறேன். ஹேமா சின்னிகிருஷ்ணன் அவர்களுக்குப் படைப்பிலக்கியங்கள் எழுதுபவர்கள் மீது மிக்க மரியாதை உண்டு.

மழலைப்பள்ளியில் அவர்களுக்கு மிகுந்த விருப்பம் பல ஆண்டுகளுக்கு முன்பே உண்டு. சிறந்த இலக்கியச் சொற்பொழிவு, பட்டிமன்றம் இவற்றை ஊக்குவிப்பதில் அவர்களுக்கு ஆர்வம் உண்டு. இந்த “ஹேமாலயம்”–‘தன் வரலாற்று’ நூலை உடனே ஒரே மூச்சில் படித்து முடித்தேன்.

மகாத்மாவின் ‘சத்திய சோதனை’ நேருவின் ‘தன் வரலாறு’ தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாத அய்யரின் ‘என் சரித்திரம்’, சிலம்புச் செல்வர். ம.பொ.சியின் ‘என் போராட்டம்’ – இவை எல்லாம் பல தலைமுறைக்கும் படித்து நினைவில் கொள்ள வேண்டிய இலக்கியங்கள்.

அந்த வரிசையில் ஹேமா சின்னிகிருஷ்ணன் அவர்களுடைய தன் வரலாறு 'ஹேமாலயம்' அவர் குணநலன்களை நாம் அறிய வைப்பதுடன், அவருக்கு பெற்றோர் மீது இருந்த பாசம், கணவரிடம் இருந்த மரியாதை, சத்ய சாய்பாபாவிடம் ஏற்பட்ட பூரண நம்பிக்கையுடன் கூடிய பக்தி, மழலைக் கல்வியை ஊக்குவித்ததால் பெரிய பள்ளியைத் தொடங்கக்கூடிய ஆர்வம், தவப்புதல்வர் - புதல்விகளை பண்பாடு குன்றாமல் வளர்த்து கல்விமான்களாகவும், தொழிலதிபர்களாகவும் மாற்றியத் தாய்மை உணர்வு, மனித நேயம் இவற்றை அறிய முடிகிறது.

இந்த "ஹேமாலயம்" சிறப்பு என்னவென்றால் ஒரு சிறந்த புதினத்தைப் படிக்கும் உணர்வை ஏற்படுத்துகிறது.

எத்தனை செய்திகள்! முதல் சில பக்கங்கள் படிப்பவர்களை 'அடுத்து என்ன? அடுத்து என்ன? என்று அறியத் துடிக்கவைக்கிறது. டாக்டர். ஹேமா சின்னிகிருஷ்ணன் கூறிய தன் வரலாற்றைத் தொகுத்து எழுத்து வடிவம் கொடுத்த ஆசிரியர் எஸ். பால அமுதாவை பாராட்ட வேண்டும்.

பெற்றோர்களுக்குச் சிறந்த மகளாக, கணவருடைய சொற்படிக்கேட்டு அவரை ஊக்குவித்துத் தானும் சிறப்பாக வாழ்ந்த மனைவியாக, சிறந்த தொழிலதிபர்களைப் பெற்றெடுத்தத் தாயாக, விளங்கும் டாக்டர். ஹேமா சின்னிகிருஷ்ணனின் தன் வரலாற்றைப் பற்றியும், எழுதப்பட்டுள்ள இந்த 'ஹேமாலயம்', புத்தகம் அல்ல, பொக்கிஷம்!

# ‘வெற்றிச் சரித்திரம் இந்தப் புத்தகம்!’

‘சொல்வேந்தர்’ சுகி சிவம்

**போ**தனை செய்ய எல்லோருக்கும் ஆசைதான். ஆனால் சோதனைகளையும் வேதனைகளையும் சாதனைகளாக ஆக்கியவருக்குத்தான் அதற்கான உண்மையான தகுதி உண்டு.

இந்த அளவுகோலை வைத்துப் பார்த்தால் ஹேமா சின்னிகிருஷ்ணன் ஊருக்கு அறிவுரைக்க உண்மைத் தகுதி உடையவர். எளிய குடும்பப் பெண்ணாக வாழ்வை வரவேற்று கணவரின் நிழலில் ஒதுங்க நினைத்த ஒருவரை விதி வெயிலுக்குக் கொண்டுவந்துவிட்டது. அவரே நிழல் உண்டாக்கி, பலருக்கு நிழல்தரும் ஆற்றல்தரும் பிள்ளைகளை உருவாக்கி, கணவரின் கனவுகளை நனவாக்கி பூரண சாதனையாளராக வாழ்கிறார்.

ஒரு நெருப்பின் நேர்மை அவரிடம் இருந்தமைக்கு இந்நூலில் உள்ள ஒரு சம்பவம் சாட்சி சொல்லும். கணவர் இறந்த பிறகு அவருக்குக் கடன் கொடுத்தவர்கள் “இவ்வளவு பணம் பெற்றார்” என்று சொன்னபோது “அத்தாட்சி ஏதும் உண்டா?” என்று கேட்கவில்லை. என் கணவர் பெரிய மனிதர். அவருக்குக் கடன் கொடுத்தவர்கள் கௌரவம் கருதி எழுதி வாங்கி இருக்கமாட்டார்கள். எனவே யார் என்ன சொன்னார்களோ அதை அப்படியே ஒப்புக்கொண்டேன்” என்கிறார். எவ்வளவு கண்ணியமான எண்ணம் இவருக்கு என்று மதிப்பு தோன்றுகிறது.

போராட்ட சூறாவளிகளுக்கிடையே லட்சியங்களையும் யதார்த்தத்தையும் புரிய வைத்தபடி பிள்ளைகளை ஆளாக்கிய லட்சியத் தாயாகவும் அவர் உருவான கதையை இந்தப் புத்தகம் அருமையும் ஆர்வமும் குறையாமல் சொல்கிறது.

ஷாம்பு சரித்திரத்தில் சாதனை நிகழ்த்திய இந்தப் பெண்மணி மகனை அப்பாவின் ஆராய்ச்சியில் ஈடுபடச் செய்ததும்.. அங்கே சற்றே கண்ணயர்ந்த மகனை "உனக்காக நான் தயாரித்து வைத்திருக்கும் இந்த ஃபைலை படி" என்று அப்பாவின் குரல் எழுப்பியதாக மகன் அதிசயம் அடைவதும் படிக்கிற நம்மைப் பரவசப்படுத்துகின்றன.

பள்ளிக்கூடம் நடத்துவது சுலபமான பணியே அன்று. ஆனால் அதனை உறுதிபடச் செய்து வெற்றியும் கண்ட சாதனையாளர் திருமதி ஹேமா சின்னிகிருஷ்ணன். பிள்ளைகளை பாபாவிடம் ஒப்படைத்துவிட்டேன்' என்று அம்மையார் சமர்ப்பணம் செய்து கவலைகளைப் புறந்தள்ளி கஷ்டங்களைக் கசக்கி எறிந்து மனோபலம், தெய்வபலம், ஆத்மபலம் மூலம் மாபெரும் உயரம் தொட்ட தம் வாழ்வை மிகமிக அழகாக இந்நூலில் படம்பிடிக்கிறார் எஸ். பால அமுதா அவர்கள்.

வாழ்க்கை வரலாறு என்பதையும் தாண்டி சுவைமிக்க நாவல் மாதிரி புத்தகம் போகிறது. உதாரணம் பூனைப்பாட்டி பற்றி ஒரு பகுதி. படித்துப் பாருங்கள். வாசகர்களை ஆச்சரியப்படுத்தும் அந்தச் சம்பவம். "முதலில் நமக்கு நம் மீது நம்பிக்கை இருக்க வேண்டும். அடுத்து பிறர் நம்பும்படி நடக்க வேண்டும். மற்றவர்களையும் நம்ப வேண்டும்". இதுதான் இந்த அம்மையாரின் வெற்றிச் சூத்திரம். அதை விளக்கும் வெற்றிச் சரித்திரம் இந்தப் புத்தகம்.

இன்று மிகப்பெரிய தொழில் சாம்ராஜ்ஜியங்களை உருவாக்கியுள்ள மிகச் சிறந்த பிள்ளைகளை உருவாக்கி உள்ள அன்னையார், வாழ்க்கை தன்னை எப்படி உருக்கி உருவாக்கியது என்பதை நூலாக்கி இருப்பது பலருக்கும் பயன்படும் விஷயம். படித்து உயரும்படி பலருக்கும் சொல்கிறேன். ஹேமா அம்மையாரைப் பாராட்டி மகிழ்கிறேன்.

# படிப்பவர்களுக்கு பரவசம் கிடைக்கும்...

முனைவர் அரங்க. இராமலிங்கம்
பேராசிரியர் மற்றும் தலைவர் – தமிழ் மொழித் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்

உறுதிகொண்ட நெஞ்சினாய் வா! வா! என்ற மகாகவி பாரதியாரின் வைர வரிகளுக்கு இலக்கியமாய் வாழ்ந்தவரின் வரலாறுதான் இந்நூல். தன் வரலாற்றினைத் (சுயசரிதை) தகவல் களஞ்சியமாகவும் ஒரு நாவல் போலவும் தர முடியும் என்பதற்கு இந்நூலே சான்று. நிர்வாகியாக, நெஞ்சுறுதி கொண்டவராக, எந்நிலையிலும் தன்னிலை தாழாதவராக அதே நேரத்தில் மனிதநேயம் மிக்கவராக வாழ்ந்தவரின் வரலாற்றுச் சாசனம் இந்நூல்.

டாக்டர் ஹேமா சின்னிகிருஷ்ணன் மிகச்சிறந்த நிர்வாகியா? அன்புத்தாயா? பள்ளியின் தாளாளரா? மனிதநேயம் ம்ாக்கவரா? என்ற வினா இந்நூலைப் படித்து முடித்தபோது என்னுள் எழுந்தது. அதற்கு எனக்குக் கிடைத்த ஒரே விடை இவர் அனைத்து ஆற்றல்களையும் ஒருங்கே பெற்ற அன்னையார் என்பதுதான்.

இந்தியாவில் முதன் முதலில் ஷாம்புவை சாஷே தொழில்நுட்பத்தில் புகுத்தி இமாலயப் பெரு வெற்றியைப் பெற்றவர் டாக்டர் ஹேமா சின்னிகிருஷ்ணன். அவர்களின் சிந்தனைகள் இந்நூலில் பொதிந்துள்ளன.

இந்தப் புத்தகம் பல இடங்களில் படிப்பவர்களைப் பரவசத்துக்கு உள்ளாக்குகிறது. தொகுத்தவரின் நடை அத்தனை அற்புதம்.

புட்டபர்த்தி சாய்பாபாவிடம் இவர் கொண்டிருந்த அசைக்க முடியாத பக்தியும் கணபதியையே (பிள்ளையார்) தன் மூத்த பிள்ளையாக ஏற்றுக்கொண்ட அன்பும், அவருக்குத் தன் வீட்டின் நுழைவாயிலில் கோயில் கட்டிய திறமும் படிப்பவரை மெய்சிலிர்க்க வைக்கின்றன.

அம்மாவுக்கு நாங்கள் சற்றும் இளைத்தவர்கள் அல்ல என்பதை பிள்ளைகளும் தங்கள் நினைவுகளை எழுத்து வடிவில் இந்நூலில் பதிவு செய்திருக்கிறார்கள். புலி எட்டடி பாய்ந்தால் அதன் குட்டி பதினாறு அடி பாயும் என்பார்கள். ஆனால் இந்த ஆறு செல்வங்களும் 16 அடி அல்ல 32 அடி பாய்ந்திருக்கின்றனர்.

அன்னை ஓர் ஆலயம் என்பார்கள். ஹேமா என்றால் பொன். ஹேமலதா என்றால் பொற்கொடி என்று பொருள். ஹேமாலயம் என்றால் பொற்கோயில் எனக் கூறலாம். இப்பொருள் உலகியலுக்கும் பொருந்தும். மெய்யியலுக்கும் பொருந்தும். டாக்டர் ஹேமா சின்னிகிருஷ்ணன் அவர்களின்அயரா உழைப்பால் நெஞ்சுறுதியால் புகுந்த வீட்டைப் பொன்கொழிக்கும் ஆலயமாக மாற்றியிருக்கிறார் என்பதே உண்மை.

# வள்ளலாரின் கருத்தோடு அன்னையை வாழ்த்துகிறேன்

**என**து பதினைந்து ஆண்டு கால நெருங்கிய ஆன்மிக நட்புறவாகத் திகழும் அன்புத் தாய் திருமதி ஹேமா அவர் களின் 80வது ஆண்டு பிறந்த நாளில் அவர்களது நீங்காத நினைவுகளைப் படித்தேன். படித்ததைவிட பல பேருண்மைகளைக் கற்று உணர்ந்தேன் என்று கூறலாம். அவரது வாழ்க்கையே நமக்கு ஒரு கல்வி நூலாக அதில் காணக் கிடைக்கிறது.

மேல்மட்ட மக்கள், நடுத்தர மக்கள், கீழ்மட்ட மக்கள் என்று அனைவரிடமும் வாழ்க்கையின் நேர்மைகளைக் கற்றுக்கொண்டு வல்லமையான நன்மக்களைப் பெற்று தான் வளர்வதோடு சமுதாயமும் வளர வேண்டும் என்று கருதியவர் அன்னை.

இல்லற ஞானாம்பாளாகத் திகழும் அன்னை, குழந்தை வளர்ப்பில் பிள்ளைகளுக்கு கெட்டவழி தெரியாவிட்டால் நல்ல வழியும் தெரியாது என்று கூறி அவர்களுக்கு கெட்ட வழிகளையும், அதன் விளைவுகளையும் உணர்த்தித்தான் ஆக வேண்டும் என்கிறார். இது பெற்றோர் சொல்லும் கருத்துக்களை பிள்ளைகள் எடுத்துக்கெனாள்ள வேண்டும் என்பதை உணர்த்துகிறது.

அம்மாவின் வழிச்சுவடுகளைப் படித்து நாமும் அம்மா ஹேமலதாவைப் போல் நல்லவற்றை மதிப்போம்.

எண்பதோ, நூறோ, நூற்றி இருபதோ வயது ஒரு தடையல்ல எனும்படி வாழ்ந்து வளம் பல கண்ட அம்மையாரின் காலத்தில் நானும் வாழ்கிறேன் என்ற பெருமை உணர்வுடன் 'எல்லாம் செயல்கூடும்' என்ற வள்ளலாரின் கருத்தோடு அன்னையை வாழ்த்துகிறேன்.

தயவுடன்

**சாது சிவராமன்**

# பக்குவ வாழ்வின் பாடங்கள்

புத்தகம், தன்னை கையில் எடுப்பவர்களுக்கு அறிவையும், அனுபவத்தையும் கொடுக்கிறது. ஹேமா அன்னையின் வாழ்வும் ஓர் அரிய புத்தகத்தைப் போன்றதுதான். அந்த வகையில் உலக புத்தக தினமும் ஹேமா அன்னையின் பிறந்த நாளும் ஒன்றாக அமைந்து இருப்பது அதிசயமே.

ஹேமா அன்னையின் இன்றைய வெற்றிக்குப் பின்னால் அவர் எதிர்கொண்ட பெரும் போராட்டங்கள் –

பள்ளிகளை உருவாக்கி, அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்த மாணவர்களை உருவாக்கியது –

குற்றம் பார்க்கின் சுற்றமில்லை என்ற முதுமொழியில் அன்னை காட்டிய பக்தியும் மதிப்பும் –

சிக்கலின்போது தைரியத்தை விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டதில் இருந்து நான் கற்றுக்கொண்டது –

செயல்திறன் மற்றும் உருவாக்குதல் மூலம் அவர் மேற்கொண்ட பல்வேறு செயல்பாடுகள் –

செல்வம், சாதனை, சோதனை, பெயர், புகழ் என்று உச்சம் நீச்சம் எது வந்தாலும் தன்னுடைய சமநிலைப்போக்கிலிருந்தோ எளிமையிலிருந்தோ என்றுமே முரண்படாதது –

சங்கடங்கள், பிரச்னைகள், இடர்பாடுகள் ஏற்படும்போது அசுர வேகத்தில் இயங்குவதுதான் வெற்றிக்கு வழி என்று செயல்பட்டது –

பொதுவாழ்விலும் குடும்ப வாழ்விலும் ஒன்றுக் கொன்று முரண்படாமல் இரண்டிலுமே நிறைவாக வாழ்ந்தது –

ஹேமா அன்னையின் தவ வாழ்வு அவர்களது குழந்தைகளுக்கு வரலாற்றுச் சாதனைகள் படைக்கப் பாடமாக அமைந்தது –

சித்தரும் வித்தகரும் ஒருமித்து சொன்ன கருத்தான 'தன்னை அறிதல்' பணியில் தன்னை முழுமையாக அறிந்துகொண்டு, தன் செயல்கள், வெற்றிகள் யாவுமே தன்னை இயக்கி ஆளும் ஓர் அபூர்வ சக்தியாக அமைந்த ஹேமா அன்னையின் வாழ்வு எனக்குக் கிடைத்த பாடங்கள்.

**எஸ். பத்மநாபன்**
உதவி நிகழ்ச்சி தயாரிப்பாளர்
பொதிகை தொலைக்காட்சி, சென்னை

# ஒரு தெய்வத் தாயின் சத்திய சோதனை

'திருவாசகத்துக்கு உருகாதார் ஒருவாசகத்துக்கும் உருகார்' என்பது திருவாசகச் சிறப்பு. அன்னை ஹேமலதா அவர்கள் எழுதியுள்ள இந்த நூலை வாசித்தபோது அடியேனும் பல இடங்களில் கண்ணீர் உகுத்தது உண்மை.

வார்த்தைகளின் வரிகள் உயிர்மையோடு ஈர்த்தன. கண்களில் ஒற்றிக்கொண்டு தான் முடித்தேன். சுயசரிதை எல்லோராலும் எழுத முடியாது. பொதுநலத்தையே சுயநலமாகப் போற்றுவோர் மட்டுமே செய்யக்கூடிய உயரிய பணி அது.

ஆணுக்குப் பின்னால் மட்டுமல்ல, ஒவ்வொரு குடும்பத்தின் வெற்றிக்குப் பின்னாலும் ஒரு பெண்தான் இருக்கிறாள் என்ற பேருண்மையை இந்நூலைப் படித்தபோதுதான் உணர்ந்தேன்.

சராசரிப் பெண்ணான ஹேமலதாவின் வாழ்க்கையில்தான் எத்தனை எத்தனை வளைவுகள், வீழ்ச்சிகள், சுழற்சிகள், ஏற்ற இறக்கங்கள், ஏமாற்றங்கள், தடுமாற்றங்கள்... அத்தனையும் சமாளித்து மீண்டுவந்து அதிசய சாதனை புரிந்தது அதிசயம்.

தம் பிள்ளைகள் வேலைக்குப் போவதைவிட, ஆயிரமாயிரம் பேருக்கு வேலை தரும் அதிபர்களாக மாற வேண்டும் என்பதே அன்னையின் கனவு! சுயநலத்தில் பிறந்த பொதுநலக் கனவுகள் அப்படியே

நனவுகளாகின்றன! தன்னையும் பிறரையும் நம்பி, அதன்படி நடத்தலும் வேண்டும் என்று வாழ்ந்து காட்டியிருக்கிறார்!

அன்னையின் அனுபவங்கள் அனைத்திலும் நமக்குப் பாடங்கள் உண்டு. அவர் கற்றுக் கொண்ட பாடங்களை கற்கண்டுத் துகள்களாக்கி நமக்குக் கொடுத்திருக்கிறார்.

**கே.எஸ். இளமதி**

எழுத்தாளர் – யோகா பயிற்சியாளர்

# ஊனுடம்பை ஆலயமாக்கிய மானுடமே !

தன் பெயரே விலாசமாவது அரிது!
தன் ஊனுடம்பை ஆலயமாக்கிய மானுடம் அதனினும் அரிது! அரிது!
அரிதாய் தோன்றிய எம் அன்னையே! ஹேமாவே! ஹேமாலயமே!
உம் மனம் சொல் செயல் லயமானதால் ஆலயமானாயோ!
கள்ளப் பலன்களை கடந்து அந்தராத்மாவை தரிசித்த அன்னையே!
'எந்தரோ மகானுபாவ' என போற்றுவர் உன்னையே!
மந்திரம் ஜபித்து மாயப்பிறவியறுத்த மஹாசக்தியே!
நீ பாடும் பாடல்கள் ஆலயமணியோசை!
நீ கற்ற வித்தைகள் கோடி! பெற்ற செல்வங்கள் பலகோடி!
நாடி வந்தோர் நலன் காப்பதில் உனக்கு நிகராய் எவரேனும் வருமோடி!
ராஜமுந்திரி தந்த ராஜரிஷியே!
கடலூரில் பகுந்த கோதாவரியே!
பெரிதாய் சாதித்த பெத்தாபரத்து பெரிய பாப்பாவே!
முத்திரை விலக்கிய சித்திரைப் பெண்ணே!
'Sardras'ன் சரித்திர நாயகியே!
'Siswarachi' யின் சிகரமே!
எண்பதிலும் உன்னில் எழுவது இருபதின் உற்சாகம்!
ஏழு தலைமுறையின் எழுச்சி நாயகியே!
ஏழைகளை சிரிக்க வைத்து இறைவனைக் காணும் தலைவியே!
தரணி போற்றும் தாயே!
இன்னல்களை இன்முகத்தோடு எதிர்கொள்ளும் இரும்பு இதயமே!
வாடிய பயிரைக் கண்டபோது வாடிய வள்ளலாரே!
நடுநிலையாய் நின்று யார் பக்கமும் சாயாத பாபாவே!
ஆதாரங்கள் ஆறு பெற்றாலும்
சாதாரணமாய் வாழ்பவளே!

naturalsயாய் மயில் நடமாடும் எழில் கொஞ்சும்,

மிகு சோலையில்

கர்ப்பரக்ஷாம்பிகையாய், 'Lakshmi'யாய்

சகல ஐஸ்வர்யங்களையும் தந்து 'Kare' எடுத்து எல்லோருக்கும்

'நிவாரண'மளித்து

VIDYAA AN தானம் செய்து

யின் யோகியாய் Velvette மெத்தையில் வாழும் அன்னையே!

நீ வணங்கும் பிள்ளையாரும், வேப்பமரமும்

வேண்டி தவம் செய்யுமே எங்களுக்காக!

சோதனைகளை வென்று எங்களை சாதனையாளர்களாக்கினாய்!

உலகம் எங்கள் கையில்!

நாங்களோ உன் காலடியில்!

தாயாய், தந்தையாய் ஞான குருவாய்

எம்மை ஆட்கொண்ட பராசக்தியே!

முகங்கள் ஆறும் ஒன்றாக

பன்னிரு கரங்களையும் குவித்து

உம்மைப் போற்றுகிறோம்! வணங்குகிறோம்! வழிபடுகின்றோம்!

மாலதியுடன் C.K.அசோக்குமார்

திருவண்ணாமலை



# பொருளடக்கம்

# 1



## மின்னலாய் உதித்த சாதனைப் பொறி

**40** ஆண்டுகளுக்கு முன்னால் ஒருநாள்! இரவு நேரம். நானும், கணவர் சின்னிகிருஷ்ணனும் கடலூரில் உள்ள வீட்டிலிருந்து திருப்பாதிரிப் புலியூர் ரயில் நிலையத்தை நோக்கி நடந்துகொண்டிருந்தோம். சென்னைக்குச் செல்ல ரயிலை பிடிக்க வேண்டும். என் கையில் கைப்பை மட்டும். அவர் துணிகள் அடங்கிய பையை வைத்திருந்தார். அந்த நாள்... அந்த ரயிலில் நடக்கும் சம்பவம் எங்கள் குடும்பத்தின் புகழை இந்திய அளவுக்குக் கொண்டுசெல்லும் என்று நான் நினைத்துக்கூடப் பார்த்திருக்கவில்லை.

– ராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ் ரயில் பிளாட்பாரத்தில் வந்து நின்றது. நாங்கள் இருவரும் வேகவேகமாக ஏறி, எங்களுக்கு 'ரிசர்வ்' செய்யப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தோம். அன்று ஏனோ வழக்கத்தை மீறி சீக்கிரமாகவே தூங்க வேண்டும் என்ற எண்ணம் வந்தது. உடம்புக்கும், படுத்தால் தேவலை என்பது போல் தோன்றியது. என்னைப் போன்ற மனநிலையில் பலர் இருந்ததால், லைட்டை அணைத்துவிட்டு, இருந்தபடியே கண் மூடினார்கள். நான், கணவரிடம் இருந்த பேக்கை வாங்கி சீட்டுக்கு அடியில் தள்ளிவிட்டு கண் மூடினேன். அப்படியே தூங்கிவிட்டேன்.

சில மணிநேரம் கடந்திருக்கும். எங்கள் கம்பார்ட்மெண்ட்டில், ஏதோ ஒரு சம்பவம் நடக்கப்போவது போலவும், எங்கள் பையைத் தூக்கிக்கொண்டு யாரோ ஓடுவது போலவும் என் உள்ளுணர்வு சொன்னது. திடுக்கிட்டு விழித்து, கண் திறக்கவும் ஒருவன், எங்கள் இருக்கை அருகில் இருந்து ஓடுவதைக் கண்டேன்.

'லைட்டை போடுங்க' என்று கத்தினேன். அவ்வளவு அவசரத்தில் யாராலும் லைட்டை போட முடியவில்லை. வெளியே தெரிந்த நிலவு வெளிச்சத்தில் என் இருக்கைக்குக் கீழே பார்த்தேன். பையைக் காணவில்லை.

அதற்குள் என் கூச்சல் கேட்டு, பெட்டி முழுக்க ஆங்காங்கே, அவரவர் லைட்டை போட...! வெளிச்சத்தில் அவன் என் பையைத் தூக்கிக்கொண்டு ஓடுவது தெரிந்தது. அவன் குளிருக்கு போர்த்துவதுபோல் தலையை கம்பளியால் மூடியிருந்தான். 'அதோ திருடன் பிடியுங்கள். பிடியுங்கள்...' என்று பலர் கூச்சலிட, ரயில் வேகமாகச் சென்றுகொண்டிருந்தது. அவனால் கீழே குதித்து தப்ப முடியவில்லை. அதற்குள் நாலைந்து பேர் சேர்ந்து அவனைப் பிடித்துவிட்டார்கள்.

நான் அவன் அருகில் சென்றேன். பிடித்த வேகத்தில் சிலர் அவனை அடித்தார்கள். பலர் திட்டினார்கள். கம்பளியை விலக்கிப் பார்த்ததும் அவன் 15 வயது சிறுவன் என்பதை உணர்ந்தேன். அடி, அவமானத்தோடு கையில் இருந்த பையை என் முகம் பார்த்து என்னிடம் நீட்டினான். வாங்கிக்கொண்டேன்.

'இந்த வயதிலே திருடுறான். இவனை இப்படியே விட்டால் எதிர்காலத்தில் பெரிய கொள்ளைக்காரனாக மாறிடுவான். அடுத்து வர்ற ஸ்டேஷனில் இவனை இறக்கி, போலீஸ்கிட்ட ஒப்படைத்துவிடுவோம்' என்று பலர் சொன்னார்கள்.

நான் அந்தச் சிறுவனை கூர்ந்து பார்த்தேன். கிழிந்த உடை, பரட்டைத் தலை, வறுமை நிலை கொண்ட அவனது கண்களில் பசி கூடாரம் போட்டிருந்தது.

'ஏம்பா இந்த காரியம் பண்ணினே?' என்றேன்.

'பசி...! இரண்டு நாளா சாப்பிடலை...' என்று அவனிடமிருந்து பதில் வந்தது. ஆனாலும் எல்லாரும் அதே கோபத்துடன் அவனை முறைத்துக்கொண்டும், அடிக்க கையை ஓங்கிக்கொண்டும்தான் இருந்தனர்.

'என் பைதான் கிடைச்சுட்டுதே...! பசியால ஏதோ விவரம் இல்லாமல் திருடிட்டான் விட்டுடுவோமே...' என்று எல்லாரையும் சமாதானப்படுத்தி, அவரவர் இருக்கைக்குப் போகச் சொன்னேன். எல்லாரும் போய் அமர்ந்ததும், என் கையில் இருந்த 100 ரூபாயை அவனிடம் கொடுத்தேன். வாங்க யோசித்தான். கையில் திணித்து 'ஏதாவது வாங்கிச் சாப்பிடு. இனி திருடாதே! உழைத்துப் பிழைக்கிற வழியைப்பார்' என்று வாஞ்சையுடன் சொன்னேன். பணத்தை வாங்கிக் கொண்டவன் கண்களில் நீர் எட்டிப் பார்த்தது. போய்விட்டான்.

இருக்கையில் அமர்ந்து கண்களை மூடினேன். தூக்கம் வரவில்லை. அவன் கண்ணீர் முகமே, என் மனக் கண்களுக்குள் வந்து நின்றது. அவன் ஏதோ ஒரு விஷயத்தை எங்களுக்கு உணர்த்த, இப்படி வந்து போயிருக்கிறான் என்பது புரிந்தது. ஆனால் அந்த விஷயம் என்னவென்று அப்போது எங்களால் உணர்ந்து கொள்ள முடியவில்லை.

அதிகாலை 5 மணி இருக்கும், ரயில் எழும்பூர் ரெயில் நிலையத்தை அடைந்திருந்தது. இறங்கி அங்கிருந்து ஆட்டோ பிடித்து துணிகள் அடங்கிய அந்தப் பையை எடுத்துக்கொண்டு சுதா ஹோட்டலில் இறங்கி அங்கே தங்கினோம்.

என் கணவர் குளித்துவிட்டு வந்தார். அவர் குளித்துவிட்டு தலை துவட்டிய பின்பு தலையில் எண்ணெய் தேய்க்கும் பழக்கம் கொண்டவர். அதனால் என்னைப் பார்த்து 'தேங்காய் எண்ணெய் எடுத்திட்டு வந்தியா?' என்றார். தேங்காய் எண்ணெய் இருந்த கண்ணாடி பாட்டிலை எடுத்து பைக்குள் வைத்தது நினைவுக்கு வந்தது.

பையைத் திறந்து பார்த்தேன். எண்ணெய் பாட்டில் உடைந் திருந்தது. பாட்டில் உடைந்து வெளியேறிய எண்ணெய் கிட்டத்தட்ட பையில் இருந்த பெரும்பாலான துணிகளை நனைத்திருந்தது.

சிறுவன் அந்தப் பையை இரவில் தூக்கிக்கொண்டு ஓடினான் அல்லவா? அப்போது ரயில் பெட்டியில் பை மோதியோ, இடித்தோ அடிபட்டு உள்ளே இருந்த பாட்டில் உடைந்திருக்கிறது.

'கல்யாண வீட்டுக்குச் செல்ல வேண்டும். சலவைத் துணிகளில் எல்லாம் எண்ணெய் பட்டுவிட்டது. என்ன செய்வது?' என்று என் கணவர் அப்படியே, படுக்கையில் உட்கார்ந்து எதையோ யோசித்துக்கொண்டிருந்தார்.

நான் அமைதியாக அமர்ந்திருந்தேன். யோசித்துக்கொண்டிருந்த கணவர் அப்போது இந்தக் கதையை எனக்குச் சொன்னார்.

ரொம்ப காலத்துக்கு முன்பு வெளிநாடு ஒன்றில் புத்தர் சிலை போன்றிருந்த களிமண் சிற்பம் ஒன்றை வைத்து புத்தபிக்குகள் வழிபட்டுக் கொண்டிருந்தார்களாம். அந்தச் சிற்பம் மிகப் பெரியது. ஆனால் சிறிய அறை ஒன்றுக்குள் காலங்காலமாக வைக்கப்பட்டிருந்திருக்கிறது. பழைமை வாய்ந்த அதனை வழிபட ஏராளமான பக்தர்கள் பல நாடுகளிலிருந்து வந்து குவிந்துகொண்டிருந்ததால், புத்தபிக்குகள் எல்லோரும் ஒன்று கூடி, பெரிய அரங்கு ஒன்றை அருகில் கட்டி, அதற்குள் களிமண் புத்தரை வைக்கத் திட்டமிட்டார்கள்.

இலகுவான மண் சிற்பங்களை ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு மாற்றுவதில் தேர்ச்சி பெற்ற தொழில்நுட்ப நிபுணர்கள் வரவழைக்கப்பட்டார்கள்.

மிகக் கவனமாக சிற்பத்தை கிரேன் மூலம் தூக்கி நகர்த்தினார்கள். அப்போது யாரும் எதிர்பாராத விதத்தில் அந்தப் பெரிய சிற்பம் உடைந்து, உருக்குலைந்து நொறுங்கி விழுந்து மண் குவியல்போல் ஆகிவிட்டது.

அதைப் பார்த்து பிக்குகள் அனைவரும் கலங்கிப் போனார்கள். அடுத்து என்ன செய்வது என்று தெரியாமல் அப்படியே செயலிழந்து நின்றார்கள்.

தலைமை பிக்கு மட்டும் கலங்கவில்லை. அமைதியாக நடந்து அந்த மண் ஓடு குவியலுக்கு அருகில் வந்தார். தன் கைகளால் அங்கும் இங்குமாக ஓடுகளை அகற்றினார். உள்ளே கிடந்த ஒரு தங்க புத்தர் விக்ரகம் அவர் கண்ணில் பட, அதை வெளியே எடுத்தார். தன் தோளில் கிடந்த துணியால் துடைத்தார். 'இதோ பாருங்கள்... எவ்வளவு அற்புதமான தங்க புத்தர் விக்ரகம்' என்றார். எல்லோரும் ஆச்சரியத்தில் அவர் அருகில் ஓடி வந்தார்கள்.

அப்போது அந்த தலைமை பிக்கு, 'வெகு காலத்துக்கு முன்பு, தங்க விக்ரகங்களை குறி வைத்து சில வெளிநாட்டு மன்னர்கள் நம் நாட்டின் மீது படையெடுத்து வந்தார்கள். அவர்கள் கண்களில் இந்த விக்ரகம் பட்டுவிடக் கூடாது என்பதற்காக, இதன் மீது களிமண்ணை பூசி வைத்திருக்கிறார்கள். அடுத்தடுத்து வந்த பிக்குகள் அதையும் ஒரு வழிபாட்டு முறை என்று கருதி மென்மேலும் களிமண்ணை அதன் மீது பூச, அது ஒரு களிமண் புத்தர் சிற்பம் போல் பெரிதாகிவிட்டது. இப்போது அது உடைந்ததால்தான் உள்ளே இருந்த இந்த அற்புத தங்க விக்ரகம் நமக்குக் கிடைத்தது' என்றார்.

இந்தக் கதையை எனக்குச் சொன்ன என் கணவர் 'இதன் மூலம், நமக்கு உணர்த்தப்படும் வாழ்வியல் விஷயம் என்னவென்று தெரியுமா?' என்று என்னைப் பார்த்துக் கேட்டார்.

''வாழ்க்கையில் விரும்பத்தகாத சம்பவம் ஒன்று நடந்தால், உடனே கலங்கி துக்கப்பட்டு மனம் குழம்பிப் போய்விடக் கூடாது. அப்படி கலங்கிப்போனால் அந்தச் சம்பவம் உணர்த்தும் உண்மையை (நன்மையை) நம்மால் புரிந்துகொள்ள முடியாது. கலங்காமல் அமைதியாக அதை ஆராய்ந்து பார்த்தால்தான் தங்க விக்ரகம் போல் அது உணர்த்தும் உண்மையை நம்மால் புரிந்துகொள்ள முடியும். மனித வாழ்க்கையில் நடக்கும் எந்த சம்பவமும் கவலைக்குரியதல்ல.

அது உணர்த்தும் நிஜத்தை நாம் நிதானமாகப் புரிந்துகொள்ள முன் வரவேண்டும்'' என்று விளக்கமாக என் கணவருக்குப் பதில் அளித்தேன்.

அவர் சிரித்துக்கொண்டே, ''திருடன் வந்ததும், தேங்காய் எண்ணெய் பாட்டில் உடைந்ததும் ஏதோ ஒரு புதிய விஷயத்தை நமக்கு உணர்த்த விரும்புகிறது'' என்று அமைதியாகச் சொன்னார்.

சிறிது நேரத்திலே அந்த புதிய விஷயமான ரகசியப் பொறி எங்கள் மூளையில் மின்னல்போல் உதித்தது.

அந்தக் காலகட்டத்தில் என் கணவர் நிறைய 'ரீ பேக்கிங் பிசினஸ்' செய்து கொண்டிருந்தார். மக்கள் அன்றாடம் பயன்படுத்தும் ஒவ்வொரு பொருளும் அப்போது அதிக எடையுடன், அதிக விலையுடன் விற்பனைக்கு வந்துகொண்டிருந்தன. அவற்றை சாமான்ய மக்களும் வாங்கி தினமும் பயன்படுத்தும் விதத்தில் சிறிய சிறிய பொட்டலங்களாக்கி விற்பது என் கணவரின் திட்டமாக இருந்தது. போரிக் ஆசிட், சால்ட், சல்பா பவுடர், அரோரூட் மாவு போன்றவற்றை மொத்தமாக வாங்கி அவற்றை எல்லோரும் பாதுகாப்பாக, எளிதாகப் பயன்படுத்தும் விதத்தில் சிறிய சிறிய பாக்கெட்களில் அடைத்து விற்பனை செய்தார்.

அதை வைத்துதான் எங்களுக்குள் அந்தப் பொறி உருவாகியது.

'நாம் நிறைய ரீ பேக்கிங் பிசினஸ் செய்கிறோம். அது எல்லாருக்கும் பயனுள்ளதாக இருக்கிறது. பயணம் செய்யும் எல்லாரும் எங்கு போனாலும் கண்ணாடி பாட்டில்களில்தானே என்ணெய்யைத் எடுத்துச் செல்ல வேண்டியிருக்கிறது? நமக்கு ஏற்பட்டதைப் போன்று பலருக்கும் பாட்டில் உடைந்து போகவும் செய்கிறது. அதனால் எண்ணெய்யையும் 'சாஷே'யில் பொட்டலமாக்கிக் கொடுத்தால் எல்லாருக்கும் சவுகரியமாக இருக்குமே' என்று சிந்தித்தோம்.

என் கணவர் எப்போதும் சிந்தித்துக்கொண்டுதான் இருப்பார். திடீரென்று ஓர் ஐடியா அவரது விஞ்ஞான மூளையில் உதித்து,

அதை அவரது மனது ஏற்றுக்கொண்டால், உடனே அவர் முகத்தில் எனக்கு மட்டுமே புரியும் விதத்தில் பளிச்சென்று ஒரு 'பல்பு' எரியும். இந்த 'சாஷே' ஐடியா வந்தபோது, அவர் முகத்தில் அந்த 'பல்பு' எரிந்தது.

அன்று சென்னையில் உறவினர் வீட்டுத் திருமணத்தை முடித்து விட்டு, கடலூருக்குத் திரும்பிய உடனே என் கணவர் தேங்காய் எண்ணெய் 'சாஷே' தயாரிப்பு பணிகளைத் தொடங்கிவிட்டார்.

அடுத்த சில நாட்களில் ஒருமுறை நானும் என் கணவரும் கடலூரிலிருந்து சென்னைக்கு காரில் வந்துகொண்டிருந்தோம். நாங்கள் இருவருமே சாலைப் பயணங்களில் ஒருபோதும் தூங்கமாட்டோம். வளவளவென்று பேசிக் கொண்டிருக்கவும் மாட்டோம். ஆனால் சாலையின் இருபக்கத்தையும் உற்று கவனிப்போம். பொறி தட்டியது போன்ற ஏதாவது விஷயங்கள் கண்களில் பட்டால், அதைப்பற்றி ஆழ்ந்து விவாதிப்போம்.

40 ஆண்டுகளுக்கு முன்னால், உலக நாடுகள், இந்தியாவை ஏழை நாடுகளுக்கு உதாரணமாக சொல்லிக்கொண்டிருந்தன. அதற்காக பரட்டைத் தலையுடன் தோன்றும் கிராமத்து மக்களின் படங்களைக் காட்டுவார்கள். கருகருவென்று இருக்க வேண்டிய தலைமுடி நிறம் மாறி, பொலிவிழந்து செம்பட்டை நிறத்துக்கு மாறி இருப்பதை ஏழைமையின் அடையாளமாக காட்சிப்படுத்துவார்கள்.

நாங்களும் அப்படிப்பட்ட கிராமத்து மக்களை சாலையின் இருபுறங்களிலும் பார்த்துக்கொண்டே வந்தோம். அப்போதே இன்னொரு காட்சியும் என் பார்வையில் விழுந்தது. கடைகளில் பளபளப்பான பாட்டில்களில், விதவிதமான வண்ணங்களில் அழகழகான ஷாம்பு பாட்டில்களை அடுக்கி வைத்திருந்தார்கள்.

ஒரு புறம், பரட்டைத்தலை மனிதர்கள்!

இன்னொரு புறம், அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் ஷாம்பு வகைகள்!

ஷாம்புகள் மக்களின் முடி பராமரிப்புக்குரியவை. வியர்வையால், சுற்றுப்புற மாசுவால், வேலை செய்யும்போது படியும் தூசால் தலை அழுக்காகிறது. பராமரிப்பு இல்லாத அந்த முடியில் படும் சூரிய ஒளி, முடியின் இயற்கை நிறத்தை மாற்றி செம்பட்டையாக்குகிறது. இதில் குறிப்பிடத்தக்க இன்னொரு விஷயம் என்னவென்றால், தலைமுடி தங்களது அழகுக்கும், கம்பீரத்துக்கும் அடிப்படையானது என்பதை எல்லா மக்களும் புரிந்து வைத்திருக்கிறார்கள். அதனால் தினமும் தலைக்குக் குளிக்கிறார்கள். தலையில் இருக்கும் அழுக்கைப் போக்கவும் செய்கிறார்கள். எப்படி என்றால், சருமத்திற்குப் போடும் சோப்பை அப்படியே தலை முடியிலும் போட்டுத் தேய்த்து, நுரை வரவைத்து கழுவிவிடுகிறார்கள்.

சருமம் என்பது வேறு. அதன் தன்மைக்கேற்ப குளியல் சோப்புகள் தயாரிக்கப்படுகின்றன. முடியின் கட்டமைப்பு, மண்டை ஓடு, மயிர்க்கால்கள் என்பதெல்லாம் வேறு! சருமமும் – தலைமுடியும் முற்றிலும் மாறுபட்ட வேறு வேறு விஷயங்களாக இருக்க இரண்டுக் கும் ஒரே சோப்பை பயன்படுத்துவது சரியானது அல்ல.

ஒரு புறம், கூந்தல் பாதிக்கப்படுவது நன்றாகவே தெரிகிறது.

மறுபுறம், அதற்குத் தீர்வான ஷாம்புகள் கடைகளில் பாட்டில்களாகத் தூங்கிக் கொண்டிருக்கின்றன. வசதி படைத்தவர்கள் சிலர்தான் அதை வாங்கிச் செல்கிறார்கள். விலை அதிகம். அதன் அளவும் அதிகம்.

‘இந்த ஷாம்புவையும், பரட்டைத்தலையுடன் தோன்றும் நமது மக்களையும் இணைக்க வேண்டும். ஏழை இந்தியா என்ற பெயரை மாற்ற வேண்டும்’ என்று நான் சிந்தித்துக்கொண்டு வந்தபோதே, என் கணவரின் மூளையில் அதற்கான திட்டமே உருவாகிவிட்டது.

ஷாம்புவை சாஷே ஆக்கும் மிக முக்கியமான முடிவை அப்போதுதான் எடுத்தார். ‘வெல்வெட் ஷாம்பு சாஷே’ திட்டம் அப்போதுதான் உருவானது. நாங்கள் தயாரித்த ‘பொட்டலம்’ ஷாம்பு, இந்தியாவிலே பொருளாதாரப் புரட்சியை ஏற்படுத்தியது. தென்னிந்தியாவில்

மிகப்பெரிய வளர்ச்சியை உருவாக்கியது. கடலூரை ஷாம்புகளின் நகரமாக்கியது. நாங்கள் ஏற்படுத்திய சாஷே பொருளாதாரப் புரட்சி, சர்வதேச அளவில் பல்கலைக் கழகங்களில் பாடமாக விவாதிக்கப்படவும் செய்தது.

ஆனால், அந்த வெற்றிக்காக எவ்வளவு கஷ்டப்பட்டோம்!

வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்த கதை ஆனது!

சாஷே என்ற கருவுக்கு செயல் வடிவம் கொடுத்த என் கணவர், ‘சாஷே’ பிறந்து வளர்வதற்குள் இறந்து போனார்.

நான் 6 குழந்தைகளின் தாய். எல்லாக் குழந்தைகளும் வளர்ந்து படித்துக்கொண்டிருந்தபோது கணவர் மரணம் அடைந்தது எங்களை அப்படியே கதிகலங்க வைத்தது. புதிய புதிய கண்டுபிடிப்புகளுக்காக நிறைய செலவு செய்து கணவர்பட்ட கடன்கள் கைம்பெண்ணான எனது கழுத்தை இறுக்கின.

‘இனி நம்ம ஹேமாவால் எதுவும் செய்ய முடியாது. ஆறு பிள்ளைகளோடு என்ன கஷ்டங்களை எல்லாம் அனுபவிக்கப் போகிறாளோ..?’ என்றபடி சில உறவுகள் புறக்கணித்தன.

சிலர் என் மீது இருந்த அளவு கடந்த அன்பால், ‘கணவர் வாங்கிய கடனுக்கும் தனக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்று கூறி தப்பித்துக்கொள்’ என்றார்கள்.

அதை எல்லாம் கேட்டுவிட்டு நான் என்ன முடிவு எடுத்தேன்? என் குழந்தைகளை எப்படி வளர்த்தேன்? நாங்கள் எப்படி வாழ்க்கையில் வெற்றிபெற்றோம்? என்பதை இனி அடுத்தடுத்த அத்தியாயங்களில், என் பூர்வீகத்தில் தொடங்கிச் சொல்லப் போகிறேன்.

# 2



## கடவுள் ஒருநாள் கனவில் வந்தார்

என் பூர்வீகத்தை இப்போது சொல்லப்போகிறேன். அதற்காக ஒரு சிறிய பயணம். சென்னையில் நான் வசிப்பது என் மகன் சி.கே.ரங்கநாதனின் கவின் குடிலில்! அங்கிருந்து நான் கடலூர் புறப்படுகிறேன்.

நீங்களும் வாருங்கள் அங்கே செல்வோம்...!

கடலூர், நான் என் கணவரோடு வாழ்ந்த இடம். இப்போதும் நான் வாழ்கின்ற இடம். 'சாஷே' புரட்சி நடந்த இடம் எல்லாம் அதுதான்.

சென்னையிலிருந்து கடலூர் சென்று, பீச் ரோட்டுக்குள் நுழைகிறேன். 'சி.கே.ஸ்கூல் ஆப் பிராக்டிகல் நாலெட்ஜ்' (C.K. School of Practical Knowledge) வளாகம் வரவேற்கிறது. என் நினைவுகள், கனவுகள் எல்லாம் நிஜமான அத்தனை நிகழ்வுகளும் அதன் உள்ளேதான் அரங்கேறின.

கார், வளாகத்தின் முகப்பைத் தொட்டுவிட்டது. முதலில் தெரிவது விநாயகர் கோயில்! இவரிடம் நிறைய ருசிகரமான விஷயங்கள் இருக்கின்றன. அவை அனைத்தும் நான் அனுபவித்த நிஜங்கள்!

அவற்றை எல்லாம் சொல்லித்தான் ஆக வேண்டும் என்பது என் விருப்பம். அவற்றை நீங்கள் நம்பலாம்! நம்பாமலும் போகலாம்! நீங்கள் சிரிக்கலாம்! சிந்திக்கவும் செய்யலாம் அது உங்கள் சாய்ஸ்.

பொதுவாக, நான் நாள் முழுவதும் வேலை பார்த்துவிட்டு ஆழ்ந்து தூங்கிவிடுவேன். பெரும்பாலும் கனவுகள் வராது. அப்படி இருந்த நான், குறிப்பிட்ட சில மாதங்களில் தொடர்ந்து ஒரு யானை என்னை விரட்டி வருவதுபோல் கனவு கண்டேன். நான் எவ்வளவோ பிராணிகளையும், விலங்குகளையும் பார்த்திருக்கிறேன். அவற்றில் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக யானை வந்து, ஏன் என்னை கனவில் துரத்த வேண்டும்?

ஒரு ஜோதிடரிடம் போய்க் கேட்டேன். பலன் சொன்னார். சில கோயில் குருக்களிடம் கேட்டேன். அவர்களும் பலன் சொன்னார்கள். எல்லாரும் ஒரே மாதிரியாக, 'ஒரு கோயில் கட்ட வேண்டிய பலன் உங்களுக்கு இருக்கிறது' என்று சொன்னார்கள். 'எந்த சாமிக்கு கோவில் கட்ட வேண்டும்?' என்ற கேள்வி எனக்குள் எழவில்லை. துரத்தியது யானை என்பதால், 'விநாயகருக்கு கோயில் கட்டுங்கள்' என்றார்கள். நான் கோயிலைக் கட்டிவிடலாம் என்ற முடிவை எடுக்க, குடும்பத்தில் உள்ள சிலர் 'கோயில் கட்டுவது அவ்வளவு எளிதான விஷயம் இல்லை. அதெல்லாம் நம்மால் கட்ட முடியாது' என்றார்கள்.

என்னைவிட வயதில் மூத்தவர்கள் தடை போட்டதால், அவர்களைவிட மூத்தவர் – முக்கியமானவரை வைத்து அந்தத் தடையை விலக்குவதுதானே சரியாக இருக்கும்? நேராக மறைந்த காஞ்சி மகாபெரியவரை சந்திக்கச் சென்றேன். கனவு, விருப்பம், தடை எல்லாவற்றையும் ஒன்று விடாமல் சொன்னேன். அவர் அமைதியாகக் கேட்டுவிட்டு தீர்க்க தரிசனமான குரலில் 'வலம்புரி விநாயகர் கோவில் கட்டு' என்றார். மகிழ்ச்சியோடு வீட்டுக்கு வந்தேன். அன்றே என்னைத் துரத்திய யானை திரும்பிப் போய்விட்டது. யானைக் கனவு மீண்டும் வரவே இல்லை.

கோயில் கட்டுவது என்றால் முதலில் இடம் தேவை. பின்பு பணம் தேவை. இடம் இருக்கிறது. ஆனால் அப்போது பணம் இல்லை. 'தெரிந்தவர்களிடம் நன்கொடை கேட்டால், ஓரளவு கிடைக்கும். கூடுதல் பணத்துக்கு கடன் வாங்கிக்கொள்ளலாம்' என்ற தீர்மானத்தோடு, தூங்கச் சென்றேன். மீண்டும் ஒரு கனவு.

எனக்கு சாட்டையடி தந்தது போலவும் – சுவைக்க கற்கண்டு தந்தது போலவும் இருபொருள் பொதிந்த கனவை அன்று இரவு கண்டேன். கனவில் ஒருவர் என்னிடம் 'உன் மகனுக்கு நல்லது செய்ய வேண்டும் என்றால் அதற்கு யாசகம் பெறுவாயா?' – என்று கேட்டது சாட்டையடி! அவரே தொடர்ந்து 'உன் மூத்த பிள்ளையாக என்னைத் தத்தெடுத்துக்கொள்' என்றார். அது எனக்கு கனவில் கற்கண்டாக இனித்த விஷயம். அதாவது, விநாயகர் கனவில் தோன்றி நன்கொடை வாங்காமல் கோயில் கட்டு என்று சொன்னதாகவும், அவரே தன்னை, எனது மூத்த குழந்தையாகத் தத்தெடுக்கச் சொன்னதாகவும் அந்தக் கனவு மூலம் உணர்ந்து கொண்டேன்.

நான் என் ஆறு பிள்ளைகளையும் வளர்த்ததைப் பார்த்து பொறாமையோ என்னவோ (சும்மா பேச்சுக்கு சொல்கிறேன்) விநாயகர் என்னிடம் "என்னை உன் மூத்த மகனாக ஏற்றுக்கொள்வாயா?" என்று கேட்டாரோ என்னவோ? நானும் சரி என்று சொல்லிவிட்டேன். கடவுள் ஆசையை நிறைவேற்றி வைக்க வேண்டியது மனிதர்களின் கடமைதானே!

கோயில் கட்டத் திட்டமிட்டேன். எவ்வளவோ பணக் கஷ்டத்துக்கு மத்தியிலும் வேலை மளமளவென நடந்தது. அந்த வலம்புரி விநாயகர் ஆலயத்தை 1989–ல் கட்டி முடித்தோம்.

என் ஆறு பிள்ளைகளுக்கும் இன்று ஆயிரம் வேலைகள். எப்போதும் சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டே இருப்பார்கள். என்னைப் பார்க்க அவர்களால் எல்லா நேரத்திலும் ஓடோடி வர முடியாது. அவர்கள் எப்போதும் எனக்குத் துணையாக இருக்கவும் முடியாது. அந்தக் குறையை விநாயகர் தீர்த்து வைக்கிறார் பாருங்கள். எங்கு பார்த்தாலும்

அவர் இருக்கிறார். கோயில், குளம், ஆறு, தெரு, சந்து, தெருமுனை, மூலை, மரத்தடி எங்கு பார்த்தாலும் அவர்! எப்போதும் என்னோடு இருப்பது போன்ற உணர்வு. அவருக்கும் எனக்குமான 'பந்தம்' இந்த ஜென்மத்தில் எனக்குக் கிடைத்த வரம்!

நான் அவரைக் (விநாயகர் கோயிலை) கடந்து வீட்டுக்குள் செல்லும்போதும், வீட்டைவிட்டு வெளியே வரும்போதும் அவரைப் பார்த்து 'போயிட்டு வர்றேன்பா' என்று சொல்லிவிட்டுத்தான் போவேன். என் ஆறு பிள்ளைகளும் வெளியே செல்லும் போதும் அவர்களிடம் 'உங்க மூத்த அண்ணனைப் பார்த்து சொல்லிவிட்டுப் போங்க...' என்பேன். என் பேரன் – பேத்திகளும் அப்படியே பழகி என்னைப் பார்க்க வீட்டுக்கு வரும்போது 'பாட்டி! நாங்க மாமாகிட்டே (விநாயகரிடம்) சொல்லிவிட்டுத் தான் வந்தோம்' என்பார்கள். இப்படி எங்கள் குடும்பத்துக்கும் அவருக்குமான பந்தம் பரந்து விரிந்துகொண்டே செல்கிறது.

சரி ஒரு நிமிஷம் நில்லுங்கள்! கோயில் முன்னே இறங்கி நின்றுகொண்டிருக்கும் நான் ஒருமுறை கண்களை மூடி தியானித்து அவருக்கு நன்றி சொல்லி விடுகிறேன்.

இதோ கண்களை மூடிவிட்டேன். 'அப்பனே... நான் மறு பிறப்பு எடுத்து கடலூர் வந்திருக்கிறேன். உடல்நிலை மிகவும் மோசமாகிவிட்டதால், மீண்டும் உன் முன்னால் வந்து நிற்பேன் என்று நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. எப்படியோ வந்துவிட்டேன். உன்னையும் பார்த்துவிட்டேன்...' என்று சொல்லிவிட்டு, என் வீடு இருக்கும் வளாகத்துக்குள் காலடி எடுத்து வைக்கிறேன்.

இங்கே என் காலடியில் படும் ஒவ்வொரு துகள் மண்ணும் என் கதையை, என் குடும்பத்தின் கதையைச் சொல்லும். அங்கு நிற்கும் ஒவ்வொரு மரமும், செடியும், கொடியும் 60 ஆண்டுகளுக்கு மேற்பட்ட நினைவுகளை எல்லாம் எனக்கு மீண்டும் மீண்டும் நினைவுபடுத்திக்கொண்டே இருக்கும்.

நான் உள்ளே ந..ட..ந்..து செல்கிறேன். இது என் கணவர். பிறந்து, தவழ்ந்து, வளர்ந்து, திருமணமாகி என்னோடு வாழ்ந்த இடம். 25 ஏக்கர் கொண்ட பெரிய தோப்பு இதைச் சுற்றி இருக்கிறது. என் மாமனார் டாக்டர் கேப்டன் ரங்கநாதன் அவர்களும், மாமியார் மனோரஞ்சிதம் அவர்களும் வாழ்ந்த ஒரு பழைய கட்டடம்தான் 1958-ம் ஆண்டில் இங்கே இருந்தது. சுற்றிலும் பரந்த தோப்பு. மாமரங்கள், தென்னை மரங்கள் நிறைந்திருந்தன. பட்டுச்செடி வளர்ப்பும் நடந்தது.

அதோ வலப்புறம் வேல் பார்மஸி இருந்த இடம். கீழே பார்மஸியும் மேலே நான் நடத்திய பள்ளியும் இயங்கின. அதோ தெரிகிறதே ஒரு வேப்பமரம்! அதற்கு 40 வயது. 1972-ல் பழைய வீட்டு வாசலில் வேப்பங்கொட்டை போட்டு நாங்கள் வளர்த்தது. இன்றும் நிழல் தந்துகொண்டிருக்கிறது.

எட்டிப் பாருங்கள் அதோ தெரிகிறதல்லவா, அதுதான் என் பங்களா. 2003-ல் கட்டப்பட்டது.

காதுகளைத் தீட்டுங்கள்... மயில்கள் அகவும் சத்தம் கேட்கிறதா?! ம்... நான் வந்தது அவற்றுக்குத் தெரிந்துவிட்டது. என் பங்களாவில் 11 மயில்கள் வளர்க்கிறேன். நான் பல மாதங்கள் கழித்து கடலூருக்கு வருவதை உணர்ந்து அவை வித்தியாசமாக அகவுகின்றன.

திடீரென்று வெயில் மறைந்து, மழை மேகங்கள் சூழ்கின்றன. மயில்களில் சில எனக்கு வரவேற்பு அளிப்பதுபோல் தோகை விரித்து ஆடுகின்றன. எவ்வளவு அழகு!

அவற்றைக் கடந்து பங்களாவுக்குள் அடியெடுத்து வைக்கிறேன். வீட்டின் வலப்புறத்தில் என் கணவர் சிலையாக வீற்றிருக்கிறார்.

- சிறிய மீசை.
- தீர்க்க தரிசனம் நிறைந்த பார்வை.
- அடர்த்தியாக, ஏற்றி சீவப்பட்டிருக்கும் முடி.
- திருநீறு சூடிய நெற்றி.
- மலர்ந்த முகம்.

- முழுக்கை சட்டைபோட்டு இருக்கையில் அமர்ந்திருப்பது போன்ற சிலை.

இது மிக அற்புதமாக வடிவமைக்கப்பட்ட என் கணவருடைய சிலையாகும்.

அவரது சிலையையே நான் உற்றுப்பார்த்துக்கொண்டு நிற்கிறேன். அவ்வளவு எளிதாக என்னால் அவரைக் கடந்து செல்ல முடியவில்லை. அவர் கண்களைக் கூர்ந்து பார்க்கிறேன். அப்போது எனக்குள் ஆயிரம் நினைவலைகள்!

ஒரு மருமகளாக, ஒரு மனைவியாக அங்கே வலது கால் எடுத்துவைத்து வாழவந்த நினைவுகள் என்னைத் தழுவுகின்றன.



# 3



## திவான் குடும்பத்தில் பிறந்த செல்லம் நான்

கடலூர் வீட்டுக்கு என்னை கரம்பற்றி அழைத்து வந்தவர், என் கணவர். அது என் புகுந்த வீடு. இந்த இடத்திலாவது என் பிறந்த வீட்டைப் பற்றி நான் சொல்லத்தானே வேண்டும்? என் தாயைப்பற்றி, தந்தையைப்பற்றிச் சொல்லும்போது நான் நிஜமாகவே குழந்தையாகிவிடுகிறேன்.

எங்கள் பூர்வீகம், கல்பாக்கம் அணுமின் நிலையம் அருகில் உள்ள சதுரங்கப்பட்டினம். தமிழ்நாடும் ஆந்திரமும் பிரிக்கப்படாமல் தொப்புள்கொடி உறவுபோல், இணைந்து பரந்து கிடந்த காலத்தில், எங்கள் மூதாதையர் (இன்றைய ஆந்திரத்தில் உள்ள) ராஜமுந்திரிக்கு குடி பெயர்ந்து சென்று அங்கு புகழோடு வாழ்ந்திருக்கிறார்கள்.

என் அம்மா சக்குபாய், என் தந்தை ராவ்சாகிப் ராமலிங்க முதலியார். அவர் புகழ்பெற்ற வழக்கறிஞர். என் அம்மா பார்க்க ரொம்ப அழகாக சிவப்பு நிறத்தில் இருப்பார். அவரது அப்பா ஐதராபாத்தில் திவானாக இருந்தவர். அப்போது அவர்கள் வீட்டில் 3 பெரிய இரும்புப் பெட்டிகள் இருக்குமாம். தங்கம், வைரம் எல்லாம் அதில் நிறைந்திருக்கும் என்று அம்மா என்னிடம் சொன்னது நினைவுக்கு வருகிறது.

என் அம்மா, அப்பா இருவரும் முன்பே உறவினர்கள். அப்பா ஏழை என்பதால், அவருக்கு பெண் தர அம்மாவின் பெற்றோர் முதலில் மறுத்திருக்கிறார்கள். ஆனால் என் அம்மாவோ, அப்பாவைத்தான் விரும்பியிருக்கிறார். தாத்தா என் அம்மாவிடம் 'அவர் வேண்டுமா? சொத்து வேண்டுமா? இரண்டில் ஒன்றுதான் கிடைக்கும்' என்றபோது, 'சொத்து வேண்டாம்... அவரே போதும்' என்றிருக்கிறார் உடனே இரு குடும்பத்தினரும் மகிழ்ந்து இணைந்து ஆடம்பரமாக திருமணம் செய்து வைத்திருக்கிறார்கள். இது, என் அப்பா ராமலிங்க முதலியார், அம்மாவைப் பெருமைப்படுத்தும் விதத்தில் என்னிடம் சொன்னது!

என் தாத்தாவின் அப்பா பெயர் நாதமுனி முதலியார். அவர் ஒருங்கிணைந்த சென்னை மாகாணத்தில் தாசில்தாராக இருந்தவர். அப்போது சென்னைக்கும் ஆந்திராவுக்கும் இடையே ரயில் இல்லை. கப்பலில்தான் பயணம். நாதமுனி முதலியார் சென்னையிலிருந்து கப்பலில் விசாகப்பட்டினம் துறைமுகம் சென்று அங்கிருந்து ராஜமுந்திரிக்குச் செல்வாராம். நாதமுனி முதலியாருக்கு 5 பிள்ளைகள். அவர்களில் ஒருவரான நீலகண்ட முதலியார்தான் என் தாத்தா. அவர் ராஜமுந்திரியில் வக்கீலாகப் பணியாற்றினார்.

ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில், எங்கள் குடும்பம் திறமையால் செல்வாக்குடன் வாழ்ந்திருக்கிறது. அப்போது குதிரை வண்டியில் செல்வது கௌரவமான விஷயம்.

வெள்ளைக்காரர்கள் குதிரையிலும், குதிரை வண்டியிலும் பயணம் செய்து பந்தாவாக வாழ்ந்து வந்திருக்கிறார்கள். அப்போது என் தாத்தாவுக்கும் குதிரை ஆசை வந்திருக்கிறது. நாலைந்து குதிரைகள் வாங்கி, குதிரையிலும் குதிரை வண்டியிலும் பயணம் செய்ய ஆசைப்பட்டிருக்கிறார்.

சுதந்தரத்துக்கு முந்தைய அந்தக் காலகட்டத்தில் இதுபோன்று நமது சௌகரியத்துக்காக ஏதாவது செய்ய வேண்டும் என்றால்கூட ஆங்கிலேய துரையிடம் அனுமதி பெற வேண்டும்.

தாத்தா போய் ஆங்கிலேய துரையிடம் அனுமதி கேட்க, அவரோ 'குதிரைகளை நாங்கள்தான் சொந்தமாக வைத்துக்கொள்ள முடியும். நீங்கள் குதிரைகளை வைத்துக்கொள்ள சட்டத்தில் இடமில்லை' என்று கூறி விட்டாராம்.

சட்டம் தெரிந்த தாத்தா உடனே நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தார். 'யார் யார் தான் குதிரை வைத்துக்கொள்ள வேண்டும் என்ற சட்ட வரையறை எதுவும் இல்லை. அப்படியானால் யார் வேண்டுமானாலும் குதிரைகளை சொந்தமாக வைத்துக்கொள்ளலாம் என்றுதானே அர்த்தம்?' என்று சட்ட மேதையான தாத்தா வாதாட, ஆங்கிலேய நீதிபதி அவரது வாதத்தை ரசித்துவிட்டு, 'நீங்கள் எத்தனை குதிரைகள் வைத்துக்கொள்ள விரும்புகிறீர்கள்?' என்று கேட்டிருக்கிறார். தாத்தா, ஐந்து குதிரைகள் என்று சொல்ல, 'நீங்கள் பத்து குதிரை வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள்' என்று தீர்ப்பு கூறி வியப்பூட்டி இருக்கிறார். அதன்பிறகு என் தாத்தாவும் குதிரைகளை சொந்தமாக வாங்கி அவற்றில் பயணம் செய்திருக்கிறார். இந்த சம்பவம் அந்தக் காலத்தில் அபூர்வமான விஷயமாக ஆச்சரியத்தோடு பேசப்பட்டிருக்கிறது.

இப்படி எங்கள் தலைமுறை வக்கீல் தொழிலில் வாதத் திறமையுடன் செயல்பட்டதாலும், பொதுமக்களுக்குச் சேவையாற்றியதாலும், 'ராவ்சாகிப்' என்ற அடைமொழி என் தந்தையிடம் இணைந்திருக்கிறது.

ராவ்சாகிப் ராமலிங்க முதலியார் – சக்குபாய் தம்பதிக்கு நாங்கள் 5 பேர் பிறந்தோம். அவர்கள்: கேசரி அனுமந்தராவ் – புகழ்பெற்ற வழக்கறிஞர். வாசுதேவ்– ஓய்வுபெற்ற இன்ஜினீயரிங் கல்லூரி முதல்வர். மூன்றாவதாக ஹேமாவாகிய நான் பிறந்தேன். அடுத்து, தங்கை பிரேமலதா. கடைசியில் தம்பி சாந்திகுமார். இவர் சந்திரபூரில் கண் மருத்துவராக உள்ளார்.

ராஜமுந்திரியில் உள்ளித்தோட்டத் தெருவில் எங்களுக்கு சொந்தமாக மாடிவீடு உண்டு. அங்குதான் நான் பிறந்தேன். அங்கேதான்

பள்ளிப்படிப்பை முடித்தேன். இசையில் எனக்கு ஆர்வம் மிக அதிகம். பரதமும் கற்றேன். இவற்றை குருக்கள் வீட்டுக்கு வந்து எனக்கு சொல்லித் தருவார்கள். நான் எங்கள் வீட்டில் செல்லக்குழந்தையாக வளர்ந்தேன். படித்துக் கொண்டிருக்கும்போது பள்ளிக்கூடத்தில் நடந்த நிகழ்ச்சிகளில் நடனமாடியிருக்கிறேன்; பாடியிருக்கிறேன்; பேசியும் பரிசுகள் வாங்கியிருக்கிறேன்.

நான் சிறுமியாக இருக்கும்போது என் அம்மாவிடம் 'ராஜமுந்திரி என்று ஏன் பெயர் வந்தது?' என்று கேட்டேன். அதற்கு என் அம்மா சக்குபாய் அழகாக விளக்கம் கொடுத்தார்.

"சரித்திர காலத்தில் இந்தப் பகுதியை ராஜா மகேந்திரவர்மன் ஆண்டு வந்திருக்கிறார். அவரது பெயராலே 'ராஜ மகேந்திரவரம்' என்று அந்த ஊர் அழைக்கப்பட்டது. ஆங்கிலேயர்கள் இங்கு வந்தபோது மன்னர்களின் பெயர்களில் ஊர் எதுவும் இருக்கக் கூடாது என்று கருதியிருக்கிறார்கள். புதிதாக என்ன பெயர் வைப்பது என்று அவர்கள் யோசித்தபோது அங்கே முந்திரி மரங்கள் நிறைய இருந்திருக்கின்றன. அதில் இருந்து 'முந்திரி' என்ற பெயரை எடுத்திருக்கிறார்கள். அதன் முன்பு 'ராஜா' என்ற பெயரை இணைத்திருக்கிறார்கள். இப்படி ராஜமுந்திரி என்று பெயர் வைத்துவிட்டார்கள்" என்று அம்மா விளக்கினார்.

எனக்கு நினைவு தெரிந்த பருவத்தில் அங்கு நிறைய முந்திரி மரங்கள் இல்லை. ராஜாவும் இல்லை. ஆனால் பங்கனபள்ளி மாம்பழம், கிளி மூக்கு மாம்பழங்கள் நிறைய விளைந்தன. அதற்குக் காரணம் அங்கே ஓடிக்கொண்டிருக்கும் கோதாவரி ஆறு.

எங்கள் உள்ளித்தோட்டத் தெருவுக்கும், கோதாவரி ஆற்றுக்கும் அரை கி.மீ. தொலைவுதான் இடைவெளி.

நான் சிறுமியாக இருந்தபோது ஒருமுறை கோதாவரி ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. விடாத மழையும் பெய்தது. நிமிடத்துக்கு நிமிடம் நீர்ப் பெருக்கு அதிகமாயிற்று. அதனால் ஆற்று

வெள்ளம் கரைபுரண்டு ஊருக்குள் புகுந்தது. எங்களுடையது 3 மாடி கட்டடம். பக்கத்து தெருவரை தண்ணீர் பொங்கி வந்தது. ஆற்றின் கரையில் இருந்த மக்களைக் காப்பாற்றி, படகில் கொண்டு வந்து எங்கள் வீட்டு மாடியில் ஏற்றினார்கள். எங்கள் வீடு உயரமாக இருந்ததால் எல்லாருக்கும் பாதுகாப்பு அளித்தது.

இரண்டு வேலைக்காரர்கள். நாங்கள் 5 பேர். அப்பா, அம்மா சேர்த்து மொத்தம் 9 பேர். அந்த வீட்டில் வசித்தோம்.

அப்போது எனக்கு 6–வயது என்று நினைவு. 25–க்கு மேற்பட்டவர்கள் உயிர்தப்பி எங்கள் வீட்டில் தங்கியதைப் பார்த்து, நெகிழ்ந்து அவர்களுக்கு உணவு சமைத்தோம். வேலைக்காரர்களும், அம்மாவும் உணவு சமைத்துத் தர, நான் எடுத்துப் போய் ஒவ்வொருவருக்காகக் கொடுப்பேன். வெள்ளம் வடியும் வரை அவர்கள் எங்கள் வீட்டு மாடியிலே குடியிருந்தார்கள்.

அது சிறு வயதாக இருந்ததால் வெள்ளப் பெருக்கு, அதனால் ஏழை மக்களுக்கு ஏற்பட்ட பாதிப்பு போன்றவற்றை என்னால் உணர்ந்திருக்க முடியவில்லை. ஆனால் படகில் காப்பாற்றப்பட்டது, எங்கள் வீட்டில் தங்கியது, நான் அவர்களுக்கெல்லாம் உணவு கொடுத்து மகிழ்ந்தது போன்றவை இன்றும் என் நினைவில் நிற்கின்றன.

என் தாத்தா, பலருக்கு சட்டத்தின் மூலம் நீதியைப் பெற்றுத் தந்திருக்கிறார். அதை நான் பார்த்திருக்கிறேன்.

என் பாட்டி, பலருக்குப் பணம் கொடுத்து உதவியிருக்கிறார். அதையும் நான் கண்டிருக்கிறேன்.

என் தந்தை, ஏழைகளுக்கு உடைகள் வழங்கியுள்ளார். அதையும் நான் பார்த்திருக்கிறேன்.

என் அம்மா, ஏழைகள் பலர் வீட்டில் வந்து தங்க இடம் கொடுத்திருக்கிறார். அதையும் நான் கண்டு உணர்ந்து வளர்ந்திருக்கிறேன்.

ஆனால் அதில் எல்லாம் காணாத மகிழ்ச்சியை நான் உணவு வழங்கி, அதை பாதிக்கப்பட்ட மக்கள் வயிறார உண்ணும்போது கண்டிருக்கிறேன். வயிறு நிறைய சாப்பிட்டுவிட்டு, வாய் நிறைய வாழ்த்திவிட்டு, முகம் நிறைந்த சிரிப்போடு அவர்கள் விடைபெற்றுச் செல்வதை நான் விழிகளை மூடாமல் பார்த்துக் கொண்டிருப்பேன்.

இப்படி அன்னதானம் வழங்குவதில் இருக்கும் ஒரு ரகசியத்தை உங்களுக்கு சொல்லட்டுமா? பொதுவாக தானம் வாங்கி சாப்பிட்டவர்களுக்குத்தான் மகிழ்ச்சி ஏற்படும் என்று சொல்வார்கள். ஆனால் அதைவிட ஆயிரம் மடங்கு மகிழ்ச்சி தானம் வழங்கிய நமக்குக் கிடைக்கும். அள்ளிக்கொடுத்துப் பாருங்கள். அதில் கிடைக்கும் அளவற்ற ஆனந்தத்தை நீங்களும் உணரலாம். இது எனக்கு 10 வயதில் கிடைத்த மகிழ்ச்சிப்பாடம். அதனால்தான் இன்றும் வீடு தேடி வருகிறவர்களிடம் "சாப்பிட்டீர்களா?" என்று கேட்டு சாப்பாடு போடுகிறேன். அன்பர்களோ, நண்பர்களோ, அறிமுகமற்றவர்களோ யாராக இருந்தாலும் அவர்களுக்கு உணவு வழங்குங்கள். வழங்கினால் உங்கள் தலைமுறை செழிக்கும்.

பாருங்கள் 10 வயது என்று சொல்கிறபோது, எனக்கு அந்த வயது சம்பவம் ஒன்று பளிச்சென நினைவுக்கு வருகிறது.

ராஜமுந்திரியில் எங்கள் பக்கத்து வீட்டில் சலபதிராவ் என்ற திவான், வசித்து வந்தார். அன்று ஒருநாள் அவரது வீட்டில் பூஜை நடந்துகொண்டிருந்தது. போய் எட்டிப் பார்த்தேன். சுற்றிலும் நிறைய பேர் நின்று சாமி கும்பிட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்கள் கண்களுக்கு கடவுள் சிலை தெரிந்திருக்கும். ஒருவேளை கடவுள் கூட தெரிந்திருப்பார். ஆனால் என் கண்களுக்கு பளபளப்பாக மஞ்சள் நிறத்தில் படைக்கப்பட்டிருந்த வாழைப்பழங்களே தெரிந்தன. நான் அப்போது வாழைப்பழத்தை விரும்பிச் சாப்பிடுவேன்.

திவான் ஜலபதிராவ் பக்தி பூர்வமாக நின்றிருந்தாலும், சிறுமியான என் பார்வையின் அர்த்தத்தைப் புரிந்துகொண்டார். 'அமைதியாக உட்கார்ந்திரு. அந்த வாழைப்பழங்கள் எல்லாம் உனக்குத்தான். பூஜை

முடிந்ததும் அதை எடுத்துக்கொள்' என்றார். 'சாமி வரம் எல்லாம் தருவார்' என்று என் அம்மா அடிக்கடி சொல்வார். ஓகோ இங்கு எனக்கு பழம் கிடைப்பதும் சாமி தந்த வரம்தான் என்று நினைத்துக்கொண்டேன்.

அன்று முதல் அவர் வீட்டில் பூஜை நடக்கும்போதெல்லாம் நான்தான் முதல் ஆளாகப் போய் நிற்பேன். எல்லாரும் அந்த சாமியிடம் ஏதேதோ கோரிக்கை வைத்திருக்கலாம். அதை அந்த சாமி நிறைவேற்றினாரோ என்னவோ எனக்குத் தெரியாது. ஆனால் நான் அவரிடம் ஒன்றே ஒன்றைத்தான் கேட்பேன். 'சீக்கிரம் பூஜையை முடிக்கவைத்து எனக்குப் பழத்தைக் கொடுங்கள்' என்று! கடவுள் என் கோரிக்கையை அப்போதே நிறைவேற்றிவிடுவார். என் கைக்கு உடனே பழம் வந்துவிடுமே!

தமிழ்க் கடவுள் முருகன் அவ்வை மூதாட்டியைப் பரிசோதித்தது நாவல் பழத்தில்! தம் பிள்ளைகளான விநாயகரையும் முருகனையும் சிவபிரான் பரிசோதனை செய்தது மாம்பழத்தில். என்னை கடவுள் ஈர்த்தது வாழைப்பழத்தில்! கடவுள் தூணிலும் இருப்பார். துரும்பிலும் இருப்பார் என்பார்கள். என் விஷயத்தில் வாழைப்பழத்தில் இருந்திருக்கிறார்.

எனக்கு பல விளையாட்டுகள் தெரியும். எறிபந்து, பேட்மிண்டன், கோகோ எல்லாம் விளையாடுவேன். சும்மா இல்லை, பரிசோடுதான் திரும்பி வருவேன். என் அம்மாவும் பேட்மிண்டன் விளையாடுவார். என் அப்பா அற்புதமாக பேட்மிண்டன் விளையாடுவார். அவரது ஒரு கண் சற்று சிறியது. அதிர்ஷ்டம் மிக்க ஒன்றரைக் கண் என்று சொல்வார்களே, அப்படி! பேட்மிண்டன் விளையாடும்போது எதிர்ப்பக்கத்தில் விளையாடுபவர் அடிக்கும் பந்து அவரை நோக்கி வரும். பந்தை எதிர்கொள்ளும் அப்பா, பார்க்கும் பார்வை எங்கோ பார்த்ததுபோல் இருக்கும். எதிர்ப்பக்கத்தில் நிற்பவர், அவர் சரியாக பந்தை கணிக்கவில்லை என்று சற்று கவனத்தைச் சிதறவிட, அப்பாவோ சரியாக பந்தை எதிர்கொண்டு, அடித்து வெற்றிப்

புள்ளிகளைச் சேர்த்துவிடுவார். அப்படி அடித்து அடித்து அவர் விளையாடுவதைப் பார்க்க எனக்கு ஆனந்தமாக இருக்கும்.

அப்பாவின் சகோதரர்கள் 'காசி பிரதர்ஸ்' என்று அழைக்கப்பட்டவர்கள் தேசிய பேட்மிண்டன் வீரர்களாகத் திகழ்ந்தார்கள் என்பதை பெருமையாக நான் சொல்லித்தான் ஆக வேண்டும்.

ராஜமுந்திரியில் நான் 8-ம் வகுப்புவரை படித்தேன். அதன்பிறகு என்னை ஆங்கிலம் படிக்க ஐதராபாத்துக்கு அனுப்பத் திட்ட மிட்டார்கள். ஆனால் நான் செல்லப்பிள்ளையாக இருந்ததால், என்னை அவ்வளவு தூரத்துக்குப் படிக்க அனுப்ப பெற்றோராலும் முடியவில்லை. பெற்றோரைப் பிரிந்து படிக்கப்போக என்னாலும் முடியவில்லை.

என் பாட்டியின் பெயர் அம்மணி அம்மாள். அவர் ஆச்சரியமான பூனை ஒன்றை வளர்த்தார். ஒரு போதும் அது என் பாட்டியைவிட்டு விலகாது. அதனால் நான் அவர்களை 'பூனைப்பாட்டி' என்று அழைப்பேன். அந்தப் பூனையைப் பார்த்தால் எங்களுக்கு வேடிக்கையாக இருக்கும். அதனால் எங்களிடம் அது தனியாக மாட்டிக்கொண்டால், சிறு பிள்ளைகளுக்கே உரிய குறும்புடன் அதை விரட்டி விளையாடுவோம். பாட்டிக்கும், அந்தப் பூனைக்கும் மிகப்பெரும் ஆத்ம பந்தம் இருப்பது எங்களுக்குத் தெரியாது.

அப்போது எங்கள் பாட்டி நோய்வாய்ப்பட்டிருந்தார். வழக்கமாக உடல்நிலை சரி இல்லாமல் போயிருந்தால், சீக்கிரமாக அதிலிருந்து மீண்டுவிடுவார். அப்போது வழக்கத்துக்கு மாறாக நோய்வாய்ப்பட்டு படுத்த படுக்கையானார். உயிருக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று நாங்கள் எல்லாரும் பயந்ததால் வீட்டையே சோகம் சூழ்ந்திருந்தது. பெரிய பெரிய டாக்டர்கள் வந்து பரிசோதித்துப் பார்த்து சிகிச்சை அளித்துக்கொண்டிருந்தார்கள். பதற்றமும், கவலையும் நிறைந்த அந்தச் சூழ்நிலையில் யாரும் எதிர்பாராத ஒரு சம்பவம் நடந்தது.

அந்தப் பூனை பாட்டியை நோக்கி ஓடோடி வந்தது. அது, பாட்டியின் காலை மூன்று முறை சுற்றியது. திடீரென்று அப்படியே காலடியில்

விழுந்து இறந்துவிட்டது. நாம் பாசத்துடன் வளர்க்கும் பிராணிகள், நமது சாவை முன்கூட்டியே தெரிந்துகொண்டு, ஏதாவது அறிகுறியை வெளிப்படுத்தும் என்றுதான் கேள்விப்பட்டிருக்கிறேன். எஜமானருக்கு வரும் சாவை அதுவே ஏற்றுக்கொள்ளும் என்று நாங்கள் கற்பனை செய்துகூடப் பார்த்திருக்கவில்லை. கற்பனை செய்யாத அந்த விஷயம் எங்கள் குடும்பத்தில் நடந்தது.

அந்தப் பூனையின் அகால மரணத்தை நாங்கள் பாட்டியிடம் சொல்லவில்லை. அவரது உடல்நிலை அந்த அளவுக்கு மோசமாக இருந்தது. பூனை இறந்த பின்பு அவரது உடல்நிலை படிப்படியாக சீரடைந்தது. அதன்பிறகு பல வருடங்கள் வாழ்ந்துதான் காலமானார். (அவர் உடல்நிலை சரியான பின்பு நாங்கள் பூனையின் மரணத்தைப் பற்றிக் கூறினோம். தேம்பித் தேம்பி அழுதார். கடைசிவரை அந்தப் பூனையின் நினைவாகவே அவர் இருந்தார். வளர்ப்புப் பிராணிகள் மனித வாழ்க்கைக்கு எவ்வளவு முக்கியமானது என்பதை என் பாட்டியின் மூலம் அந்தப் பூனை உணர்த்தியது, எங்களுக்கு மட்டுமல்ல, இதைப் படிக்கும் உங்களுக்கும் ஒரு பாடம்தான்).

1952-ல் நாங்கள் சென்னைக்குக் குடிபெயர்ந்தோம். அப்போது கோக்கா சுப்பாராவ் என்பவர் புகழ்பெற்ற நீதிமான். அவருக்கும் என் தந்தைக்கும் நெருங்கிய நட்பு உண்டு. அவர் மெட்ராஸ் உயர் நீதிமன்ற நீதிபதியாகி, சென்னைக்கு வந்தார். அப்போது சிறந்த வக்கீல்களுக்கு சென்னையில் அதிக மதிப்பிருந்தது. அதனால் சுப்பாராவ் அவர்களின் அழைப்பின் பேரில் அப்பா சென்னைக்கு வர நாங்களும் சென்னைக்கு வந்தோம். ராயப்பேட்டை, பீட்டர்ஸ் ரோட்டில் உள்ள வீட்டில் வாடகைக்குக் குடியேறினோம்.

அப்போது எனக்கு 17 வயது. இந்தப் புத்தகத்தின் கதாநாயகனான என் கணவர், என்னைக் கரம்பற்றியது இந்த வயதில்தான்!

# 4



## என் கணவர் ஒரு மனித கம்ப்யூட்டர்

**எ**னக்கு 17 வயது. அதற்கு முன்பு நான் இந்த உலகத்தைப் பார்த்த பார்வைக்கும், அப்போது பார்த்த பார்வைக்கும் நிறைய வித்தியாசங்கள் இருந்தன. என் சிந்தனையில் தெளிவு ஏற்பட்டிருந்தது. எனக்குள்ளே என்னென்ன திறமைகள் இருக்கின்றன என்பதை எல்லாம் நான் கண்டு பிடித்து மேம்படுத்தத் தொடங்கினேன்.

நான் அந்தக் கோணத்தில் செயல்பட்டுக் கொண்டிருந்த நிலையில், என் திருமணம் பற்றி அப்பாவும் அம்மாவும் அவர்களுக்குள் பேசத் தொடங்கினார்கள். அவ்வப்போது என் காதுகளில் விழும்படியும் பேசினார்கள்.

எனக்கு அப்போதைக்கு திருமணத்தில் ஆர்வம் இல்லாததால், அந்தப் பேச்சை நான் கண்டு கொள்ளாமலே இருந்தேன். ஆனால் அம்மாவோ திருமணம் பற்றி என் கருத்தை அறிவதில் மிகவும் ஆர்வம் காட்டினார்.

நான் வீணை வாசித்துக்கொண்டிருக்கும்போதோ, புத்தகம் படித்துக் கொண்டிருக்கும்போதோ, அம்மா மெதுவாக வந்து என் அருகே

அமர்வார். வீணை வாசித்துக்கொண்டிருந்தால், அதை ஆழ்ந்து கவனித்து என்னைப் பாராட்டிவிட்டு, மெல்ல திருமண பேச்சைத் தொடங்குவார். நான் உடனே 'எனக்கு நிறையப் படிக்க வேண்டும். அப்பா பெரிய வக்கீல். அண்ணன்கள், தம்பி எல்லாருமே நிறையப் படித்திருக்கிறார்கள். எனக்கு மட்டும் அந்த வாய்ப்பு கிடைக்கவில்லை. நன்றாகப் படிக்க எனக்கு அறிவு போதாது என்றா நினைக்கிறீர்கள்?' என்பேன்.

உடனே அம்மா என்னைக் கொஞ்சத் தொடங்குவார். 'நீ படிப்பில் கெட்டிக்காரி. அறிவில், கருணையில் சிறந்தவள்' என்றெல்லாம் புகழ்வார். அதோடு விடாமல் 'நீ நன்றாக பேட்மிண்டன் விளை யாடுகிறாய். பாடுகிறாய்... உனக்கு என்ன குறை? மகாராணி மாதிரி உனக்கு வாழ்க்கை அமையும்' என்பார்.

அப்போது எனக்கு தெலுங்குதான் தெரியும். தமிழ் தெரியாது.

'மகாராணி கனவெல்லாம் இருக்கட்டும். நாம் சென்னைக்கு குடிவந்து பலமாதங்கள் ஆகிவிட்டன. ஆனால் எனக்கு தமிழ் பேசவே சிரமமாக இருக்கிறதே...' என்பேன். 'தமிழ் ரொம்ப ஈஸி. உனக்கு இருக்கும் புத்திக்கு சீக்கிரமே கற்றுக்கொள்வாய்' என்று அம்மா என்னை அமைதிப்படுத்துவார்.

அம்மா தினமும் என் அருகில் வந்து அமர்ந்து திருமணம் பற்றி என் கருத்தைக் கேட்க முயற்சிப்பார். நானோ படிப்பு, படிப்பு என்றே பேசிக்கொண்டிருக்க, இப்படியே எங்களுக்குள் வேடிக்கையாக நாட்கள் நகர்ந்துகொண்டிருந்தன.

எனக்கு திருமண ஆர்வம் இல்லாததால் அப்படியே புத்திசாலித்தனமாக என் அம்மாவின் பேச்சை வழிமறித்து வேறு ஏதாவது 'சப்ஜெக்ட்'டுக்கு அவரை திசை திருப்பிக்கொண்டு சென்றுவிடுவேன்.

அப்படி எத்தனை நாள்கள்தான் என் புத்திசாலித்தனத்தைக் காட்டமுடியும்? அவர் எனக்கு அம்மா அல்லவா! என்னைவிட புத்திசாலியாகத்தானே இருப்பார்?

அன்று அம்மா வழக்கத்தைவிட அதிக உற்சாகத்தோடு என் அருகில் வந்து அமர்ந்தார்.

'உனக்கு இன்னும் நிறையப் படிக்க வேண்டும் என்று ஆசை இருக்கிறதல்லவா?' என்றார். (எனக்கு பழம் நழுவிப் பாலில் விழுவதுபோல் இருந்தது).

'அதைத்தான் வருடக்கணக்கில் உங்களிடம் சொல்லிக்கொண்டிருக்கிறேனே' என்பதுபோல் அம்மாவின் முகத்தைப் பார்த்தேன். அப்பாவித்தனமாக முகத்தை வைத்துக்கொண்டு, 'அதற்கு ஒரு வழியைக் கண்டுபிடித்துவிட்டேன்' என்றார்.

எனக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை. என் படிப்பு பற்றி பெரிதாக எப்போதுமே பேசாத அம்மா, வழி கண்டுபிடித்து விட்டதாகச் சொல்கிறாரே! கொஞ்ச மகிழ்ச்சியா எனக்கு ஏற்பட்டிருக்கும்?! அதோடு விடவில்லை, அம்மா.

'நீ தமிழ் படிக்க வேண்டும் என்றாயே... அதற்கும் வழி கண்டு பிடித்துவிட்டேன்' என்றார்.

நான் நம்ப முடியாமல் அம்மா முகத்தைப் பார்த்தேன்.

'என்ன அம்மா! மெஜீஷியன் மாதிரி சொல்லிக்கொண்டே போகிறீர்கள்? எனக்காக என்ன வழியை, எங்கே கண்டுபிடித்தீர்கள்? அதைச் சொல்லுங்கள்' என்றேன்.

'நான் வழியைக் கண்டுபிடித்துவிட்டேன். ஆனால் அதை நீ ஏற்றுக்கொள்ள வேண்டுமே...' என்று அடுத்ததாக ஒரு புதிர் போட்டார். அப்போதைக்கு அம்மாவின் மனத்தில் இருந்த புதிர் எனக்குப் பிடிபடவில்லை.

மெதுவாக புதிரை அம்மாவே அவிழ்க்கத் தொடங்கினார்.

'உனக்கு மேல் படிப்பும் படிக்கணும். தமிழும் படிக்கணும். அதுக்கு நல்ல வாத்தியார் வேணும். அப்படித்தானே... ?'என்றார். நானும் உற்சாகமாக 'ஆமாம்' போட்டேன்.

‘நல்ல வாத்தியாரே உனக்கு மாப்பிள்ளையாக அமைந்தால் எப்படி இருக்கும்?’ என்று கேட்டு, என் முகத்தை அம்மா அன்புப் பார்வை பார்த்தார். ‘நான் ஆசைப்படுறேன்ல, திருமணத்துக்கு ஒத்துக்கோயேன்’ என்ற எதிர்பார்ப்பும் அதில் இருந்தது.

படிப்பு என்ற தூண்டிலை அம்மா போட்டதாலும், பாசப்பார்வை பார்த்ததாலும் நான் அமைதியானேன்.

மறுநாள் எங்கள் வீட்டுக்கு ஜெகதாம்பாள் என்ற பழுத்த மூதாட்டி ஒருவர் வந்தார். அம்மாவும், அப்பாவும் எழுந்து நின்று வரவேற்று, அவர் சுதந்தரப் போராட்டத் தியாகி என்றார்கள்.

சுதந்தரத்துக்கு முன்பு பிறந்து, ஆங்கிலேயர்களின் கட்டுப்பாட்டுக் குள் இந்தியா இருந்தபோது அந்த அடிமைக்காற்றையும் சுவாசித்து வளர்ந்தவள் நான். தலைவர்களின் எழுச்சி மிகு போராட்டமும், மக்களின் வாழ்க்கைத் திண்டாட்டமும் எனக்குத் தெரியும். ‘எவ்வளவு காலம் நாம் இப்படி அடிமைப்பட்டுக் கிடப்போம்’ என்று என் குடும்பமும் மனம் புழுங்கியது. அதனால் நானும் தலைவர்களின் சுதந்தரப் பாடல்களை ராகத்தோடு உணர்ச்சி பொங்கப் பாடியதுண்டு! பின்பு சுதந்தரம் கிடைத்து, சுதந்தரக் காற்றையும் சுவாசித்தேன்.

இந்தியா சுதந்தரம் அடைந்தபோது எனக்கு 13 வயது. அடிமை விலங்கொடித்த அந்த நாள் என் நெஞ்சில் நிறைந்திருக்கிறது. எப்போதும் நான் சுதந்தரப் போராட்டத் தியாகிகளுக்கு மதிப்பும், மரியாதையும் செலுத்துவதால் ஜெகதாம்பாள் அவர்களையும் மரியாதையுடன் வணங்கினேன். பின்புதான் அவர்கள் கடலூர் பழைய நகரத்திலிருந்து என்னைப் பெண் பார்க்க வந்திருக்கிறார்கள் என்பதை அறிந்தேன்.

அந்தத் தருணத்தில்தான் முதல்முறையாக சின்னிகிருஷ்ணன் என்ற அன்புப் பெயர் என் காதுகளில் விழுந்தது. அவர் B.Sc., B.Ed., படித்துவிட்டு கடலூர் செயின்ட் ஜோசப் பள்ளியில் ஆசிரியராக

வேலை பார்த்துக்கொண்டிருக்கிறார் என்றார்கள். அவருக்கு ஜெகதாம்பாள் அவர்கள் உறவினர் என்றும் சொன்னார்கள். சின்னிகிருஷ்ணன் அவர்களை மனத்தில் வைத்துக்கொண்டுதான் அம்மா புத்திசாலித்தனமாக என்னை அணுகியிருக்கிறார் என்பதை அப்போதுதான் உணர்ந்தேன்.

'சின்னிகிருஷ்ணன் அவர்களது அப்பா டாக்டர் கேப்டன் ரெங்கநாதன். ராணுவத்தில் டாக்டராக வேலை பார்த்தவர். அம்மா மனோரஞ்சிதம். பெற்றோருக்கு அவர் ஒரே பிள்ளை...' என்றெல்லாம் என் காதுகளில் தகவல்கள் விழுந்து கொண்டிருந்த சில நாள்களில், என்னைப் பெண் பார்க்க குடும்பத்தோடு அவரும் வந்தார்.

பார்த்துவிட்டு, 'அப்புறம் தகவல் சொல்கிறோம்' என்றபடி புறப்பட்டார்கள்.

நான் 'சீக்கிரம் திருமணம் நடந்தால், சீக்கிரம் படிக்கச் செல்லலாமே' என்று காத்திருந்தேன். அவர்கள் தரப்பிலிருந்து பதில் வரவில்லை. வாரங்கள் கடந்து கொண்டிருந்தன.

அவரது அம்மாவுக்கு என்னை அவ்வளவாகப் பிடிக்கவில்லையாம். ஆனால் அவரோ, 'திருமணம் என்றால் அந்தப் பெண்ணோடு (என்னோடு) தான். இல்லாவிட்டால் திருமணமே வேண்டாம்' என்று கூறிவிட்டாராம். இப்படி ஒருநாள் என் காதுகளை நோக்கி ஒரு தகவல் வந்தது.

இன்னொரு நாள்...

'அந்தப் பெண்ணுக்கு (எனக்கு) எப்போது திருமணம் நடக்கிறதோ, அதன் பின்புதான், நான் திருமணம் செய்துகொள்வேன்' என்று சொன்னதாக என் அம்மாவிடம், அவர் வீட்டுத்தரப்பிலிருந்து யாரோ சொல்லிக்கொண்டிருந்தார்கள். அதைக் கேட்ட அந்த விநாடியிலே அவர்தான் என் கணவர் என்று முடிவு செய்துவிட்டேன்.

24.5.1951–ல் அதாவது என் 17 வயதில் எங்கள் திருமணம் நடந்தது. மகிழ்ச்சியாக மண வாழ்க்கைக்குள் அடியெடுத்து வைத்தேன். சீர்வரிசை எல்லாம் வேண்டாம் என்று என் கணவர் கூறிவிட்டார். திருமணத்தன்று அழகான பட்டுப்புடைவை கட்டியிருந்தேன். வைர நெக்லஸ் அணிந்திருந்தேன். முகூர்த்தம் முடிந்ததும் கணவர் என்னை கரம்பற்றி கடலூர் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்.

என் கணவர் குடும்பம் கடலூரில் பிரபலமானது. அந்தக் காலகட்டத்தில் அந்தப் பகுதியில் என் மாமனாரிடம் மட்டும்தான் 'ஆஸ்டின்' என்ற சொகுசு கார் இருந்திருக்கிறது. பீச் ரோட்டில் 25 ஏக்கரில் பரந்து, விரிந்து கிடந்த தோட்டத்துக்குச் சொந்தக்காரர். சப்போட்டா, நெல்லி, நாரத்தை, ஆரஞ்சு போன்றவை எல்லாம் காய்த்துக் கிடக்கும். எங்கு பார்த்தாலும் மாமரங்கள், நெல், மரவள்ளி, கடலை, கரும்பு போன்றவற்றை எல்லாம் விளைவித்துக்கொண்டிருந்தார்கள்.

கொத்துக்கொத்தாக காய்த்துக்கிடக்கும் மாந்தோப்பை நான் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருப்பேன். அவ்வளவு அழகு. ஒருமுறை ராஜமுந்திரிக்குப் போய்விட்டுத் திரும்பிய போது ஹிமாம் பசந்து, பங்கனபள்ளி ஆகிய இரண்டு ரக மாங்கன்றுகளையும் கொண்டு வந்து தோட்டத்தில் நட்டேன்.

மொத்தம் 65 மாமரங்கள். 'அவை வளர்ந்து நின்று கனிகளை வாரித்தந்தன என்றுதான் சொல்லவேண்டும். ஏனென்றால் மாம்பழ சீசனில் எங்கள் வீட்டில் அவ்வளவு மாம்பழங்கள் குவிந்துகிடக்கும். கோடை காலத்தில் அவற்றை ரகம் ரகமாகப் பிரித்து கடலூருக்கும், சென்னைக்கும் அனுப்புவதற்காகவே ஆள்களை வேலைக்கு வைத்திருந்தோம். தெரிந்தவர்களின் வீடுகளுக்கெல்லாம் பெட்டிகளில் மாம்பழம் போய்க்கொண்டிருக்கும். மாம்பழ சீசனில் எங்கள் வீட்டுக்கு வருபவர்கள் அதனைப் பார்த்துவிட்டு, 'உங்கள் வீட்டில்தான் வருடந்தோறும் மாம்பழத் திருவிழா நடக்கிறது' என்பார்கள்.

(2011 டிசம்பர் 30–ல் அடித்த தானே புயலில் அத்தனை மரங்களையும் இயற்கை சாய்த்துவிட்டது. இப்போது 3 மாமரங்கள் மட்டுமே

நிற்கின்றன. அந்த மாமரங்கள் விழுந்த இடத்தில் என் பிள்ளைகள் அதைவிட சிறப்பாக ஏதாவது ஒன்றை அறிவுபூர்வமாக முளைக்கவைத்துவிடுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு).

எங்கள் திருமண வாழ்க்கை மகிழ்ச்சியாக ஓடிக்கொண்டிருந்தது. அதே நேரத்தில், நெருடலும் இருந்துகொண்டிருக்கத்தான் செய்தது. என் மாமியார் கணவரை இழந்த விதவை. அவர்களுக்கு என் கணவர் ஒரே பிள்ளை. மாமியார் முழுக்க முழுக்க மகனுக்காகவே வாழ்ந்துகொண்டிருந்ததால், அவரிடம் வழக்கமாக சில தாய்மார்களுக்கே உள்ள தயக்கங்களும், தடுமாற்றங்களும் இருந்துகொண்டிருக்கத்தான் செய்தன. நானும் வீட்டில் செல்லமாக வளர்ந்தவள். அதனால் சின்னச்சின்ன மனக்கசப்புகள் எழத்தான் செய்தன. திருமணமான புதிதில் நானும் சிலமுறை கோபித்துக்கொண்டு தாய்வீடு போனதுண்டு.

அந்த சின்னசின்னப் பிரிவுகளும், அந்த நேரத்தில் நான் எடுத்த முடிவுகளும் என் கணவருக்கு என் மீது அதிக அன்பை ஏற்படுத்தியது. அதன்பின்பு அவர் முழுமையாக என்னைப் புரிந்துகொண்டார். மாமியாரும் என்னைப்பற்றி நன்றாகத் தெரிந்துகொண்டார். அதன் பிறகு எங்கள் வாழ்க்கையில் அதிக மகிழ்ச்சி நிலவியது.

என் கணவரைப்பற்றி நான் நிறைய விஷயங்கள் சொல்ல வேண்டியது இருக்கிறது. அவர் கணக்கில் மனித கம்ப்யூட்டர் போல் செயல்படுவார். கணக்கில் புலி என்பார்களே அதற்கு அவர் ஓர் உதாரணம். கல்வித் திறமை அவரை உதவி தலைமை ஆசிரியர் பதவிக்கு உயர்த்தியது. ஓரளவு பிடிவாத குணம் அவரிடம் உண்டு. திருமணமான புதிதில் சிகரெட் பிடிக்கும் பழக்கமும் இருந்தது.

கணக்கில் புலி – ஆசிரியர் பணி என்ற நிலையில் இருந்தாலும் அவரது அறிவுத் தாகம் அவற்றைவிடப் பலமடங்கு உயர்ந்ததாக இருந்தது. புதிய கண்டுபிடிப்புகள் அவர் ரத்தத்தில் ஊறிப்போய் காணப்பட்டது. கலைப் படைப்புகளுக்கு அவர் ஒரு முன்னோடி. ஏதாவது ஒரு பொருளைப் பார்த்துவிட்டால், மறுநாளே அதைவிடச்

சிறப்பாக அந்தப் பொருளை உருவாக்கிவிடுவார். பேசமாட்டார். அவரது செயல்கள்தான் பேசும்படியாக இருக்கும்.

என் கணவர் மனசாட்சிக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பார். அவர் மனசாட்சிபடி எடுத்த முடிவு ஒன்றை உங்களோடு பகிர்ந்து கொள்கிறேன்.

அது ஒரு மாலைநேரம். கணவர் என் அருகில் வந்து அமர்ந்தார். முக்கியமான முடிவுகள் எடுக்கும்போது அவரது பேச்சு, ஸ்டைல், உடல்மொழி போன்றவற்றில் வித்தியாசம் தென்படும். அன்றும் அவரிடம் அத்தகைய மாற்றங்கள் தென்படவே நான் அவர் சொல்லப்போவதை உற்று கவனிக்கத் தொடங்கினேன்.

'எனது சிந்தனை எப்போதுமே புதியவற்றையே தேடிச் செல்கிறது. நான் புதிய கண்டுபிடிப்புகள், புதிய தயாரிப்புகள் என்று செயல்பட்டுக்கொண்டிருக்கிறேன். என் கனவுகளைக்கூட அவைதான் ஆக்கிரமித்திருக்கின்றன. ஆனால் நான் பள்ளிக்கூடத்தில் கணக்கு வாத்தியாருக்கான அரசு சம்பளம் வாங்கிக் கொண்டிருக்கிறேன். அந்த சம்பளத்தை வாங்குவதால் என் கனவிலும், நினைவிலும் கணக்குப் பாடமும், என் பள்ளிப் பிள்ளைகளும்தான் இடம்பெற வேண்டும். நான் இப்போது வகுப்பு நேரத்தில் நல்லபடியாக என் மாணவர்களுக்கு கணக்கை போதித்தாலும் என் மனசாட்சி அதில் திருப்தி பெறவில்லை. அதனால் ஆசிரியர் வேலையைவிட்டு விடலாம் என நினைக்கிறேன். இன்னொரு பக்கத்தைப் பார்த்தால் நிறைய ஆசிரியர்கள் படித்துவிட்டு வேலை கிடைக்காமல் இருக்கிறார்கள். நான் வேலையை விட்டால் அவர்களில் யாராவது ஒருவருக்கு வாழ்க்கை கிடைக்கும்' என்றபடி, நான் என்ன பதில் சொல்லப்போகிறேன் என்று என்னைக் கவனித்தார்.

நான் 'உங்கள் மனசாட்சி சொல்வது சரிதான். ஆனாலும் இன்னும் ஒருமுறை யோசியுங்கள். அதன் பின்பு முடிவெடுங்கள்' என்று கூறினேன்.

`இதில் யோசிக்க என்ன இருக்கிறது? நான் இப்போது ஆசிரியர் வேலைபார்ப்பவராக இருக்கிறேன். இந்த வேலையை விட்டால், ஆயிரம் பேருக்கு வேலை கொடுப்பவராக மாறுவேன்` என்றார்.

அவ்வளவு நம்பிக்கை அவருக்கு இருந்தது. ஆசிரியர்ப் பணியில் அவருக்கு நல்ல சம்பளம் கிடைத்துக் கொண்டிருந்தது. அவர் நினைத்திருந்தால் அவ்வப்போது பள்ளிக்கூடத்தில் தலையைக் காட்டி, கணக்கு பாடத்தை நடத்திவிட்டு, கண்டுபிடிப்பு ஆய்வுகளையும் ஒரு பகுதியாக செய்திருக்க முடியும். ஆனால் அவர் மனசாட்சிபடி வாழ நினைத்தார். அதனால் மனசாட்சிக்கும், மனிதாபிமானத்துக்கும் கட்டுப்பட்டு உதவி தலைமை ஆசிரியர் பணியை ராஜினாமா செய்தார்.



# 5



## சாதனையோடு வந்த வேதனைகள்

**சா**தனை மனிதர்கள் நிறையபேர் இருக்கிறார்கள். அவரவருக்கென்று ஒரு துறை இருக்கிறது. அதில் சாதனைகளை நிகழ்த்திக்கொண்டே போகிறார்கள். அந்தத் துறையைத் தவிர்த்து, அடுத்த துறைகளில் அவர்களுக்கு பெரிய அளவில் ஆர்வம் ஒன்றும் இருக்காது. அடுத்த துறையைப் பற்றிய அறிவும் அவர்களிடம் குறைச்சலாகவே இருக்கும். ஆனால் அவர்களிலிருந்து மாறுபட்டு என் கணவர் பல்துறை அறிவு பெற்று பன்முகத்திறமை கொண்டவராகத் திகழ்ந்தார்.

அவர் ஆசிரியர் வேலையை விட்டதும், வேல் பார்மஸி என்ற நிறுவனத்தை தொடங்கினார். அங்கு ஒரு பரிசோதனைக் கூடத்தை நிறுவி தனிஆளாக அதில் புதிய ஆய்வுகளை மேற்கொண்டார். வேதியியல் ஆர்வம் அவருக்கு அதிகம். ரசாயனங்களின் சக்திகள் அவருக்கு அத்துப்படி! புதிய மருந்துப் பொருள்களை உருவாக்குவதில் முனைப்புடன் ஈடுபட்டார். சில மருந்துகளைக் கண்டுபிடித்து, தயாரிக்கவும் செய்தார்.

'அவர் ஈடுபடாத துறை, ஏதாவது இருந்ததா?' என்று யாராவது கேட்டால், அதற்கு யோசித்துதான் பதில் சொல்ல வேண்டும்!

அத்தனை துறைகளில் அவர் ஈடுபட்டார். சல்பா பவுடர், போரிக் பவுடர், டேபிள் சால்ட், டிஞ்சர், சாந்து, மை, ஓமம் வாட்டர் என்று பலவற்றையும் தயாரித்தார். இன்னொருபுறத்தில் பேப்பர் பொம்மை, மண் பொம்மை, பிளாஸ்டர் ஆஃப் பாரீஸ் பொம்மைகளை உருவாக்கிக் கொண்டிருந்தார்.

மாணவர்கள் நன்றாகப் படிக்க வேண்டும் என்ற கல்வி ஆர்வம் அவரிடம் மிகுந்திருந்தது. அதனால் உடற்கூறு பற்றி மாணவர்கள் நன்றாகப் படிப்பதற்காக மனித உடலை அப்படியே பாகங்களாகப் பிரித்து தரமான பிளாஸ்டர் ஆஃப் பாரீஸில் உருவாக்கினார். உச்சி முதல் பாதம் வரை உள்ள அத்தனை பிரிவுகளையும் தனித்தனியாக உடற்கூறு இயல்படி தயாரித்தார். மண்டை ஓடு, மூளை, கண், காது, மூக்கு, இதயம், கால், கை போன்ற உடல் பாகங்களை மிகுந்த நுட்பத்தோடு அவர் தயாரித்து பள்ளிகளுக்கு வழங்கியதால், என் கணவரது தயாரிப்புகள் பள்ளி மாணவர்களுக்கு பாடங்கள் ஆகின. தமிழ்நாடு முழுவதும் அவை மாணவர்களுக்குப் பயன்பட்டன. கரப்பான் பூச்சி, வண்ணத்துப்பூச்சி போன்றவை கூட அவர் தயாரிப்பில் இருந்து விட்டுப்போகவில்லை.

அவ்வளவு ஏன்?! கயிறு திரிப்பதற்குக்கூட அவர் ஒரு மெஷினை உருவாக்கினார். அதை கையாலே இயக்கி கயிறு திரிக்க வேண்டும். பலர் கயிறு திரிக்க அதனைப் பயன்படுத்தினார்கள். ஆனால் பெரும்பாலானவற்றில் அவர் எதிர்பார்த்த ஊக்கமும், அங்கீகாரமும் கிடைக்கவில்லை. அந்த வருத்தம் அவருக்குள் இருந்துகொண்டே இருந்தது.

இந்தியக் கலைப்பொருள்களுக்கு வெளிநாட்டில் நல்ல மவுசு இருப்பதை என் கணவர் உணர்ந்தார். அவர் தயாரித்த அற்புதமான பொம்மைகள் பற்றி கனடா நிறுவனம் ஒன்றுக்கு தகவல் கொடுத்தார். அந்த நிறுவனம் பொம்மைகளை வாங்கிக்கொள்ள முன்வந்தது. ஆர்டரின் பேரில் பொம்மைகளை விரைவாகத் தயாரித்து, கப்பல் மூலம் அனுப்பிவைத்தார். பொம்மைகள் போய்ச் சேர்ந்த தகவல்

கிடைத்தது. ஆனால் மாதங்கள் பலவாகியும் பணத்தை அவர்கள் அனுப்பித் தரவில்லை. இதனால் எங்கள் குடும்பத்தில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது.

அந்தக் காலகட்டத்தில் கடலூர் மஞ்சக்குப்பத்தில் சத்ய சாய்பாபா பஜன் நடக்கும். அப்போது அங்கு பலர் சென்று தங்கள் குறைகளை கடிதமாக எழுதி பாபாவின் காலடியில் வைப்பார்கள். நாம் எழுதி வைக்கும் கடிதங்களுக்கு அங்கேயே பதில் கிடைக்கும். அது முழுக்க முழுக்க நம்பிக்கையையும், ஆழ்ந்த பக்தியையும் சார்ந்த விஷயம்!

நான் என் கணவரிடம் `நமக்கு கனடாவிலிருந்து பணம் வரவில்லையே... நீங்கள் போய் எழுதி வையுங்கள். பதில் கிடைக்கும். விரைவாகவே நல்லதும் நடக்கும்` என்று கூறினேன். `அதிலெல்லாம் தனக்கு நம்பிக்கை இல்லை` என்று கூறிவிட்டார். அடுத்த சில நாள்களில் வெங்கட்ராமன் என்பவர் மூலமாக அங்கே என் கணவர் எழுதி வைத்திருக்கிறார்.

ஒருவாரம் கழித்து ஒருவர் வந்தார். `சாய்பாபா பஜனைக் கூடத்திலிருந்து, உங்களுக்கு பதில் வந்திருக்கிறது` என்றார். என் கணவர் எழுதிக்கொடுத்த குறிப்பில் `டைக்கும்` என்று பதில் எழுதப்பட்டிருந்தது. `கி` இல்லை. `கிடைக்கும்` என்பது அவ்வாறு குறிப்பிடப்பட்டிருந்திருக்கிறது. அந்த பதிலோடு மஞ்சள், குங்குமம் போன்ற பிரசாதங்களும் இருந்தன.

அடுத்த இரண்டே வாரத்தில் கனடாவிலிருந்து, பதில் வந்தது. பணமும் வந்து சேர்ந்தது. பெரும் மகிழ்ச்சி கொண்டோம்.

முதலில் என் கணவர் முருக பக்தராக இருந்தார். இந்த சம்பவம் நடந்த பிறகு பாபா மீது பக்திகொண்டார். பஜனைகளிலும் கலந்துகொள்ளத் தொடங்கினார். அதுவரை அசைவம் சாப்பிட்டு வந்தவர், அன்றிலிருந்து முழுமையாக சைவத்துக்கு மாறினார்.

1962-ம் ஆண்டு வாக்கில் என் கணவர் சாய் பாபாவின் மார்பளவு பொம்மைகளை தயாரிக்கத் தொடங்கினார். பிளாஸ்டர் ஆஃப் பாரீஸில்

அவற்றைத் தயாரித்து புட்டபர்த்திக்கு அனுப்பிவைத்தார். அங்கு கீற்றுக் கொட்டகைக் கடை ஒன்றை உருவாக்கி, சிவானந்தன் என்பவர் வியாபாரத்தை கவனித்தார். 50 ஆண்டுகளுக்கு முந்தைய அந்தக் காலகட்டத்தில் சாய் பாபாவின் ஆஸ்ரமம் 'ஆஸ்பெஸ்டாஸ்' கொட்டகையில் இயங்கிக்கொண்டிருந்தது. அப்போதே பக்தர்கள் நிறைய வந்துபோய்க்கொண்டிருந்தார்கள். ஆனாலும் சாய் பாபாவின் உருவ பொம்மை வியாபாரம் நன்றாக நடக்காததால், புட்டபர்த்தி வியாபாரத்தை என் கணவர் நிறுத்த வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது.

அப்போது நிலபுலன்கள் எங்களிடம் அதிகம் இருந்தாலும், அதிலிருந்து வருமானம் மிகக்குறைவாகத்தான் கிடைத்துக் கொண்டிருந்தது. என் கணவர் நாளொரு கண்டுபிடிப்பு, பொழுதொரு தயாரிப்பு என்றிருந்ததால், பணம் அதிகமாக தேவைப்பட்டுக்கொண்டே இருந்தது. கடன் வாங்கிக்கொண்டே இருந்தார். என்றாவது ஒருநாள் தனது கண்டுபிடிப்புகள் இந்திய அளவில் பேசப்படும், அப்போது எல்லாக் கடன்களையும் அடைத்துவிடலாம் என்று அவர் ஆழமாக நம்பியதால், கடன் அளவு அதிகமாகிக்கொண்டே போனது. அவரது பரிசோதனைகளும் அதிகமாகிக்கொண்டே இருந்தன.

என் கணவர் எளிமையாக வாழ்ந்தார். தந்தை கார் வைத்திருந்தாரே நாமும் அதுபோன்ற சௌகரிய வாழ்க்கை நடத்த வேண்டும் என்று அவர் நினைத்ததில்லை. சைக்கிளில் பயணம் செய்தார். டாக்டரின் மகன். நிறையப் படித்தவர் என்றாலும் அது அவர் தோற்றத்தில் தெரியாது. சாதாரண வேட்டி சட்டையில்தான் எப்போதும் தோன்றுவார். அதுதான் சௌகரியமாகவும், கம்பீரமாகவும் இருக்கிறது என்பார்.

அவரிடம் பழகியவர்களில் பலர், 'இவர் எப்போதாவது அதிர்ந்து பேசியிருக்கிறாரா?' என்று ஆச்சரியத்தோடு கேட்பார்கள். உண்மையிலே அவர் என்னிடமோ, எங்கள் குழந்தைகளிடமோகூட அதிர்ந்து பேசியதில்லை. கோபம் வந்தால், மிகவும் அமைதியாகிவிடுவார். 'பேசா மருந்து பெரு மருந்து' என்பது அவர் எங்களுக்கு உருவாக்கித் தந்த தத்துவம்.

# 6



## வயிற்றுக்குள்ளே என் குழந்தைகளிடம் நான் வளர்த்த அன்பு

கடலூரில் உள்ள வீட்டிலிருந்து 2 கி.மீ. தூரத்தில் புதுவண்டிப்பாளையம் அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் உள்ளது. அது, பழைமையும், சக்தியும் நிறைந்த முருகன் ஆலயம். திருக்கோவிலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்து இரண்டாம் குருமூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞான சிவாச்சாரிய சுவாமிகள் இத்தலத்து முருகனை வழிபட்டு 'முருகர் அந்தாதி' பாடிப் போற்றினார். இந்த சிவாச்சாரிய சுவாமிகள் கி.பி. 1769 முதல் 1832-ம் ஆண்டுவரை வாழ்ந்தவர். இப்படிப்பட்ட சக்தி நிறைந்த ஆலயத்தை வழிபடுவது நமக்குக் கிடைத்த வரமாகும். அந்த முருகர் அந்தாதியிலிருந்து ஒரு பாடலை நான் இப்போது பாடுகிறேன்.

**வேலாசரணம் சரணம் என் மேல் வெகுளாமல் இனி**

**மேலாயினும் கடைக்கண்பார் பருப்பதவேந்தன் மகள்**

**பாலா குறுமுனியார்க்கும் திருப்புகழ் பண்ணவர்க்கும்**

**ஆலாலம் உண்டவர்க்கும் உபதேசித்த என் ஆண்டவனே...**

இப்படி பாடிப் போற்றிய ஆலயத்தை என் மாமியார் மனோரஞ்சிதத்தின் பெற்றோர் பரிபூரணமாக நம்பி வழிபட்டு வந்திருக்கிறார்கள். அதன் பின்புதான் என் மாமியார் பிறந்திருக்கிறார்கள். அதனால் அகமகிழ்ந்த அவரது பெற்றோர் இந்த ஆலயத்துக்கு தங்கள் சொத்துகளில் ஒரு பகுதியை எழுதிவைத்திருக்கிறார்கள்.

இந்த ஆலயத்தில், பொங்கல் திருநாளையொட்டி ஆற்றுத்திருவிழா நடக்கும். அப்போது ஆற்றிலிருந்து உற்சவர் சிலையை இந்த வீட்டின் முன்பு கொண்டு வருவார்கள். இங்கு வைத்து பூஜைகள் எல்லாம் செய்துவிட்டு எடுத்துச் செல்வார்கள். என் வீடும் எங்கள் வாழ்க்கையும் அவ்வளவு ஆன்மிகமயமானது என்பதற்காக இதைச் சொல்கிறேன்.

என் மாமியார் நடத்திய இந்த சுப்பிரமணியசாமி மண்டகப் படியை, தொடர்ந்து ஒவ்வொரு வருடமும் நடத்திவருகிறேன்.

பங்குனி உத்திரத் திருநாளில் ஏராளமான பக்தர்கள் பால்குடம் சுமந்து, காவடி எடுத்து ஆடிக்கொண்டே எங்கள் வீட்டின் முன்னே வருவார்கள். அப்போது அரோகரா என்று ஆனந்தக் கூச்சலிடுவார்கள். அப்போது என் மாமியாரும் பக்திப் பரவசமாகிவிடுவார்கள். காவடி ஆடும் பக்தர் யாராவது ஒருவரிடமிருந்து காவடியை வாங்கிக்கொண்டு என் மாமியாரும் ஆடுவார்கள். அப்போது அந்தப் பகுதியே பக்திப் பரவசமாகிவிடும்.

எனக்கு அண்ணி ஒருவர் இருந்தார். என் மீது அதிக பாசம் கொண்ட அவர் பெயர் சாவித்ரி ராமானந்தம். அவரது கணவர் ராமானந்தம் ஓர் உயர் அதிகாரியாகப் பணியாற்றியவர். அவருக்குக் கீழ் நிறையப் பேர் வேலை பார்த்தார்கள். அவரது மனிதாபிமானத்துக்கு எடுத்துக்காட்டாக ஒரு விஷயத்தைச் சொல்லலாம் என்று நினைக்கிறேன். அது எல்லாருக்கும் நல்ல படிப்பினையாக இருக்கும்.

அது மாதக்கடைசி. ராமானந்தத்துக்கு இதய நோய் இருந்தது. அடுத்த சில நாள்களுக்குள் தனக்கு மரணம் ஏற்பட்டுவிடும் என்று அவர் உள்ளுணர்வு சொல்லியிருக்க வேண்டும் என நினைக்கிறேன்.

தனக்குக் கீழ் பணியாற்றும் அனைவருக்கும் சம்பளம் கொடுக்கவேண்டிய பொறுப்பு அவருக்கு உண்டு. தான் திடீரென்று மரணமடைந்துவிட்டால், தனக்கு மாற்றாக ஒரு அதிகாரியை நியமனம் செய்து, அவர் பொறுப்பேற்று சம்பளம் போடுவதற்கு ஒரு வாரத்துக்கு மேல் ஆகிவிடும். அந்த சிரமம் தனக்குக் கீழ் பணியாற்றுகிறவர் களுக்கு வரக் கூடாது என்பதற்காக எல்லாருக்கும் உரிய சம்பளப் பட்டியலையும் தயாரித்து, ‘செக்’கையும் போட்டு வைத்துவிட்டு ஓய்வெடுத்திருக்கிறார். அவர் உள்ளுணர்வு அறிவுறுத்தியபடி அடுத்த சில நாள்களிலேயே அவர் மாரடைப்புக்கு பலியாகிவிட்டார்.

வாழ்க்கையில் நாம் சந்திக்கும் ஒவ்வொரு மனிதரும் முக்கியமானவர்தான். அவர்கள் ஒவ்வொருவரும், ஒவ்வொரு விஷயத்தை நமக்கு உணர்த்துவார்கள். அதை நிதானமாகப் புரிந்துகொண்டால், ஒவ்வொருவரிடமிருந்தும் வாழ்க்கைக்குத் தேவையான புதுப் புது விஷயங்களை நம்மால் கற்றுக் கொள்ள முடியும். ராமானந்தம் தம் உயிருக்கு ஆபத்து ஏற்படும் நேரத்தில்கூட அடுத்தவர்களுக்குச் செய்ய வேண்டியவற்றைச் செய்துவிட வேண்டும் என்ற நல்ல கருத்தை உணர்த்திவிட்டுப் போனார். அந்தக் கருத்தை நான் இன்றும் கடைப்பிடித்துக்கொண்டிருக்கிறேன். நீங்களும் முடிந்த அளவு இதைக் கடைப்பிடியுங்கள். நாம் நமக்காக மட்டுமல்ல, நம்மைச் சார்ந்தவர்களுக்காகவும் வாழ வேண்டும்.

என் திருமணத்துக்குப் பிறகு, என் பெற்றோர் மீண்டும் ராஜ முந்திரி சென்றுவிட்டார்கள். நானும் அடிக்கடி என் பெற்றோரைப் பார்க்க அங்கு செல்வேன். ஒவ்வொரு முறையும் அம்மா எனக்கு வாழ்க்கைக்கு தேவையான ஏராளமான அறிவுரைகளைச் சொல்லி என்னை கணவர் வீட்டுக்கு அனுப்பிவைப்பார்.

பொதுவாக, பெண்களின் வாழ்க்கை திருமணத்தில்தான் தொடங்குகிறது என்பார்கள். அது உண்மைதான். ஆனால் அவள் தாய்மையடைந்து தாய் ஆன பின்புதான் அந்தத் தொடக்கம் அர்த்தமுள்ளதாக அமைகிறது என்பது என் கருத்து.

17 வயதில் மணவாழ்க்கைக்குள் அடியெடுத்துவைத்த நான், அடுத்த சில மாதங்களிலே தாய்மை அடைந்தேன். அது எனக்குள் மனமகிழ்ச்சியை ஒருபுறத்தில் ஏற்படுத்தினாலும், இன்னொரு புறத்தில் பிரசவத்தை நினைத்து நான் இளம் வயதுக்கே உரிய பயத்தையும் அனுபவித்தேன். அப்போது ஒருமுறை அம்மா என்னை ராமாயண நாடகம் ஒன்றைப் பார்க்க அழைத்துச்சென்றார்கள். அதில் ஒரு காட்சியில் ராமநாமத்தின் பெருமையைக் காட்டுவார்கள். அயோத்திவாசிகள் தங்களுக்கு கவலை ஏற்படும்போதெல்லாம் அந்தக் கவலையைத் தீர்க்கும் மருந்தாக ராமநாமத்தை ஜெபித்துக்கொண்டே இருப்பதை அந்த நாடகத்தில் காட்சிப்படுத்தியிருந்தார்கள். அதுபோல் நல்லது நடக்க வேண்டும் என்று ராமநாமத்தை ஜெபித்தால் நல்லதே நடக்கும் என்ற காட்சியும் அதில் இடம்பெற்றிருந்தது. அந்த விஷயத்தை நான் அப்படியே உள்வாங்கிக்கொண்டேன். கர்ப்பக்காலத்தில் நான் முழு நேரமும் ராமநாமத்தை ஜெபித்துக் கொண்டே இருந்தேன். அதனால் எனக்கு கர்ப்பக்கால பயமே ஏற்படவில்லை.

கர்ப்பக்காலத்தை நான் ரசித்து அனுபவித்தேன். வயிற்றுக்குள் இருக்கும்போதே என் குழந்தையோடு பேசுவேன். எனக்கு ஏதாவது முக்கியமான வேலை இருந்தால், 'அமைதியாகத் தூங்கு. அம்மாவுக்கு நிறைய வேலை இருக்கிறது...' என்று என் கனத்த வயிற்றில் கையை வைத்துக்கொண்டு என் குழந்தையிடம் சொல்வேன். அதுவும் கேட்டு அமைதியாகும். சாப்பிடச் செல்லும்போது, 'உனக்கும் சேர்த்து அம்மா சாப்பிடப்போகிறேன்' என்பேன். அது வயிற்றுக்குள் உதைக்கும்போது 'அம்மாவுக்கு வலிக்குது' என்று தட்டிக் கொடுப்பேன். உடனே உதைப்பதை நிறுத்திவிடும்.

இப்படிச் செய்தால் கர்ப்பிணிகளால் வயிற்றுக் குழந்தையை ரசித்து வளர்க்க முடியும். பிரசவத்தைப் பற்றிய பயமும் இருக்காது. குழந்தை வயிற்றுக்குள் இருக்கும்போதே நாம் அதை ரசித்து ரசித்து வளர்த்தால், அது உள்ளே இருந்து தாய் முகத்தைப் பார்க்கத் துடிக்கும். நாம் வெளியே இருந்து அதன் முகத்தைப் பார்க்க

ஆசையாக இருப்போம். நாமும் குழந்தையும் உணர்வுரீதியாகக் கலந்து ஒருவரை ஒருவர் முகம் பார்க்கும் ஆவலில் இருப்பதால் பிரசவத்தின் கடுமை குறைந்து போகும். இந்த நம்பிக்கை எனக்கு இருந்ததால், என் வயிற்றுக்குள் இருக்கும்போதே என் குழந்தைகளிடம் நான் பாசத்தை விதைத்துவிட்டேன். அதனால்தான், என் குழந்தைகள் ஆறு பேரும் ஆறு முகங்களாக இருந்து பன்னிரண்டு கரங்களுடன் என்னை கடுகளவுகூட அன்பு குறையாமல் கவனித்துக் கொள்கின்றனர்.

என் பிரசவ அனுபவத்தைப் பாடமாகக் கொண்டு தாய்மார்களாகிய நீங்களும் கர்ப்பம் ஆவதிலிருந்தே உங்கள் வயிற்றுக் குழந்தையோடு பேசுங்கள். அன்போடு வருடுங்கள். (நம்பிக்கை இருந்தால்) ராமநாமம் சொல்லுங்கள். அந்தக் குழந்தை நெருக்கடி தராமல் பிறந்து, ஜென்மம் முழுவதும் உங்களிடம் அன்பு செலுத்தும். (இதர மதத்தினர் அவரவர் மத நற்சிந்தனைக் கருத்துகளை அவ்வப்போது சொல்லலாம்!).

நான் தலைப்பிரசவத்துக்காகக் காத்திருந்தபோது அம்மா என்னிடம், ‘உனக்கு என்ன குழந்தை பிடிக்கும்?’ என்று கேட்பார். நான் ‘உன்னைப்போல் அழகான பெண் குழந்தை பிடிக்கும்’ என்பேன். எனக்குத் தெரிந்ததெல்லாம் என் அம்மாதான்! ‘அம்மாவுக்கு நான் குழந்தை’ என்பதுபோல, எனக்கு அம்மா! ‘குழந்தையானால் நன்றாக இருக்குமே’ என்று கற்பனை செய்துகொண்டு அப்படிச் சொல்வேன். அம்மாவோ ‘உனக்கு கடவுள் என்ன குழந்தையைக் கொடுத்தாலும் ஆரோக்கியமாக, அழகாக, அன்பு நிறைந்ததாகக் கொடுப்பார்’ என்று சொல்வார்.

# 7



## சுட்டிக் குழந்தைகளைத் தட்டி வளர்த்தேன்

**ரா**ஜமுந்திரியில் உள்ள என் அம்மா வீட்டில் எனக்கு தலைப்பிரசவம் ஆனது. ஆரோக்கியம், அழகு எல்லாம் குழந்தையிடம் இருந்தன. ஆனால் நான் எதிர்பார்த்தபடி பெண்ணாக அமையாமல் ஆணாகப் பிறந்தது.

அழகும், கம்பீரமும் என் குழந்தையிடம் அதிகம் இருந்ததால் (ராஜகுமாரன் என்பதை சுருக்கி) ராஜ்குமார் என்று பெயர் சூட்டினோம். டாக்டருக்குப் படிக்க வைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு, அதன்படியே என் அன்புக் குழந்தையை வளர்த்தேன்.

அடுத்து கொழுகொழுவென அன்பு மகன் அசோக்குமார் பிறந்தான். என் கணவர் அவனுக்கு அப்பெயரை சூட்டினார். நான் முதலிலே பெண் குழந்தைக்கு ஆசைப்பட்டேன் அல்லவா! ஆனால் முதல் இரண்டும் ஆண் குழந்தைகளாகிவிடவே, என்னிடம் பெண் குழந்தைக்கான ஏக்கம் அதிகமாயிற்று. சில விரதங்கள் அதிக மகிமை கொண்டவை என்பது எனக்குத் தெரியும். ஆண்டாள் நாச்சியார் விரதம் இருந்தால் பெண் குழந்தை பிறக்கும் என்று, ஆன்மிகப் புத்தகம் ஒன்றில் படித்தேன். அந்த விரதத்தை

மேற்கொண்டேன். பலன் கிடைத்தது. அன்பு மகள் பிறந்தாள். அந்தக் கடவுள் பெயராலே ஆண்டாள் என்று பெயர் சூட்டினோம்.

நான்காவது பிறந்த ஆண் குழந்தைக்கு எனது மாமனாரை நினைவுபடுத்திப் போற்ற ரங்கநாதன் என்று பெயர் சூட்டினோம். ஆனால் மாமனாரின் பெயரைச் சொல்லி அவனை அடிக்கடி அழைக்க முடியாது என்பதால், என் பாச மகனுக்கு எனக்குப் பிடித்த கடவுளான வேங்கடாசலபதி பெயரை வெங்கடேஷ் என்று வைத்தோம், பின்பு அதுவே சுருங்கி 'வெங்கி' என்றானது.

மீண்டும் பெண் பிறந்தாள். வெற்றி மங்கையாக அவள் திகழட்டும் என்று என் நேச மகளுக்கு விஜயலட்சுமி என்று பெயர் சூட்டினோம். கடைசியாகப் பிறந்த செல்லமகன் குமாரவேலுக்கு, பிறந்த நட்சத்திரத்தோடு தொடர்புபடுத்தி அந்தப் பெயரைத் தேர்ந்தெடுத்தோம்.

ராஜ்குமார், ரங்கநாதன், ஆண்டாள் மூவரும் ராஜமுந்திரி உள்ளித்தோட்டத் தெருவில் உள்ள எங்கள் வீட்டில் பிறந்தார்கள். அசோக்குமார், விஜயலட்சுமி, குமாரவேலுவும் கடலூரில் பிறந்தார்கள். அசோக்குமார்தான் என் கணவரால் கட்டப்பட்ட 'புதிய' வீட்டில் 1956–ல் பிறந்தான். 50 வருடம் கழித்து அந்த இடத்தில் நான் இப்போது வசிக்கும் ஹேமா இல்லம் உருவாக்கப்பட்டிருக்கிறது. அதே இடம், இயற்கை மாறாமல் அப்படியே இருக்கிறது.

என் குழந்தைகள் எல்லாரும் சுட்டித்தனம் நிறைந்தவர்கள். குறிப்பாக ராஜ்குமாரின் சுட்டித்தனத்தைத் தாங்க முடிய வில்லை. படி என்று சொன்னால், எங்கேயாவது போய் விளையாடிக்கொண்டிருப்பான். பிடித்துக்கொண்டு வந்து 'படி, பரீட்சை வருகிறது' என்று சொன்னால், கண் இமைக்கும் நேரத்தில் காணாமல் போய்விடுவான். தேடிப்போனால், முதலில் விளையாடிய இடத்தில் இருக்கமாட்டான். வேறு எங்கேயாவது விளையாடிக்கொண்டிருப்பான்.

விஜயலட்சுமி எடுத்ததற்கெல்லாம் அடம் பிடிப்பாள். பள்ளிக்கூடம் போவதற்கு முரண்டு பிடிப்பாள். ரங்கநாதன் நண்பர்களோடு கிரிக்கெட்

விளையாடப் போய்விடுவான். குமாரவேல் குளம், குட்டை என்று அலைந்துகொண்டிருப்பான். அசோக்குமார் யாரிடமும் பேசமாட்டான். எப்போதும் அமைதியாக இருப்பான். வீட்டை போதிமரமாக நினைத்துக்கொண்டு அவன் புத்தர் போல் உட்கார்ந்திருப்பான். அதனால் என் தந்தையார் செல்லமாக அவனை 'புத்துடு' என்று அழைப்பார்.

ரங்கநாதனுக்கு தங்கை விஜயலெட்சுமி மீது கொள்ளைப்பிரியம். அவள் கையைப் பாசமாக பற்றிப்பிடித்துக் கொண்டு 'எங்க பாப்பா' என்று கூறியபடியே பள்ளிக்கு அழைத்துச் செல்வான்.

என் கொழுந்தனார் ராமச்சந்திரன் என்பவர் பாண்டிச்சேரியில் உள்ள பள்ளிக்கூடம் ஒன்றில் ஆசிரியராக வேலை பார்த்துக்கொண்டிருந்தார். சனி மற்றும் ஞயிற்றுக்கிழமைகளில் கடலூரில் உள்ள எங்கள் வீட்டுக்கு வந்துவிடுவார். அந்த இரு நாள்களும் எங்கள் குழந்தைகள் அனைவரையும் விளையாடவும், குளிக்கவும் கடற்கரைக்கு அழைத்துச் செல்வார். அதனால் சனி ஞாயிற்றுக்கிழமைகளில் எங்கள் குழந்தைகளுக்கு கொண்டாட்டமாக இருக்கும்.

ஒரு தீபாவளி பண்டிகையின்போது எங்கள் வீட்டில் தீ விபத்து ஏற்பட்டது இப்போதும் என் மனக்கண் முன்னே நின்றுகொண்டிருக் கிறது. அப்போது எங்கள் வீட்டின் முன்னால் உள்ள 'சிட் அவுட்டில்' தென்னங்கீற்றால் கொட்டகை போட்டிருந்தோம். ராஜ்குமாருக்கு பத்து வயது இருக்கும். அசோக்குமார் மற்றும் ரங்கநாதனுடன் சேர்ந்து அவன் பட்டாசு கொளுத்திக்கொண்டிருந்தான். விளையாட்டுத்தனமாக அவன் ஒரு சங்கு சக்கரத்தைக் கொளுத்தியபோது அதில் இருந்து திடீரென்று தீப்பிழம்பு எழ பயந்து, தன்னையறியாமல் அந்த கீற்றுக் கொட்டகை மீது வீசிவிட்டான். சிறிது நேரத்திலே தீ மளமளவெனப் பரவி வீடெல்லாம் எரிந்துகொண்டிருந்தது. உடனடியாக தீயணைப்புத் துறைக்கு போன் செய்து, தண்ணீர் வண்டிகள் வந்து தீயை அணைத்தன. சங்கு சக்கரத்தைக் கொளுத்திப்போட்ட என் மூத்தமகன் மிகவும் பயந்துபோனான். நான் அவனுக்கு தைரியம் கொடுத்து இயல்புநிலைக்கு கொண்டுவந்தேன்.

விஜயலட்சுமிக்கு ஆறு வயதாக இருந்தபோது பிறந்தநாள் பரிசாக முக்கால் பவுன் தங்க வளையல்கள் இரண்டு வாங்கி, இரு கைகளிலும் போட்டுவிட்டோம். அப்போது என் மாமியார் 'எத்தனை பவுன் வளையல்?' என்று கேட்டார். நான் முக்கால் பவுன் என்று சொன்னேன். அதை உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருந்த என் மகள், உறவினர்கள் ஒவ்வொருவரிடமும் சென்று, 'இது முக்கால்... முக்கால் பவுன். எங்க அம்மா வாங்கித் தந்தது' என்று அன்று முழுவதும் கூறிக்கொண்டே இருந்தாள். குழந்தைத்தனமாக மகிழ்ச்சிப் பெருக்கில் அவள் அன்று கூறிக் கொண்டிருந்தது இன்றும் என் மனக்கண்ணில் நிழலாடுகிறது.

துரைக்கண்ணு என்பவர் அப்போது எங்கள் வீட்டிலுள்ள அனைவருக்கும் முடி வெட்டவும் சவரம் செய்யவும் வருவார். அவருக்கு பணத்துக்குப் பதில் பெருமளவு விளைபொருள்களைக் கொடுக்கும் பழக்கம் எனக்கு உண்டு. எனக்கு என் குழந்தைகள் மீது கோபம் வந்தால் 'துரைக்கண்ணுவிடம் உங்களை எல்லாம் சீடராக அனுப்பிவிடுவேன்' என்றும், 'நீங்கள் எல்லாம் மாடு மேய்க்கத்தான் லாயக்கு' என்றும் சொல்வேன். எதிர்காலத்தில் அதுவும் பலித்துவிட்டது. என் மகன் ரங்கநாதன் பலகோடிகள் புரளும் அளவுக்கு பால் மற்றும் பால் பொருள்கள் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கிறான். நான் சொன்ன மாட்டுக்கும் என் மகனின் தொழிலுக்கும் பொருத்தம் ஏற்பட்டுவிட்டது. என் இளையமகன் குமாரவேல் நேச்சுரல்ஸ் என்ற அழகு நிலையத்தில் 250 கிளைகள் தொடங்கிவிட்டான். துரைக்கண்ணுக்கு சீடராக அனுப்பாமலே இந்தியாவிலே அதிகமான பியூட்டிபார்லர்களை கொண்ட நிறுவனத்துக்கு தொழிலதிபர் ஆகிவிட்டான் என்று நான் வேடிக்கையாக நினைத்துக்கொள்வேன்.

என் மூத்த மகன் ராஜ்குமாருக்கு கற்பனைத்திறன் மிக அதிகம். என் கணவர் ஒருமுறை பிள்ளைகளுக்காக சிறிய 'புரஜெக்டர்' ஒன்றை வாங்கிவந்தார். ராஜ்குமாருக்கு அதைப் பார்த்து குஷி வந்துவிட்டது. எங்கிருந்தோ எம்.ஜி.ஆர். நடித்த 'ஆயிரத்தில் ஒருவன்' பிலிம்ரோல்

ஒன்றை வாங்கிவந்தான். அதைப் போட்டு ஓட்டி புரஜெக்டரில் காட்டினான். அதில் எம்.ஜி.ஆரும், நம்பியாரும் ஆக்ரோஷமாக சண்டை போட்ட காட்சிகள் இடம்பெற்றிருந்தன. அதைப் பார்ப்பதற்காக பெரும் கூட்டம் கூடிவிடும். ராஜ்குமார் ஆபரேட்டர் போன்று இருந்து அதை இயக்கிக்கொண்டிருப்பான். அந்தப் படத்தில் சத்தம் வராது. அவனே பின்னால் இருந்து சண்டைக்காட்சிக்கு 'டப்பிங்' குரல் கொடுப்பான். இந்த படக்காட்சி முடிந்தபிறகு அட்டையில் கத்தி தயாரித்துக்கொண்டு சண்டைபோட்டு விளையாடுவார்கள். ஒருமுறை 'சர்வர் சுந்தரம்' படத்தின் ரோலை வாங்கி வந்து புரஜெக்டரில் காட்டினான். நானும் என் பிள்ளைகளோடு அமர்ந்து நாகேஷின் நடிப்பைப் பார்த்து வியந்திருக்கிறேன்.

என் குழந்தைகளை வளர்த்ததில் என் மாமியார் மனோரஞ்சிதம் அவர்களுக்கும், சமையல் செய்யும் பெண்மணி ஆண்டாள் ஆயாவுக்கும், வேலைக்காரர் ராமுவுக்கும் நிறையப் பங்கு உண்டு. நான் என் குழந்தைகளுக்கு தாய்ப்பால், சாதம் போன்றவற்றை ஊட்டும்போதெல்லாம் பக்தி, நம்பிக்கை, சுயமரியாதை, கருணை, அடுத்தவர்களிடம் எதையும் எதிர்பார்க்காத தன்மை போன்ற நற்குணங்களையும் சேர்த்து ஊட்டினேன்.

என் கணவருக்கு குழந்தைகள் மீது அளவுகடந்த பாசம் உண்டு. திட்டமாட்டார். அடிக்கமாட்டார். அவ்வளவு ஏன்? அதிர்ந்து பேசக்கூடமாட்டார். அசோக்குமார் இரண்டு வயதுவரை நடக்கவில்லை. அது என் கணவரை ரொம்பவும் கவலைக்குள்ளாக்கியது. அதனால் அவனைத் தூக்கிக்கொண்டு கடற்கரைக்குச் செல்வார். கடற்கரை மணலில் கால்களைப் பதியவைத்து நடக்கும் பயிற்சி கொடுத்தார். அதன்பிறகு அவன் மெல்ல மெல்ல அல்ல, வேகமாகவே நடக்கத் தொடங்கினான்.

குழந்தைகளின் சுட்டித்தனம் அதிகமாகிக்கொண்டிருந்த அதேநேரத்தில் என் கணவர் குழந்தைகளிடம் மிகவும் மென்மையாக நடந்துகொண்டிருந்தார். அதிக அன்பும் காட்டிக்கொண்டிருந்தார். என்

கணவரின் அன்பான அணுகுமுறை என் குழந்தைகளிடம் எத்தகைய தாக்கத்தை உருவாக்கியது என்று ஆழ்ந்து கவனிக்கத் தொடங்கினேன். குழந்தைகளிடம் அடம் அதிகமாகிக்கொண்டே போனது. ஆனால் குழந்தை வளர்ப்பில் எனக்கென்று சில லட்சியங்களும், குழந்தைகள் பெரிய அளவுக்கு உயர வேண்டும் என்ற கனவுகளும் இருந்ததால் பாசத்தை மனத்தில் புதைத்துக் கொண்டு அதிரடியான வேஷம் ஒன்று போடத்தொடங்கினேன்.

முதல் வேலையாக குழந்தைகளிடம் 'உங்கள் அப்பா பார்க்கத்தான் சாது. பாய்ந்தால் புலி. ஒழுங்காக நான் சொல்வதைக் கேட்காவிட்டால், அவரிடம் சொல்லிக்கொடுப்பேன். அவர் தோலை உரிச்சுப்புடுவார்' என்று சொல்லத் தொடங்கினேன். அவர்கள் நம்பும்படியான காட்சிகளை அரங்கேற்றினேன்.

குழந்தைகள் அதை உண்மை என நம்பி, அப்பாவைப் பார்த்தாலே சற்று பதுங்கத் தொடங்கினார்கள். பார்த்தால் பசு பாய்ந்தால் புலி போல் இருக்கும் அப்பாவைவிட தவறு செய்தால் அவ்வப்போது நாலு தட்டு தட்டும் அம்மா பரவாயில்லை என்ற எண்ணத்தை குழந்தைகளிடம் உருவாக்கினேன். அப்போது குழந்தைகளிடமிருந்த பிடிவாதம் குறைந்தது. நான் அவர்களிடம் சொல்லும் விஷயங்களை காது கொடுத்து, கேட்டு கவனித்து அதன்படி நடக்கத் தொடங்கினார்கள்.

ஆனாலும் என் அன்பு மகன் ராஜ்குமாரின் சுட்டித்தனம் குறையவில்லை. அவனது எதிர்காலத்துக்கு அது நல்லதல்ல என்ற முடிவுக்கு வந்தேன். என் மனத்தைக் கல்லாக்கிக்கொண்டு 'நான் சொல்வதை நீ கேட்காவிட்டால் இனி உனக்கு மண்சட்டியில் பழைய சாதம்தான்' என்றேன். அதைத்தான் கொடுத்தேன். அடிக்கவும் செய்தேன். அவன் சிவந்த உடலில் நான் கொடுத்த அடிகள் ரத்தம்போல் உறைந்ததுண்டு. அப்போது அவனுக்கு வலித்ததைவிட பலமடங்கு எனக்கு வலித்தது. அடிவாங்கிய அவன் அயர்ந்து தூங்கிவிடுவான். அடி கொடுத்த நான் கனத்த மனதோடு தூக்கமின்றித் தவிப்பேன்.

ராஜ்குமார் மட்டுமல்ல, எங்கள் எல்லாக் குழந்தைகளும் என்னிடம் அடிவாங்கித்தான் வளர்ந்தன. அசோக்குமார் மட்டும் மற்றவர்களுக்கு அடிவிழும்போதே நைசாக நழுவிவிடுவான். குமாரவேல், நண்பர்களோடு சினிமாவுக்குப் போய்விடுவான். தெரிந்தவர்கள் வந்து புகார் சொன்னார்கள். நான் 'நீ நான் சொல்வதைக்கேட்டு படிப்பதாக இருந்தால் இங்க வா... இல்லாவிட்டால் நிரந்தரமாக தியேட்டருக்கே போய்விடு' என மிரட்டுவேன். அடிப்பேன். என் குழந்தைகள் வாங்கிய ஒவ்வோர் அடியிலும் அது தரும் வலியைவிட அன்பு அதிகம் கலந்திருந்தது. அதனால், 'அம்மா ஏன் அடிக்கிறார்கள்? நம்மிடம் அம்மா அதிகம் எதிர்பார்க்கிறார்களே? நாம் நம் வழியில் சென்றுகொண்டிருக்கிறோம். அம்மா காட்டிய வழியில் சென்றால் என்ன? அதுதானே சரியான வழியாக இருக்கும்' என்று என் குழந்தைகள் சிந்திக்கத் தொடங்கினார்கள்.

அந்த சிந்தனை அவர்கள் வாழ்க்கையில் நல்ல மாற்றங்களை ஏற்படுத்தியது. நான் எதிர்பார்த்தபடி என் பிள்ளைகள் வளரத்தொடங்கினார்கள்.

என் குழந்தைகள் தெய்வீகக் குழந்தைகள்! அதனால்தான் நான் போட்ட கோட்டை அவர்கள் தாண்டவில்லை.

'எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான் மண்ணில் பிறக்கையிலே, அவர் நல்லவர் ஆவதும் தீயவர் ஆவதும் அன்னை வளர்ப்பதிலே' என்றொரு திரைப்பாடல் வரி உண்டு. இதில் எனக்கு ஒரு திருத்தம் உண்டு.

எந்தக் குழந்தையும் நல்ல குழந்தையாகவும் பிறப்பதில்லை. கெட்ட குழந்தையாகவும் பிறப்பதில்லை. குழந்தை, குழந்தையாகத்தான் பிறக்கும். அது பச்சைமண். அதற்கு நல்லதும் தெரியாது. கெட்டதும் தெரியாது. இன்று பல தாய்மார்கள் குழந்தைகள் நல்லவர்களாக வளர வேண்டும் என்பதற்காக, நாணயத்தின் இன்னொரு பக்கம்போல் இருக்கும் கெட்டதை அவர்களுக்கு உணர்த்தாமலே வளர்த்துவிடுகிறார்கள். கெட்டவழி தெரியாவிட்டால், குழந்தைகளுக்கு

நல்லவழி புரியாது. குழந்தைகளை நல்லவர்களாக வளர்க்க விரும்புகிறவர்கள், அவர்களுக்கு கெட்டதையும் அதன் கெடுதலையும், அதன் பின்விளைவுகளையும் உணர்த்தித்தான் ஆக வேண்டும்.

நான் என் குழந்தைகளுக்கு நல்லவற்றை மட்டுமல்ல, கெட்டவை பற்றியும் சொல்லிக்கொடுத்தேன். நல்லது – கெட்டது இரண்டையும் விளக்கி, அதில் எது சிறந்தது என்று தேர்ந்தெடுக்கும் உரிமையை அவர்களுக்குக் கொடுத்தேன். அவர்கள் கெட்டவை பற்றித் தெரிந்ததால், நல்லவற்றைத் தேர்ந்தெடுத்தார்கள்! இன்றும் தேர்ந்தெடுக்கிறார்கள்!

என் அன்புக் குழந்தைகளைப் பற்றிக் கூறும்போது பளிச்சென ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது.

ஒருநாள் என் மூத்த மகன் ராஜ்குமார் என் மடியில் வந்து அமர்ந்துகொண்டான். அவன் அப்படித்தான். ஏதாவது நெருடலான கேள்வியை என்னிடம் கேட்க வேண்டும் என்றால் இப்படித்தான் மடியில் அமர்ந்து, அப்பாவித்தனமாக முகத்தை வைத்துக்கொண்டு பேசத்தொடங்குவான்.

'இன்னைக்கு என்ன கேட்கப்போகிறானோ!' என்று நான் மனத்துக்குள் நினைத்துக்கொண்டு, முகத்தை இன்னொரு பக்கமாகத் திருப்பிக்கொண்டேன். அப்படி திருப்பினால், அவன் தனது பிஞ்சுக்கரத்தால் என் மோவாயை அவன் பக்கமாகத் திருப்பிக்கொண்டு பேச்சைத் தொடங்குவான். அவனது அந்தத் தொடுதல் எனக்கு மிகச் சுகமான உணர்வாக இருக்கும்.

வழக்கம்போல் என் முகத்தை பிஞ்சு விரல்களால் தொட்டுத் திருப்பிக்கொண்டு 'அம்மா! நீ, நான், அசோக், ஆண்டாள் எல்லாரும் வெள்ளையா இருக்கோம். அப்பா, அப்பம்மா, வெங்கி, விஜி (விஜயலட்சுமி) நான்கு பேரும் ஏம்மா கறுப்பாக இருக்காங்க...?' என்று கேட்டான்.

'இப்படி கேட்கிறானே... இவனுக்கு என்ன பதிலைச் சொல்றது' என்று நான் சிந்தித்துக்கொண்டிருக்க அவனே, அதையொட்டிய இன்னொரு கேள்வியையும் போட்டான். 'நாமெல்லாம் பால் சாப்பிடுறதால வெள்ளையா இருக்கோம்... அவங்க காபி சாப்பிடுறாங்க. அதனால கறுப்பா ஆயிட்டாங்களா?' என்றான்.

என் பிள்ளைகள் எனக்கு எந்த விதத்திலும் வித்தியாசமாகப் படவில்லை. என் பிள்ளைகள் மேலே ஒரே மாதிரி நான் அன்பு வைத்திருந்ததாலே அந்த கலர் வித்தியாசம்கூட என் கண்ணில் படவில்லை. என் பிள்ளைங்க 6 பேரும் என்னைப் பொருத்தவரையில் இன்றைக்கும் ஒரே கலர்தான். அவர்களிடம் நிறத்தாலோ, மனத்தாலோ அன்பாலோ எந்த வித்தியாசமும் இதுவரை இல்லை!

சரி... என் மூத்த பையன் கேட்ட கேள்விகளுக்கு நான் என்ன பதில் சொல்லி இருப்பேன்னு நினைக்கிறீங்க?!

அவன் நான்கு வயதிலே கேட்ட கேள்விக்கு 'நாளைக்கு பதில் சொல்றேன்டா' என்று நைசாக நழுவினேன். இன்னும் அதற்கு பதில் சொல்லலை! என்ன பதில் சொல்லறதுன்னு எனக்கும் புரியலை.

இத்துடன் தொடர்புபடுத்திப் பார்க்கும்போது என்னைப் பாதித்த இன்னொரு சம்பவத்தையும் சொல்லித்தான் ஆக வேண்டும். என் குழந்தைகள் சிறியவர்களாக இருந்த காலகட்டத்தில் கடலூரில் எங்கள் வீட்டுப் பகுதியில் பெரிய தோப்புக்குள் தனித்தனி வீடுகள் இருக்கும். ஒருவருக்கொருவர் குடும்பத்தோடு அறிமுகமாகிக் கொள்ளும் வாய்ப்புகளும் குறைவு. எங்கள் வீட்டுக்கு சற்றுத் தூரத்தில் தாமோதர முதலியார் என்பவரது அக்காள் சுந்தரி அம்மாள் என்பவர் குடியிருந்தார். அவரை ஒருமுறை லேடீஸ் கிளப்பில் சந்தித்தபோது அவர் என்னிடம் நலம் விசாரித்துவிட்டு உன்னுடைய குழந்தைகளை எல்லாம் அழைத்துக்கொண்டு என் வீட்டுக்கு வா என்றார். அவர், வயதில் பெரியவர், தனிப்பட்ட முறையில் என் மீது அன்பும் செலுத்துபவர். அதனால் எனது அன்புக் குழந்தைகள் ஆறு பேரையும் அழைத்துக்கொண்டு, அவரது வீட்டுக்குச் சென்றேன். அவர் என்

குழந்தைகளை மொத்தமாகச் சேர்த்து அதற்கு முன்னால் பார்த்ததில்லை.

தாமோதர முதலியார் வீடு பெரியது. உள்ளே வகைவகையான சோபா செட்கள் போடப்பட்டிருந்தன. அவற்றைப் பார்த்ததும் என் பிள்ளைகள் ரெங்கநாதனுக்கும், விஜயலட்சுமிக்கும் உற்சாகம் பொங்கிவிட்டது. மற்ற நான்கு குழந்தைகளும் அமைதியாக சோபாவில் அமர்ந்திருக்க, ரெங்கநாதனும், விஜயலட்சுமியும் சோபாவில் ஏறி ஆட்டம் போடத் தொடங்கினார்கள்.

எங்களை வரவேற்று, உபசரிக்க காபி மற்றும் இனிப்பு வகைகளைத் தயாரித்துக்கொண்டிருந்த சுந்தரி அம்மாள், சமையல் அறையில் நின்றபடியே என் குழந்தைகளின் ரகளையைப் பார்த்துக்கொண்டிருந் திருக்கிறார். ரெங்கநாதனையும், விஜய லட்சுமியையும் சுட்டிக்காட்டி 'ஹேமா... அந்த இரண்டு குழந்தைகளும் யாரு? அமைதியாக உட்கார்ந்திருக்கிற உன் குழந்தைகளை மட்டும் வீட்டில் வைத்துக்கொள். அந்த இரண்டு குழந்தைகளையும் வெளியே போகச்சொல்' என்றார்.

எனக்கு தூக்கிவாரிப்போட்டது. விஜயலட்சுமியையும், ரங்க நாதனையும் அப்படியே அள்ளி அணைத்துக்கொண்டு, 'இவங்களும் என் பசங்கதான்' என்றேன். நிறத்தை வைத்து தவறாக கணித்துவிட்ட சுந்தரி அம்மாள் தனது தவற்றை உணர்ந்து என்னிடம் மன்னிப்பு கேட்டார்.

என் பிள்ளைகளில் ரங்கநாதன்தான் மிகவும் ஒல்லியாக இருப்பான். கவனிப்பாரற்ற குழந்தை போன்ற தோற்றம் அவனிடம் இருந்ததால், என் அம்மா சக்குபாய்க்கு அவன் மீது அதிகப் பிரியம். அவனைக் கீழே விடமாட்டார். எப்போதும் தூக்கி வைத்து கொஞ்சிக்கொண்டே இருப்பார்.

என் அம்மா, ரங்கநாதனின் கையைப்பார்த்து, காலைப்பார்த்து அவனது எதிர்காலத்தை கணித்து சொல்லிக்கொண்டிருப்பார். அவனது தலை,

பாம்புத்தலை போன்றிருக்கும். அதைப்பார்த்து என் அம்மா, 'உன் தலை அதிர்ஷ்டமானது. நீ எதைத் தொட்டாலும் துலங்கும். உன்னிடம் ஒன்று இருந்தால் அதை ஆயிரமாக மாற்றிவிடுவாய்' என்பார். குழந்தைப் பருவத்தில் அதைக்கேட்டு சிரித்த அவன், சிந்திக்கத் தெரியும் அளவுக்கு வளர்ந்தபின்பு, 'எனக்கு பாம்புத் தலையால் அதிர்ஷ்டம் ஒன்றும் இல்லை. ஒருவேளை என் தலைக்குள் இருக்கும் மூளையின் சிந்தனையில் அதிர்ஷ்டம் இருக்கலாம்' என்பான். அவனுக்கு நினைவு தெரிந்த காலத்திலே, அவனது அறிவு மீது அவனுக்கு அவ்வளவு நம்பிக்கை வந்துவிட்டது.



# 8



## நான் பள்ளி திறந்தேன்...

## சாய்பாபா பயிற்சி தந்தார்...

மனிதராகப் பிறந்த எல்லாருக்குள்ளும் ஓர் ஏக்கம் இருந்துகொண்டேதான் இருக்கும். காலங்கடந்து நிறைவேறாத ஆசையை நாம் ஏக்கம் என்று சொல்வோம். எனக்குள்ளும் மிகப்பெரிய ஏக்கம் ஒன்று இருந்துகொண்டேதான் இருந்தது.

அது கல்விக்கான ஏக்கம்.

என் தந்தை நிறைய படித்தவர். என் அண்ணன், தம்பிகள் நிறைய படித்தவர்கள். அவர்களுக்கு மத்தியில் நான் வளர்ந்தும் அவர்கள் அளவுக்கோ நான் ஆசைப்பட்ட அளவுக்கோ எனக்கு படிக்கும் வாய்ப்பு கிடைக்கவில்லை. அதனால் அது எனக்குள் ஏக்கமாக மாறியது.

திருமணத்துக்குப் பிறகு அந்த ஏக்கம் தீரும் என்று நம்பினேன். தீரும் அளவுக்கு வாய்ப்பு கிடைக்கவில்லை. எனக்குள் அந்த ஏக்கம் அதிகமாயிற்று. அதன் விளைவாக எனக்குள்ளே இரண்டுவிதமான எண்ணங்கள் உருவாகின.

ஒன்று: எவ்வளவு காலம் ஆனாலும் தொடர்ந்து படிப்பேன். கல்விக்கு அப்பால் மருத்துவம், கலை, பூஜைகள் போன்றவற்றையும் கற்பேன்.

பலவகை கைவினைப் பொருள்கள் உருவாக்கவும் கற்றுக்கொள்வேன் என்று முடிவு செய்தது.

இரண்டு: `எனக்குள்ளே இருந்த கல்வி ஏக்கம்போல் எதிர்காலத்தில் எந்தக் குழந்தைக்கும் உருவாகக் கூடாது. அதனால் ஏழை என்றோ, மக்கு என்றோ எந்தக் குழந்தையும் புறக்கணிக்கப்படாமல் அத்தனை குழந்தைகளுக்கும் கல்வியும், வாழ்க்கை பொது விஷயங்களையும் கற்றுக்கொடுக்கும் விதத்தில் சிறந்த பள்ளியைத் தொடங்க வேண்டும். அதில் எல்லாக் குழந்தைகளுக்கும் நிறைவான கல்வியை வழங்க வேண்டும்` என்று முடிவு செய்தது.

எனக்குள்ளே இருந்த கல்வி ஏக்கம், இப்படி இரண்டுவிதமான முடிவுகளை எடுக்கவைத்தன. அவற்றை நடைமுறைப்படுத்தத் திட்டமிட்டேன்.

என் அன்புக்குழந்தைகள் வளரத் தொடங்கிவிட்டனர். அவர்கள் பள்ளிக்கும் செல்லத் தொடங்கினார்கள். அந்தக் காலகட்டத்தில் நான் முதல் வேலையாக, தமிழை முறைப்படி கற்கத் தொடங்கினேன். கடலூரைச் சேர்ந்த ஆசிரியர் ஆறுமுக முதலியார் எனக்கு தமிழ் கற்றுத்தந்தார். தமிழ் இலக்கிய புராண, இதிகாசப் பாடல்களை எல்லாம் கரைத்துக் குடித்தேன். பாடல்கள் இயற்றவும் கற்றுக்கொண்டேன்.

அப்பளம், ஊறுகாய், வடாகம் போன்றவற்றைத் தயாரிக்கவும் கற்றேன். அவற்றை நானே விதவிதமான சுவைகளில் தயாரிக்கத் தொடங்கினேன். பல்வேறு விதங்களில் வகைவகையான பொம்மைகளைத் தயாரிக்கவும் கற்றேன். அவற்றை எல்லாம் நான் கற்றுக்கொண்டிருந்த நேரத்தில் இறைவன் நான் பள்ளிக்கூடம் தொடங்குவதற்கான வாய்ப்பையும் உருவாக்கித் தந்தார். அதை இப்போது நினைத்தாலும் சிலிர்ப்பாகத்தான் இருக்கிறது.

பள்ளிக்கூடம் நடத்த வேண்டும் என்ற ஆசை எனக்கு ஏற்பட்டிருந்ததை, என் கணவரிடம் சொல்லி வைத்திருந்தேன். அவர் `சாஷே`யில் ஷாம்பு தயாரிக்கும் ஆராய்ச்சியில் மும்முரமாக

இருந்ததால், ‘அப்படியா?’ என்று கேட்டுவிட்டு அத்துடன் விட்டுவிட்டார்.

அந்த நேரத்தில் ஒருவர் பண்ருட்டியில் மழலைப்பள்ளி ஒன்றினை நடத்திவந்தார். 40 வருடத்துக்கு முன்பு கிராமியச் சூழலில் இருந்து மாறி கடலூர் சிறு நகரமாக உருவெடுத்துக்கொண்டிருந்த நேரத்தில், அந்த நபர் பண்ருட்டியிலிருந்து கடலூருக்கு வந்து, இங்கும் மழலையர் பள்ளிக்கூடம் நடத்தலாம் எனத் திட்டமிட்டார்.

எங்களுக்கு பரந்துவிரிந்த தோப்பு, அதன் உள்ளே நிறைய காலி இடம், சின்னச்சின்ன கட்டடங்கள் போன்றவை இருந்ததால், அவர் பள்ளிக்கூடம் நடத்த வாடகை இடம் கேட்டு எங்களை அணுகினார். அவரிடம் நான், என் கணவர், கணவரின் ஆசிரியர் வேணுகோபால் ஆகியோர் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது அவரது படிப்பைப்பற்றி எல்லாம் விசாரித்தோம். அவர் அடிப்படையான கல்வியைப் பெறாதவர் என்பதும், ஆர்வத்தின் காரணமாக பள்ளிக்கூடத்தைத் தொடங்கி, அதை வியாபாரமாகவே செய்துகொண்டிருக்கிறார் என்பதும் புரிந்தது. உடனே வேணுகோபால் ஆசிரியரிடம் நான், ‘ஆர்வம் மட்டும் உள்ள அவரே பள்ளிக்கூடத்தைத் தொடங்கி, வெற்றிகரமாக நடத்தும்போது, முறைப்படி கற்று, போதித்த நீங்கள் பள்ளிக்கூடம் தொடங்கினால் என்ன?’ என்று கேட்டேன்.

அந்தக் கேள்விதான் 1972 ஜூலையில் நாங்கள் ‘பாபா நர்சரி ஸ்கூல்’ தொடங்குவதற்குக் காரணமாக அமைந்தது. பள்ளி தொடங்குவதற்கு முன்னால் நான் சத்ய சாய் பாபாவிடம் சென்று ஆசி பெற்றேன்.

தொடக்கத்தில் உறவுப் பெண் கௌரி, மாலதி மற்றும் மூன்று ஆசிரியர்களைச் சேர்த்துக்கொண்டோம். முதலில் 60 பிள்ளைகள் சேர்ந்தார்கள். எல்.கே.ஜி. முதல் 5-ம் வகுப்புவரை பாடம் நடத்தினோம். வேல் பார்மஸி இருந்த கட்டடத்துக்கு மேல் பகுதியில் பள்ளிக்கூடம் இயங்கியது.

பள்ளிக்கூடத்தைத் தொடங்கி நடத்துவது அவ்வளவு எளிதாக இருக்கவில்லை. நான் ஒவ்வொரு குழந்தையையும் சிறந்த

மாணவனாக உருவாக்கிக் காட்ட வேண்டும் என்று சபதம் போட்டுக்கொண்டு பணியாற்றியது, எனக்கு நெருக்கடியையும் மன அழுத்தத்தையும் ஏற்படுத்தியது. அப்போதெல்லாம் எனக்கு ஆறுதலும், தேறுதலும் தேவைப்பட்டன. அதை நெருக்கமானவர்களிடம் எதிர்பார்த்தேன். அவர்களோ என் தன்னம்பிக்கையைக் குலைக்கும் விதத்தில், 'உனக்கு படிப்பும் இல்லை... அனுபவமும் இல்லை... எப்படித்தான் தொடர்ந்து நடத்தப்போகிறாயோ?' என்றார்கள். உடன் இருந்த முக்கியமான நபர் ஒருவர், அதுதான் என் காலை வாரிவிட சரியான நேரம் என்று நினைத்து எங்களிடம் இருந்து விடுபட்டு, 'தனியாக பள்ளிக்கூடம் தொடங்கப்போகிறேன்' என்று சொல்லிவிட்டுச் சென்றுவிட்டார்.

இப்படி அவர்கள் கூடுதலாகக் கொடுத்த நெருக்கடிகள், எனக்கு மன அழுத்தத்தை அதிகமாக்கி என் செயல்திறனைக் குறைக்கும் என்று சுற்றியிருந்தவர்கள் எதிர்பார்த்தார்கள். நானோ அதற்கு மாறாக என் மனத்தை அமைதிப்படுத்தி திட்டமிட்டுக்கொண்டு வேகத்தோடு விவேகத்தையும் கலந்து செயல்படத் தொடங்கினேன். அதைப்பார்த்து அந்த நபர்கள் ஆச்சரியப்பட வேண்டும் என்பது என் நோக்கமல்ல! நான் வளர்ந்து சாதித்துக்காட்ட வேண்டும் என்பதுதான் என் நோக்கமாக இருந்தது.

எனக்கு எப்போதுமே ஒரு பழக்கம் உண்டு. ஓடத்தொடங்கி விட்டால், என் பின்னால் யார் வருகிறார்கள், அவர்களுக்கும், எனக்கும் எவ்வளவு இடைவெளி இருக்கிறது என்றெல்லாம் பார்த்துக்கொண்டிருக்க மாட்டேன். நான் தலைகுப்புறக் கீழே விழுந்துவிடாத அளவுக்கு தலை தெறிக்கிற வேகத்தில் இலக்கை நோக்கி ஓடிக்கொண்டே இருப்பேன். அந்த இலக்கை அடைந்த பின்புதான் என் பின்னால் யாரெல்லாம் வருகிறார்கள். ஓடி வருகிற வழியிலே கீழே விழுந்தார்களா என்று திரும்பிப் பார்ப்பேன்.

நான் 5-ம்வகுப்பு வரை வெற்றிகரமாக நடத்திக்கொண்டிருந்த போது, 'சரியான நேரம் பார்த்து என்னிடம் இருந்து ஒருவர் பிரிந்து போய்

தனிப்பள்ளி தொடங்கினார்' என்றேன் அல்லவா! அவர் தோல்வி அடைந்திருந்தார். மிகுந்த அனுபவம் தனக்கு இருப்பதாகச் சொல்லிக்கொண்டிருந்த அவர், பள்ளியை மூடிவிட்டு என்னிடம் வந்தார். 'ஹேமா! நான் உங்களை தகுதிக் குறைவாக மதிப்பிட்டு விட்டேன். உங்கள் பள்ளியை திறமையாக வளர்த்துக்கொண்டிருக் கிறீர்கள். திடீரென்று உங்களிடமிருந்து பிரிந்து சென்று உங்களுக்கு நெருக்கடி கொடுத்ததற்காக என்னை மன்னித்துவிடுங்கள்' என்றார்.

'மன்னிக்கும் அளவுக்கு நான் பெரிய ஆள் இல்லை. நீங்கள் செய்ததும் தவறில்லை' என்றேன்.

எனக்கு கல்வி போதிக்கும் முறையை கற்றுத்தந்தவர், சாய் பாபா! பள்ளியைத் தொடங்கி கடுமையாக உழைக்கவேண்டிய நேரத்தில், சிலர் என்னைக் கைவிட்டபோதெல்லாம் நான் சாய் பாபா முன்னால்தான் போய் நின்றேன். ஒரு கட்டத்தில் அவர் என்னை ஒரு வாரம் அங்கேயே தங்க வைத்து, எப்படி பாடம் நடத்த வேண்டும்? மாணவர்களிடம் என்னென்ன விஷயங்களை பாடங்களை எப்படி எப்படி போதிக்க வேண்டும் என்றெல்லாம் எனக்கு கற்றுக்கொடுத்தார். அதை எல்லாம் உள்வாங்கிக்கொண்டு, என் அனுபவங்களையும் அதில் சேர்த்து நான் பாடத்திட்டத்தை தயாரித்து போதித்தேன்.

கல்வியோடு சேர்த்து நான் குழந்தைகளுக்கு வாழ்க்கையையும் கற்றுக்கொடுத்தேன். பள்ளிக்கூடத்தில் பகலுணவுக்கு குழந்தைகள் நிறைய உணவு கொண்டுவர அனுமதிக்கமாட்டேன். அவர்கள் பகல் உணவு அருந்தும்போது என் பார்வை எல்லாம் அவர்கள் மீதுதான் இருக்கும். பெரிய பாத்திரத்தில் சாப்பாடு கொண்டு வரும் குழந்தைகளின் அம்மாக்களை மறுநாளே அழைத்து, அளவைக் குறைத்து சமச்சீரான சத்துணவுகளைக் கலந்து அனுப்பச் சொல்வேன்.

கீரை, காய்கறிகளைச் சாப்பிடாத குழந்தைகள் யாரெல்லாம் என்பதை அவர்களது பெற்றோர் மூலம் தெரிந்துகொண்டு, அவர்கள் பகல் உணவில் கீரையை கட்டாயம் சேர்த்து அனுப்பும்படி கூறுவேன். அவர்களை என் அருகில் வைத்து உணவை உண்ணச் செய்வேன்.

அப்போது அவர்கள் கீரையைச் சாப்பிட யோசித்தால், அவர்கள் சாப்பிடும் அந்தக் கீரையில் என்ன சத்து இருக்கிறது? அதனை அவர்கள் அடிக்கடி சாப்பிட்டால் அவர்கள் உடல் வளர்ச்சி எப்படி இருக்கும்? மூளை வளர்ச்சி எப்படி இருக்கும்? உடலும் மூளையும் வளர்ந்தால் அவர்கள் கல்வி எப்படி மேம்படும்? அப்போது அவர்களால் படிப்பில், விளையாட்டில் எவ்வளவு பெரிய சாதனைகளை நிகழ்த்த முடியும்... என்றெல்லாம் பக்குவமாக எடுத்துச் சொல்வேன். அது அவர்களுக்குள் பெரிய மனமாற்றத்தை ஏற்படுத்துவதை நான் கண்கூடாகக் கண்டேன். அதுவரை 'கீரையா? வேண்டவே வேண்டாம்' என்று கூறி வந்த குழந்தைகள், நான் பக்குவமாகச் சாப்பிட வைத்த அன்றே வீட்டுக்குச் சென்று 'அம்மா! மறந்துவிடாமல் நாளைக்கும் கீரைக்கூட்டு செய்துகொடு' என்று கேட்டு, அம்மாக்களை ஆச்சரியப்பட வைத்த சம்பவங்கள் நிறைய உண்டு.

உள்ளங்கையில் உணவுபடாமல் சாப்பிட வேண்டும். பகலில் வயிறு நிறைய சாப்பிடக் கூடாது என்றெல்லாம் நான் கொள்கைகளை வகுத்து அமல்படுத்தினேன். இந்த ஒவ்வொரு கொள்கைக்கும் காரணங்கள் உண்டு. அவற்றை எல்லாக் குழந்தைகளுக்கும் விளக்குவேன்.

எனக்கு மிகப்பெரிய லட்சியம் ஒன்று உண்டு. அது என்னவென்றால், நான் வகுப்புகளை நடத்தி பள்ளியை நிர்வாகம் செய்யும்போது என்னிடமிருந்து அந்த வகுப்பு மாணவ – மாணவிகளுக்கு மட்டுமல்ல, அவர்களுக்கு கற்றுக் கொடுக்கும் ஆசிரியருக்கும் தேவையானவை கிடைக்க வேண்டும். ஒரு வருடம் முடியும்போது அந்த மாணவர்கள் மட்டுமல்ல, அந்த ஆசிரியரும் என்னிடமிருந்து புதிதாக எதையாவது கற்றுக்கொள்ள வேண்டும் என்று நினைப்பேன். என் இந்த லட்சியம் வெற்றிகரமாக நிறைவேறியது. என் பள்ளியில் படித்த மாணவ மாணவிகள் வாழ்க்கையில் உயர்ந்த நிலைக்குச் செல்வது ஒருபுறம் இருக்க, மறுபுறம் என்னிடம் வேலை பார்த்த ஆசிரியர்கள் பிற்காலத்தில் அரசு வேலை கிடைத்து பல்வேறு பள்ளிகளுக்கு வேலைக்குச் சென்றார்கள். அங்கெல்லாம் அவர்கள் திறமை பளிச்சிட்டதால் தனி

மரியாதை பெற்றனர். என்னிடத்தில் மாணவர்களும் வளர்ந்தனர். ஆசிரியர்களும் வளர்ந்தனர்.

சில ஊர்களில் கைராசியான டாக்டரும் இருப்பார். 'அவ்வளவுதான் இறந்துபோய்விடுவார்' என்று கருதப்படுகிற 'சீரியஸ் கேஸ்'களையும் அனுமதித்து பிழைக்க வைத்துவிடுகிற டாக்டரும் இருப்பார். இதில் கைராசி டாக்டரைத் தேடி அந்த ஊரில் இருப்பவர்கள் மட்டும் வருவார்கள். 'சீரியஸ் கேஸ்' பார்க்கும் டாக்டரைத் தேடி பக்கத்து ஊர்களில் இருந்தெல்லாம் வருவார்கள்.

என்னை 'சீரியஸ் கேஸ்'களை பார்க்கும் டாக்டர்போல் அக்கம்பக்கத்து ஊர்க்காரர்களும், அறிந்தவர்களும், தெரிந்தவர்களும் ஆக்கிவிட்டார்கள். அதனால் கடலூர் சுற்றுப் பகுதியில் எந்த மாணவனுக்கு 'மக்கு' என்று ஆசிரியர்கள் பெயர் சூட்டினாலும், என்னிடம் அழைத்து வந்துவிடுவார்கள்.

இந்த உலகத்தில் யாருமே மக்கு இல்லை என்ற கருத்து எனக்கு உண்டு. அதனால் 'எல்லாப் பிள்ளைகளும் சிறந்த பிள்ளைகள்தான்' என்று கூறி பள்ளியில் சேர்த்துக்கொள்வேன். அப்படி சேர்க்கப்படும் ஒவ்வொருவரையும் தனித்தனியாக வைத்து கண்காணிப்பேன். ஒரு மாணவனை ஒருநாள் கவனித்தாலே அவன் மக்கு என்று பெயரெடுக்க என்ன காரணம் என்பதைக் கண்டுபிடித்துவிடுவேன்.

- ❖ தன் மகன் சாப்பிடுவதே இல்லை என்று ஒருதாய் கூறினால் அதற்கு நான்குவிதமான காரணங்கள் இருக்கும்.
- ❖ அவனுக்கு பசிக்கவில்லை. பசிக்காததற்கு என்ன காரணம் என்று கண்டுபிடிக்க வேண்டும்.
- ❖ அவன் எதிர்பார்க்கும் ருசியில் அம்மா உணவு சமைக்காமல் இருக்க வேண்டும்.
- ❖ நேரத்துக்கு அவனுக்கு உணவு கிடைக்காமல் இருக்க வேண்டும்.

- உணவோடு சேர்த்து அன்பையும் அம்மா ஊட்டாமல் அவனை எரிச்சல் படுத்திக்கொண்டிருக்க வேண்டும்.

இதே மாதிரியான விஷயங்கள் படிப்பிலும் இருக்கிறது. வீட்டில் அம்மா, 'மகன் உணவு சாப்பிடுவதில்லை' என்கிறார். பள்ளிக்கூடத்தில் ஆசிரியர், 'மாணவன் படிப்பதில்லை... மக்கு' என்கிறார். அதுபோல இதற்கும் நான்குவிதமான காரணங்கள் இருக்கின்றன என்பதை நான் கண்டுபிடித்தேன்.

- அவனுக்கு புரிந்துகொள்ளும் சக்தியே இல்லாமல் இருப்பது.
- அவனுக்கு கல்வி மீது வெறுப்பு இருப்பது.
- அவனுக்கு பாடமே புரியாமல் இருப்பது.
- அவன் எதிர்பார்க்கும் விதத்தில் பாடங்களை ஆர்வமாக ஆசிரியர் சொல்லிக்கொடுக்காமல் இருப்பது.
- கல்வி அற்புதமானதுதான் என்றாலும் அதை அன்போடு போதிக்க வேண்டும் என்பதை ஆசிரியர்கள் உணராமல் இருப்பது.

'மக்கு' என்ற பெயரோடு என் முன்னால் அழைத்துக் கொண்டு வந்து நிறுத்தப்படும் ஒவ்வொரு மாணவன் மீதும் நான் இந்த நான்குவிதக் கோட்பாடுகளை அமல்படுத்துவேன். என் அருகில் உட்காரவைத்து 'அவனும் ஒரு புத்திசாலிதான்' என்பதை அவனுக்கு உணரவைப்பேன். பாடங்களை அரிச்சுவடியிலிருந்து தொடங்கி அவனுக்குப் புரியவைப்பேன். சூழ்நிலை அறிந்து அவனுக்கு சொல்லிக்கொடுப்பேன். அவனோடு நான் கண்டிப்பாக நடந்துகொண்டாலும் நான் புகட்டும் கல்வியோடு மிகுந்த அன்பையும் கலந்து கொடுப்பேன். இதுதான் என் கல்வி டெக்னிக். இதனை நான் வெற்றிகரமாக அமல்படுத்தியதால் 'மக்கு' என்ற முத்திரையோடு என் பள்ளியில் சேர்க்கப்பட்ட மாணவ/மாணவிகள், 'நல்ல மாணவன்' (Best Student) என்ற சிறப்போடு பள்ளிக்கல்வியை முடித்துவிட்டுச் சென்றார்கள்.

ஆனால் இது ஒன்றும் மந்திரத்தில் மாங்காய் விழும் தந்திரம் இல்லை. நிறைய உழைக்க வேண்டும். ஹோம்ஒர்க் செய்ய வேண்டும். இரவு

பகல் பாராது திட்டமிட்டுச் செயல்பட வேண்டும். அதை நான் செய்தேன். அதனால் எனக்கு இந்த வெற்றி சாத்தியமாயிற்று.

ஒருநாள் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. 250 மாணவ - மாணவிகள் அப்போது படித்துக்கொண்டிருந்தார்கள். எல்.கே.ஜி. முதல் ஐந்தாம் வகுப்புவரை நடந்துகொண்டிருந்தது. அன்று ஒரே ஓர் ஆசிரியைதான் வேலைக்கு வந்தார். அவரும், நானும்தான். எப்படி சமாளிக்கப் போகிறோம் என்று நான் யோசிக்கவில்லை. 'எப்படியாவது சமாளிக்கலாம்' என்ற நம்பிக்கையோடு களத்தில் இறங்கினேன். வகுப்புவாரியாக பிள்ளைகளைப் பிரித்து, எல்லாரையும் படிக்க வைத்துவிட்டேன். மற்ற நாள்களைவிட சிறப்பாக பிள்ளைகளின் மனத்தில் நிற்கும்படி அன்று பாடத்திட்டத்தையே மாற்றி அமைத்து, உற்சாகப்படுத்திவிட்டேன். அதனால் மாணவர்கள் மறுநாள், 'நேற்று மாதிரி இன்றும் வகுப்பு நடக்காதா?' என்ற ஏக்கத்தை வெளிப்படுத்தினார்கள்.

ஆனால் பள்ளிக்கூடத்தை நடத்துவது சாதாரண விஷயமாக இருக்கவில்லை. கடுமையாகப் போராடவேண்டி இருந்தது. வரவுக்கும் செலவுக்குமாக நான் கணக்குப்பார்த்து 'அட்மிஷன்' போட்டுக்கொண்டிருக்கும்போது, என் கணவர் பத்து குழந்தைகளை என்னிடம் அனுப்புவார். 'அந்தக் குழந்தைகள் எல்லாம் ஏழைகள். நமது பள்ளியில்தான் படிக்க வேண்டும் என்று ஆசைப்படுகின்றனர். அதனால் அவர்கள் இலவசமாகவே நம்மிடம் படிக்கட்டும்' என்று சொல்வார். உடனே அந்தக் குழந்தைகளை இலவசமாகவே படிக்க அனுமதித்துவிடுவேன்.

கல்விப்பணியில் நான் ஆத்ம திருப்தியடையும் அளவுக்கு சாதிக்க, என் சிந்தனைக்கும் திட்டங்களுக்கும் செயலாக்கம் கொடுத்த ஆசிரியர்களும் ஒரு காரணம். பள்ளி நாள்களில் அவர்களும் என்னோடு போட்டிபோட்டு உழைப்பார்கள். அவர்களின் உழைப்பை கௌரவிக்கும் விதத்தில் சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் அவர்களை நல்ல சினிமாக்களை பார்க்க தியேட்டருக்கும், நல்ல உணவைச்

சாப்பிட ஹோட்டலுக்கும் அழைத்துச் செல்வேன். ஆசிரியர்களை என் குடும்பத்தினராகக் கருதி கௌரவமாக நடத்தினேன்.

கல்வி பற்றிக் குறிப்பிடும்போது எனக்கு சிறு வயது நிகழ்வுகள் சில நினைவுக்கு வருகின்றன. என்னைவிட என் தம்பி சாந்திகுமார் 13 வயது சின்னவன். அவன் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது தினமும் அதிகாலை நான்கு மணிக்கே அவனை எழுப்பிவிடுவேன். அவனுக்கு சுவையாக டீ தயாரித்துக்கொடுத்து படிப்பதற்கு உற்சாகப்படுத்துவேன். அந்தப் பழக்கம் அவனிடம் தொடர்ந்ததால் அதிக மதிப்பெண்கள் பெற்று எளிதாக டாக்டர் படிப்பிலும் சேர்ந்துவிட்டான். அவன் டாக்டர் படிப்பை முடித்த பின்பு என்னைப் பார்க்கும் போதெல்லாம் 'பாப்பா! உன்னாலதான் நான் டாக்டர் ஆனேன்' என்று நன்றி பொங்கக் கூறுவான். அதை இப்போது நினைத்துப்பார்த்தால், எனக்கு சிறு வயதிலேயே அடுத்தவர்களைப் படிக்கவைக்கும் ஆற்றல் இருந்திருக்கிறது என்று நினைத்து சந்தோஷப்பட்டுக்கொள்வேன்.



# 9



## கடனால் ஏற்பட்ட காயங்கள்

இதுவரை நீங்கள் படித்ததிலிருந்து என் வாழ்க்கையில் மிக முக்கியமான கதாபாத்திரங்கள் மூவர் என்பதை உணர்ந்திருப்பீர்கள். ஒன்று நான், இரண்டு என் கணவர், மூன்று என் ஆறு அன்புக் குழந்தைகள்.

நான் பள்ளிக்கூடத்தைத் திறந்து வாழ்க்கையில் கடுமையாகப் போராடிக் கொண்டிருந்தேன். என்னிடம் பயிலும் குழந்தைகளை நன்றாகப் படிக்க வைத்துவிட வேண்டும் என்ற வேகம், வெறி எனக்குள் ஏற்பட்டிருந்தது என்றே சொல்ல வேண்டும். நான் கல்விப்பணியில் என்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டிருந்த நேரத்தில் என் அன்புக்குழந்தைகள் ஆறு பேரும் ஆறுமுகங்கள் போல் ஒவ்வொரு வித்தியாசமான துறைகளில் படித்துக்கொண்டிருந்தார்கள்.

என் தலை மகன் ராஜ்குமாரை டாக்டருக்கு படிக்க வைக்க வேண்டும் என்பது என் மிகப்பெரும் ஆசை. நிறைய மார்க் வாங்கியிருந்தான். ஆனாலும் மருத்துவம் படிக்க இடம் கிடைப்பதில் பெரும் நெருக்கடி ஏற்பட்டது. எங்களால் முடிந்த அத்தனை முயற்சிகளையும் எடுத்தோம்.

ஆனால் பலன் 'பூஜ்யம்' ஆகத்தான் இருந்தது. முயற்சி செய்தவர்கள் எல்லாரும் கடைசியில் 'ஏதாவது மிராக்கிள் நடந்தால்தான் உன் பையனுக்கு சீட் கிடைக்கும்' என்று கையை விரித்துவிட்டுச் சென்றுவிட்டார்கள்.

'மனித முயற்சிகள் முடிந்துவிட்டன. இனி கடவுள் முயற்சிதான் கைகொடுக்கும்' என்று நான் நினைத்துக்கொண்டிருந்தேன். அந்த நேரத்தில், கடைசியாக முயற்சி செய்தவர், 'ஏதாவது அதிசயம் நடந்தால்தான் உண்டு...' என்று சொன்னார் அல்லவா? அந்த வார்த்தை என் மனத்தில் அப்படியே ஒட்டிக்கொண்டது.

என் வாழ்க்கையில் அதிசயம் நிகழ்த்தும் சக்தி நிறைந்தவர், சாய் பாபாதான். அவரை நம்பினேன். அவர் மூலம் என் மகனுக்கு நிச்சயம் டாக்டர் சீட் கிடைக்கும் என்று நம்பினேன். அந்த நிமிடமே தனியாகக் கிளம்பி, ரயிலைப்பிடித்து புட்டபர்த்திக்குப் போய்ச் சேர்ந்துவிட்டேன். அங்கே பெருங்கூட்டம். போய்ச் சேர்ந்த பின்புதான் என்னைப் பற்றிய நினைவே எனக்கு வந்தது. உயர்ந்த விலை உள்ள புடைவை கட்டி, நகைகளும் அணிந்துகொண்டு நான் சென்றிருந்தேன். கடலூரில் ஒரு திருமண நிகழ்ச்சியில் கலந்துகொண்டு அப்படியே ரயிலைப் பிடித்திருக்கிறேன். அதனால் கழுத்தில் நகைகளும் இடம் பிடித்திருந்தன.

'குருவே அதிசயங்கள் நிகழ்த்தும் தருவே... எப்படியாவது என் மகனுக்கு இடம் கிடைத்திட வேண்டும்' என்று பிரார்த்தனை செய்தேன். இரண்டு நாள்கள் தங்கியிருந்து என்னை வருத்திக்கொண்டு வழிபாடு செய்தேன். என் கோரிக்கையை மீண்டும் மீண்டும் வைத்தேன். சாய் பாபாவே என் முன்னால் வந்து புன்னகை செய்தார். உடனே நிச்சயமாக நான் எதிர்பார்க்கும் அதிசயம் நிகழ்ந்துவிடும் என்ற நம்பிக்கை ஏற்பட்டது.

கடலூருக்கு ரயிலில் திரும்பினேன். அது எனக்கு ஒரு பயம் மிகுந்த பயணமாக இருந்தது. நான் ஒருபோதும் தனியாக ரயில் பயணம்

செய்ததில்லை. இங்கிருந்து புட்டபர்த்திக்குச் சென்றபோது தனியாகச் சென்ற உணர்வே எனக்கு ஏற்படவில்லை. கூட்டத்தோடு கூட்டமாகச் செல்வதுபோல்தான் தோன்றியது.

திரும்பிவரும்போது கழுத்தில் கிடக்கும் நகைகளைப் பற்றி நான் கவலைப்பட்டேன். அதுவும் அந்த ரயில் திருப்பாதிரிப்புலியூர் ரயில் நிலையத்தை நள்ளிரவில்தான் வந்தடையும். அப்போது ரயில் நிலையத்தில் ஆள் அரவமே இருக்காது. என்ன செய்வது என்று பயத்தோடு ரயில் நிலையத்துக்கு வந்தபோது (நாற்பது வருடங்களுக்கு முந்தைய காலத்தை நினைத்துப் பார்த்துக்கொள்ளுங்கள்) நான் மட்டும்தான் இறங்கினேன். காந்திஜி சொன்னதுதான் நினைவுக்கு வந்தது. 'கழுத்து நிறைந்த நகையோடு நள்ளிரவில் ஒரு பெண் தனியாக என்றைக்குச் செல்லமுடிகிறதோ அந்த நாள்தான் உண்மையான சுதந்தரம் கிடைத்தநாள்' என்றாரே! அதெல்லாம் நினைவுக்கு வந்தது. கழுத்து நிறைய நகை இல்லை. குறைவாகத்தான் அணிந்திருந்தேன் என்றாலும், அது காந்திஜி சொன்ன நள்ளிரவு நேரம்!

ரயில் நிலையத்தில் நின்றுகொண்டு அங்கும் இங்கும் திரும்பிப் பார்த்தேன். 'யாருமே இல்லை' என்று என் உதடுகள் என்னை அறியாமல் உச்சரித்த நேரத்தில், ஒரு குதிரை வண்டி என் முன்னால் வந்து நின்றது. 'பள்ளிக்கூடம் நடத்துற அம்மாதானே நீங்க..? ஏறுங்க... உங்க வீடு எனக்குத் தெரியும். உங்களை அங்கே கொண்டு விட்டுச்செல்கிறேன்' என்று வண்டிக்காரர் சொன்னார். இதுவும் அதிசயம்தான். வண்டியில் ஏறி உட்கார்ந்தேன். வீட்டில் கொண்டுபோய் விட்டார். நன்றி சொன்னேன். அந்த நல்ல மனிதருக்கு! (அவரை அன்றிலிருந்து தேடுகிறேன். இன்றுவரை அவர் என் கண்ணில் படவில்லை. இதுவும் அதிசயம்தான்).

மனைவி எதுவும் சொல்லாமல் இரண்டொரு நாள்கள் திடீரென்று கோயிலுக்குப் போய்விட்டால் கணவருக்கு கோபம் வரத்தானே செய்யும்? நான் என் கணவரிடம் சொல்லாமல் போய்விட்டதால் என்

கணவருக்கும் கோபம் வந்தது. முகத்தை இறுக்கமாக வைத்துக் கொண்டு உம்மென்று பேசா மௌனியாக இருந்தார். எத்தனை நாள்கள் தெரியுமா? 30 நாள்கள் அவர் என்னிடம் பேசவில்லை. அதற்குள் எல்லாரும் பேசும்படியான அந்த அதிசயம் நிகழ்ந்தது. கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரியில் என் மகன் ராஜ்குமார், 'டாக்டர் சி.கே. ராஜ்குமார்' ஆவதற்காக இடம் கிடைத்தது. எல்லாரும் மகிழ்ந் தோம். கணவரும் வாய் திறந்து மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார். என் அன்பு மகன் அங்கே கண் மருத்துவம் படித்தான்.

அப்போது என் இரண்டாவது அன்பு மகன் அசோக்குமார் வக்கீலுக்குப் படித்துக்கொண்டிருந்தான். அன்பு மகள் ஆண்டாளும் ஆர்வமாக மருத்துவம் கற்றுக்கொண்டிருந்தாள். ஆசை மகன் ரெங்கநாதன் B.Sc., கற்றான். பாசமகள் விஜயலட்சுமி, கல்லூரிக்குள் அடியெடுத்து வைத்திருந்தாள். என் கடைக்குட்டி செல்லம் குமாரவேல் மட்டும் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தான்.

இத்தனை பேரும் படிப்பதற்கு எவ்வளவு பணம் செலவாகும் என்று நினைத்துப் பாருங்கள். அப்போது வீட்டைச்சுற்றி இருந்த எங்கள் விளைநிலங்களில் விவசாயம் நடக்கத்தான் செய்தது. ஆனால் 'சுண்டைக்காய் கால் பணம். சுமை கூலி முக்கால் பணம்' என்ற கணக்கில்தான் அது நடந்துகொண்டிருந்தது.

பொருளாதார நெருக்கடியில் எங்கள் குடும்ப வண்டி தட்டுத்தடுமாறி ஓடிக்கொண்டிருந்த நேரத்தில், என் கணவர் அடுத்தடுத்து புதிய கண்டுபிடிப்புகளில் முனைப்புடன் ஈடுபட்டுக்கொண்டிருந்தார்.

அவரது மூளை அற்புதமான சக்தி படைத்தது. அவர் வேல் பார்மசியை ஆரம்பித்து 'ரீபேக்கிங் பிசினஸ்' செய்தபோது, 'அடுத்தவர்கள் மொத்தமாக தயாரித்து தந்ததை, நாம் சின்னச்சின்ன பாக்கெட்டுகளில் அடைத்து விற்பதில் என்ன திறமை இருக்கிறது?' என்று நினைத்து, புதிய புதிய பொருள்களைத் தயாரிக்கத் தொடங்கினார். அப்போது வந்தது எங்களுக்கு சோதனைக்காலம்! பணத்தட்டுப்பாட்டில் சிக்கித் தடுமாறினோம்.

என்னுடைய 38 வயது வரை எனக்கு கஷ்டம் தெரியாது. நஷ்டம் தெரியாது. என் தேவைக்கு மீறிய பணம் எப்போதும் என் அருகில் இருந்தது. அடுத்தவர்களுக்கு நான் அதைக் கொடுத்தபோது வாங்கியவர்கள் அதன் மதிப்பை உணர்ந்தார்கள். கொடுத்த எனக்கு எவ்வளவு கொடுக்கிறோம் என்ற மதிப்பே தெரியவில்லை. நான் கஷ்டப்படவே இல்லை என்பதால், நான் கொடுத்த பணத்துக்கு உண்மையில் எவ்வளவு மதிப்பு என்று எனக்குத் தெரியாது. ஆனால் கையில் பணம் இல்லாத நிலையில் ஒவ்வொரு ரூபாயும் எவ்வளவு மதிப்புமிக்கது என்ற உண்மை எனக்கு புரிந்தது.

அந்தக் காலகட்டத்தில் என் கணவர் மூன்றுவிதமான மாத்திரைகளைத் தன் ஆய்வு மூலம் உருவாக்கியிருந்தார். அதைப்பார்த்து 'உங்களுக்கு இவ்வளவு மூளையா? சூப்பரான மாத்திரைகளை எல்லாம் உருவாக்கி இருக்கிறீர்களே! இந்த மாத்திரைகள் தரமானது. மருத்துவத் துறையில் நீங்களும் ஒரு மைல்கல்' என்று சொல்ல யாருமே இல்லை. ஏன் என்றால், என் கணவர் தயாரித்த மாத்திரைகள் எங்கள் பார்மஸியில் குவிந்தன. விற்பனையாகவில்லை. டாக்டர்களிடம் போய், விளக்கி அதை முறையாக நோயாளிகளிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும் வாய்ப்பு கிடைக்கவில்லை. அதனால் தயாரிக்கப்பட்ட மாத்திரைகள் குவிந்ததைப்போல், என் கணவர் வாங்கிய கடனின் அளவும் பெருகியது.

அப்போது கடனிலிருந்து விடுபட என்ன செய்யலாம் என்று நினைத்த என் கணவர், பல ஏக்கர் தோப்பில் குறிப்பிட்ட பகுதியைப் பிரித்து 'பிளாட்' போட்டார். அந்த 'பிளான்' கூட 'ஒர்க் அவுட்' ஆகவில்லை. அப்போது நிலம் வாங்கிப்போடும் விஷயத்தில் மக்களிடம் உரிய விழிப்புணர்ச்சி எதுவும் இல்லாததால், என் கணவரின் அந்த எண்ணமும் அரங்கேறவில்லை.

வழக்கமாக நமது குடும்பங்களில் பண நெருக்கடி ஏற்படும்போது மனைவியின் நகைகள்தானே அடகுக்கடைக்குப் போகும்? அப்படி என் நகைகளும் அடகுக்கடையில் தஞ்சம் அடைந்தன.

பல முனைகளிலிருந்தும் பண நெருக்கடி ஏற்பட்டபோது, என் கணவர் கலங்கிப் போனார். அதுவரை 'எப்படியாவது வெற்றிபெற்றுவிடுவோம்' என்ற நம்பிக்கை ஒளியைச் சுமந்திருந்த அவரது முகத்தில், முதல்முறையாக நான் தோல்வியின் ரேகைகளைக் கண்டேன்.

அந்த நாள்களில் அவர் பெரும்பாலான நேரத்தை பார்மஸியின் உள்ளே செலவிட்டார். 'சாஷே' ஷாம்பு தயாரிப்பதற்குத் தேவையான மூலப்பொருள்கள், மெஷின்கள், விற்பனை வாய்ப்புகள் ஆகியவை பற்றி எல்லாம் பல்வேறு விதங்களில் ஆராய்ந்து, தெளிவான குறிப்புகளை எடுத்து அவற்றை 'பைல்' செய்துகொண்டிருந்தார். தயாரிப்புக்கான முயற்சிகளிலும் ஈடுபட்டிருந்தார்.

நான் கஷ்டம் என்றால் என்னவென்றே தெரியாத அளவுக்கு செல்வச் செழிப்புடன் வளர்ந்தேனே, அதுபோல் அவரும் செல்வச்செழிப்பில் வளர்ந்தவர். அதனால் பணக் கஷ்டம் என்பது எங்கள் இருவரையும் காயப்படுத்தியது. நான் முழுமையாக பள்ளிக்கூடப் பணிகளில் ஈடுபட்டு ஓரளவு வருமானம் வரச் செய்தேன். எல்லாரிடமும் கலகலப்பாகப் பழகி என் மனம் சோர்வடையாமலும் பார்த்துக்கொண்டேன். அதையும் மீறி கஷ்டங்கள் வரும்போது சாய் பாபாவின் போட்டோவுக்கு முன்னால் நின்று, நேருக்குநேர் அவரிடம் பேசி அந்த பாரத்தை எல்லாம் அவர் தோளில் ஏற்றிவிட்டு நான் நிம்மதி தேடிக்கொண்டேன். ஆனால் என் கணவரால் அப்படி இயல்புநிலைக்குத் திரும்ப முடியவில்லை.

தொட்டதெல்லாம் தோற்கிறதே என்று கவலைப்பட்டு வந்தார்.

மனம்விட்டு யாரிடமும் பேசாமல், 'தான் அதிகம் பேசாதவர்' என்பதுபோல் காட்டிக்கொண்டு, எல்லாக் கஷ்டங்களையும் தனக்குள்ளே பூட்டி வைத்துக்கொண்டு கலங்கியிருக்கிறார்.

இப்படியே பண நெருக்கடியில் நாம் சிக்கி வருந்திக் கொண்டிருந்தால், நம் ஆறு அன்புக் குழந்தைகளின் எதிர்காலம் என்ன ஆகுமோ என்று துக்கமடைந்துள்ளார்.

எவ்வளவோ கண்டுபிடிப்புகளில் புதிது புதிதாக இறங்கி னாலும், எதிலும் வெற்றி பெற முடியவில்லையே என்று வேதனைப்பட்டுள்ளார்.

அந்தக் காலகட்டத்தில் அவர் 'புண்பட்ட நெஞ்சை புகைவிட்டு ஆற்றலாம்' என்று கருதியிருக்கிறார். அதனால் சும்மா எப்பவாச்சும் என்றிருந்த புகை பிடிக்கும் பழக்கம், அதிகமாகி பாக்கெட் கணக்கில் சிகரெட் பாக்கெட்டுகளைப் பற்ற வைத்திருக்கிறார். நான் 'எப்பவாச்சும் ஒன்றிரண்டுதான்' என்று நினைத்துக்கொண்டிருந்தது தவறாகிவிட்டது.

இப்படி எங்கள் வாழ்க்கையில் 'நெருக்கடி நிலை' உருவாகி இருந்த அந்தக் காலகட்டத்தில்தான், யாருமே எதிர்பார்க்காத அந்தத் துயர சம்பவம் நடந்தது. 'நல்லவர்களை கடவுள் வலிக்காமல் எடுத்துக்கொள்வார்' என்பார்களே! அப்படித்தான் என்னிடமிருந்து என் அன்புக் கணவரை, என் குழந்தைகளிடமிருந்து அவர்களது ஆசை அப்பாவை கடவுள் எடுத்துக்கொண்டார்.

எப்படி?

நினைக்கும்போதே எனக்கு துக்கம் மேலிடுகிறது. சற்று பொறுங்கள். மனத்தை ஆசுவாசப்படுத்திக்கொண்டு அடுத்த அத்தியாயத்தில் சொல்கிறேன்.

# 10



## என் கணவர் உயிர் பிரிந்த நேரத்தில்...

**எ**ன் அன்புக் கணவருடன் நான் கழித்த அந்தக் கடைசிநாள் இப்பவும் என் கண்ணுக்குள்ளே நிழலாடுகிறது.

வழக்கம்போல் அன்றைக்கும் காலையிலே எழுந்தார். முக்கியமான உறவினர் ஒருவர் கல்யாணத்துக்குப் போகவேண்டி இருந்தது. நானும் புறப்பட்டேன். இரண்டு பேருமாக கல்யாண வீட்டுக்குப் போனோம். அங்கே சொந்தக்காரங்க நிறையப் பேர் வந்திருந்தாங்க! சிரிச்சு மகிழ்ச்சியாகப் பேசிட்டிருந்தார், என் கணவர். பின்பு இரண்டு பேரும் கல்யாணப்பந்தியில் சாப்பிட உட்கார்ந்தோம், சாப்பிட்டோம். நாங்க இரண்டு பேரும் சேர்ந்து சாப்பிடுகிற கடைசி சாப்பாடு அதுதாங்கிறது எனக்கு அப்போது புரியவில்லை.

சாப்பிட்டு முடித்துவிட்டு, உறவுக்காரங்ககிட்டே எல்லாம் சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்தோம். சிறிது நேரத்திலே அவர் படுக்கப்போறேன்னு சொல்லிக்கிட்டு படுக்கை அறைக்குப்போனார். நான் எட்டிப் பார்த்தேன். வழக்கமாக எங்கள் படுக்கை அறையில் படுப்பார். அன்றைக்கு அவரோட அம்மாவின் படுக்கையில் போய் படுத்தார்.

சிறிது நேரத்தில் வயிறு சரியில்லை என்றார். 'ஜெலூசில்' கொடுத்தேன். மீண்டும் சிறிது நேரத்தில் வாந்தி வருகிறது என்றார். இரண்டு முறை வாந்தி எடுத்துவிட்டு, சோர்வானார். நான் ஆஸ்பத்திரிக்கு போவோமா என்று கேட்டேன். 'வயிறு சரியில்லை. அதனாலதான் இப்படி வாந்தி எல்லாம் வருது. வேற ஒண்ணும் இல்லை' என்று சொல்லிட்டு மீண்டும் படுத்தார்.

அன்றைக்கு என் மகன் அசோக்குமார் கூடவே இருந்தான். அவனுக்கு காய்ச்சல் அடித்தது. கணவர்கிட்டே 'என்ன பண்ணட்டும்' என்று கேட்டேன். ஒரு மாத்திரையின் பெயரைச் சொல்லி 'அது மேஜையில இருக்கு. எடுத்து சாப்பிடச் சொல்லு' என்றார். 'சரி நீங்க தூங்குங்க' என்று சொல்லிவிட்டு நான் வெளியே வந்தேன்.

அன்றைக்கு கிருஷ்ண ஜெயந்தி. வழக்கமாக எல்லா கிருஷ்ண ஜெயந்தி நாள்களிலும் முறுக்கு, சீடை எல்லாம் செய்வோம். கிருஷ்ணர் படத்தை அலங்கரிப்போம். மாவில் கையை நனைத்து கிருஷ்ணர் பாதம் போடுவேன். எங்க குடும்பமே கிருஷ்ணர் ஜெயந்தியை சந்தோஷமாகக் கொண்டாடும். ஆனால் அன்றைக்கு எதுக்குமே மனசில்லை. பதற்றமும், கவலையும் என்னை அறியாமலே எனக்குள்ளே உருவாக, எதுவுமே செய்யத் தோன்றவில்லை. அப்படியே உட்கார்ந்திருந்தேன்.

வழக்கமாவே அவருக்கு பிற்பகல் மூன்று மணிக்கு டிபன் சாப்பிடுகிற பழக்கம் உண்டு. மனது சரியில்லாவிட்டாலும் அன்றும் டிபன் செய்து வைத்துவிட்டு, அசோக்கைக் கூப்பிட்டு, ''அப்பாவை எழுப்பு'' என்றேன். அவன், படுக்கை அறைக்குள் ஒருக்களித்துப் படுத்திருந்த அவரைப் பார்த்துவிட்டு, 'அப்பா நல்லா தூங்குறார்' என்று சொன்னபடியே 'அப்பா... அப்பா' என்று எழுப்பினான். முதலில் மெதுவாக எழுப்பினான். பின்பு சத்தமாகக் கூப்பிட்டான்.

'அவ்வளவு ஆழ்ந்து தூங்கமாட்டாரேன்னு' நினைத்தபடியே நான், அவர் படுத்திருந்த அறையை நோக்கி வேகமாகச் செல்ல, 'அம்மா! அப்பாவுக்கு என்னாச்சு தெரியல. உடனே டாக்டரை கூப்பிடும்மா' என்று அசோக் கத்துகிற சத்தம் கேட்டது..!

டாக்டருக்கு நான் போன் செய்துகொண்டிருக்கும்போதே, அவன் பதறியபடி என்கிட்டே வந்து 'நாக்கு தடிச்சிப் போயிட்டுது. கையைத் தூக்கினேன். கை கீழே விழுந்திட்டுது. அப்பா உடம்பு மரக்கட்டைபோல் ஆகிவிட்டது' என்று கதறினான்.

அதற்குள் என் மாமியார் மனோரஞ்சிதம் ஓடோடிவந்து 'சின்னி... சின்னி...' என்று எழுப்பிப் பார்த்துவிட்டு, அவர் இறந்துபோனதை உறுதி செய்துவிட்டு அழுதார்.

அப்பவே டாக்டர் வந்துட்டார். என் கணவரின் உடம்பு மேல் கையை வைத்து பார்த்துவிட்டு, 'இறந்து 2, 3 மணி நேரம் இருக்கும். தூக்கத்திலே உயிர் பிரிந்துவிட்டது' என்றார்.

கொஞ்ச நேரத்திலே மரணச் செய்தி பரவியது. எங்கள் வீடு முழுக்க அழுகையும், கூப்பாடுமாக மக்கள் கூடிவிட்டார்கள். 48 வயதிலே என் கணவர் மரணமடைந்து விட்டார். யாரால்தான் தாங்கிக்கொள்ள முடியும்? என் மாமனார் 40 வயதிலேயே மாரடைப்பால் காலமாகி இருக்கிறார். அதுபோல் என் கணவரும் இறைவனடி சேர்ந்துவிட்டார்.

அப்போது என் மூத்த மகன் ராஜ்குமார் கீழ்பாக்கம் மருத்துவக் கல்லூரியில் படித்து முடித்துவிட்டு, 'ஹவுஸ் சர்ஜன்' ஆக இருந்தான். போன் செய்து சொன்னதும் இரவிலே வந்து சேர்ந்து விட்டான். அசோக், பாண்டிச்சேரியில் வக்கீலுக்குப் படித்துக் கொண்டிருந்தான். ஆண்டாள், ஸ்டான்லி மருத்துவக் கல்லூரியில் இரண்டாம் ஆண்டு படித்தாள். ரெங்கநாதன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில். B.Sc., இரண்டாம் ஆண்டு படித்தான். விஜயலெட்சுமி B.A. முதலாம் ஆண்டும், கடைக்குட்டி குமாரவேல் ஏழாம் வகுப்பும் படித்துக்கொண்டிருந்தார்கள்.

என் கணவரின் பூத உடலை மறுநாள் அடக்கம் செய்வதாக முடிவு செய்தார்கள். சோர்ந்துபோய் நின்றிருந்த என் மூத்த மகனை அழைத்து, 'அப்பா ஆராய்ச்சியில் ஈடுபட்ட வேல் பார்மஸிக்குள் போய் படுத்துக்கொள். காலையில்தான் இறுதி காரியங்கள் எல்லாம் நடக்கும்' என்று அனுப்பிவைத்தேன்.

உடலைச் சுற்றி நிறையப் பேர் இருந்தார்கள். சிலர் அழுதுகொண்டிருந்தார்கள். பலர் சோகமாக இருந்தார்கள். நான் அமைதியாக இருந்தேன். அழவே இல்லை. சிலர் என்னை உற்றுப்பார்த்தார்கள். `எல்லா சோகத்தையும் அடக்கி வைச்சிக்கிட்டு இறுக்கமாக இருக்காங்க. அவங்களை அழச் சொல்லுங்க... அப்பதான் மனசு ஆறுதல் அடையும்` என்று சிலர் சொன்னார்கள்.

அழுகையைப் பற்றி அவர்களெல்லாம் பேசிக்கொண்டிருக்க, நான் `நாளைக்கு நம்ம வாழ்க்கைக்கு என்ன வழி? பிள்ளைங்க எல்லாரும் பணச்செலவு உள்ள படிப்புகளை ஹாஸ்டலில் தங்கி படிச்சிட்டு இருக்காங்களே! அவங்க எந்தத் தடையும் இல்லாம படிப்பைத் தொடரணுமே அதுக்கான பணத்தை எப்படி சேகரிப்பது` என்று சிந்தித்துக்கொண்டிருந்தேன்.

`அழுதால் மனம்குலைஞ்சு போயிடுவே. அழுவது பலவீனம். அழுகையால் உன் வாழ்க்கையில் எந்தப் பயனும் கிடைக்கப் போவதில்லை. அப்படியிருக்க நீ ஏன் அழணும்? உன் அம்மா சக்குபாய், எதுக்குமே நீ கலங்கி அழக் கூடாது` என்று சொல்லி இருக்காங்களே. நீ அழவே அழாதே. அழுகை, உன் வேகத்தையும் விவேகத்தையும் குலைத்து உன்னை சராசரி பெண்ணாக்கி முடக்கிப்போட்டுவிடும்` என்று என் மனது சொல்லிக்கொண்டே இருந்தது.

நான் அழாமல் இருந்ததைப் பார்த்து சிலர் என்னைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். நான் யாரையும் கண்டுகொள்ளவில்லை. என் மனது, அப்போது என் பள்ளிக்கூடத்தில் எட்டாம் வகுப்புவரை படித்துக்கொண்டிருந்த பிள்ளைங்களைப் பற்றியும், நல்லபடியாக உயர்ந்த படிப்பு படித்துக்கொண்டிருக்கிற என் பிள்ளைகளைப் பற்றியும்தான் சிந்தித்துக்கொண்டே இருந்தது. தூங்காமல் என் கணவர் உடல் அருகில் அமர்ந்து, அடுத்து என்னவெல்லாம் செய்ய வேண்டும் என்று திட்டம் போட்டுக்கிட்டிருந்தேன்.

அவர் ஆத்மா எங்கேயும் செல்லவில்லை. என் ஆத்மாவுக்குள்ளே கலந்ததுபோல் இருந்தது. `இழப்பு ஒண்ணுமே இல்லை. என் கணவர்

இங்கேதான் இருக்கிறார்' என்று என் நெஞ்சில் கைவைத்துச் சொன்னேன்.

மறுநாள் விடிந்தது. உடலுக்குச் செய்யவேண்டிய இறுதி மரியாதையை எல்லாம் செய்து உடலை அடக்கம் செய்வதற்காக எடுத்துச் சென்றார்கள். இந்த நேரத்தில் ஓர் உண்மையை சொல்லித்தான் ஆக வேண்டும். என் கணவர் இறுதிக் காரியத்துக்கு போதுமான அளவு பணம் கூட என்னிடம் அப்போது இல்லை. எப்படியோ, கடன் வாங்கித்தான் காரியத்தைச் செய்தோம்.

நான் இந்த அத்தியாயத்தின் மூலமாக குடும்பத்தலைவிகளாக இருக்கிற பெண்களுக்கு வாழ்க்கைக்குத் தேவையான மிக முக்கியமான விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். மரணம் பொதுவானது. உங்கள் அன்புக்குரியவரை எந்த நேரத்திலும் நீங்க இழக்கவேண்டிய நிலை ஏற்படலாம். அப்போ மனங்கலங்கிடாதீங்க. கலங்கிட்டா, உங்களிடமிருந்து தன்னம்பிக்கை பறிபோயிடும். அடுத்து உங்களைச் சுற்றி நிற்கும் உங்கள் பிள்ளைகளின் நம்பிக்கை தகர்ந்திடும். 'வாழ்க்கை அனுபவம் கொண்ட நம்ம அம்மாவே அழுது, கலங்கிட்டாங்களே, நம்ம நிலைமை என்ன ஆகும்?' என்ற கேள்விக்குறி அவர்களுக்குள் வந்துவிடும்.

ஒரு தாய் தன்னம்பிக்கையை இழக்கவும், பிள்ளைகள் நம்பிக்கையைத் தொலைக்கவும் காரணமாக இருக்கிற அழுகை பெண்களின் சாபக்கேடு. பெண்கள் அழவே கூடாது. சோகம் நம்மைத் தொடும் நேரத்தில் நாம் ஆழ்ந்து சிந்தித்து திட்டம் தீட்ட வேண்டும். அதுக்கு மனபலமும், நேரமும், ஆழ்ந்த அமைதியும் தேவை. இந்த மூன்றையுமே அழுகை தரவே தராது. அதனால் வாழ வேண்டும் என்று நினைக்கும் பெண்களே அழாதீர்கள்!

என் கணவர் உடலை அடக்கம் செய்த மறுநாள்! ஊரே நான் அடுத்து என்ன செய்யப்போறேன் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. நான் என்ன செய்திருப்பேன்னு நினைக்கிறீங்க? குளிச்சேன்! வெள்ளைப் புடவையைத் தூக்கி உடுத்தினேன். நேராக என் ஸ்கூலை பார்த்து நடந்தேன்.

# 11



## கடனைத் தீர்க்க நான் கடைப்பிடித்த புதிய வழி

**என்** அன்புக் கணவர் இறந்த பின்பு அடுத்தடுத்து நடந்த சில விஷயங்கள் அதிர்ச்சிகரமானவை. சில நெருங்கியவர்களின் மனநிலையை அப்போதுதான் தெரிந்துகொண்டேன்.

என் கணவர் மரணம்தான் நான் அனுபவப்பட்டு உணர்ந்த முதல் மரணம். நான் அழாமல், கலங்காமல் இருந்ததால், என் உறவினர்கள் அப்போது மூன்றுவிதமாக நடந்துகொண்டதை என்னால் நன்றாக கவனிக்க முடிந்தது.

அந்தக் காலகட்டத்தில் நாங்கள் கடனில் இருப்பதைத் தெரிந்துகொண்டு, மரணச்செய்தியை அறிந்தும், வந்து பார்க்கவோ ஆறுதல் சொல்லவோ வராமல் இருந்தவர்கள் சிலர். வந்து பார்த்து, உருகி உருகி அழுதுவிட்டு அத்துடன் திரும்பிப் பார்க்காமல் சென்றவர்கள் சிலர். அவர்களை எல்லாம்விட கவனிக்கத் தகுந்தவர்கள் இன்னொரு கூட்டத்தினர். அவர்கள் என்னைச் சுற்றி இருந்து கொண்டு ஆலோசனை சொல்லத் தொடங்கினார்கள்.

'உன் கணவருக்கு கடன் கொடுத்தவர்கள் உன்னைத் தேடி வருவார்கள். அவர்களை சமாளிக்க நீ இந்த சந்தர்ப்பத்தை நன்றாகப்

பயன்படுத்திக்கொள். உன்னிடம் கடனைக் கேட்பவர்களிடம் 'என் கணவர் எப்போ வாங்கினார், எதுக்கு வாங்கினார், எவ்வளவு வாங்கினார், அந்தப் பணத்தை என்ன செய்தார் என்றெல்லாம் எனக்குத் தெரியாது. அந்தக் கடனுக்கும் எனக்கும் சம்பந்தம் இல்லை' என்று சொல்லிடு. அவங்க அதுக்கு மேலும் கடனைக் கேட்டுத் தொந்தரவு செய்தால், அவர்களை எப்படி கவனிக்கணுமோ அப்படி கவனிச்சுடுறேன்' என்று, கடன் கொடுத்தவர்களை சமாளிக்க ஆலோசனை சொன்னார், நெருக்கமான ஓர் உறவினர்.

'வீடு தேடிவந்து கடன் கேட்கிறீங்களே! என் கிட்டே கேட்டுக்கிட்டா அவருக்கு கடன் கொடுத்தீங்க? என்று சத்தமாகக் கேள், வந்தவன் பதில் பேசாமலே திரும்பிப் போயிடுவான். பிறகு ஒருபோதும் உன்னிடம் வந்து கடனைப் பற்றிப் பேசவேமாட்டான்' என்று ஆலோசனை சொன்னார், இன்னோர் உறவினர்.

மூன்றாவது உறவினர் சொன்ன யோசனை என்ன என்பதையும் சொல்லிவிடுகிறேன்.

'வருகிற கடன்காரர்களுக்கு இருப்பதற்குக்கூட இருக்கை கொடுக்காமல் நிற்க வை. அவர்களிடம் 'என் கணவர் ஆரோக்கியமாகவும், மகிழ்ச்சியாகவும் இருந்தார். யாரிடமும் கை நீட்டி ஒரு காசுகூட வாங்கமாட்டார். நீங்க உங்களுடைய சுயநலத்துக்காக அவருக்கு கடன் கொடுத்து கடன்காரர் ஆக்கியிருக்கீங்க. வாங்கிய கடனை திரும்ப அடைக்க முடியாத அவர் மகிழ்ச்சியை இழந்தார், ஆரோக்கியத்தை இழந்தார், இதோ உயிரையும் இழந்து போய்ச் சேர்ந்திட்டார். உங்ககிட்ட சகவாசம் வைச்ச பிறகுதான் என் கணவருக்கு இத்தனையும் நடந்திருக்கு. என் வாழ்க்கையில் இவ்வளவு சோகம் நடக்க நீங்கதான் காரணம். நானும் ஆறு குழந்தைகளும் அநாதையாக நிற்கிறோமே. எங்க வாழ்க்கைக்குப் பதில் சொல்லுங்க...' என்று ரூட்டையே மாத்திப் பேசிடு. வந்த கடன்காரர்கள் மிரண்டு போயிடுவாங்க. நான் சொல்ற மாதிரி நீ கேட்டால், கடன்காரர்கள் தொந்தரவே இருக்காது. இருக்கிறதை வைத்து நீ மகிழ்ச்சியா

குடும்பத்தை நடத்திடலாம்' என்று நீண்ட, நெடிய ஆலோசனை சொன்னார், என்னோடு ரத்த பந்தம் கொண்ட முக்கிய உறவினர்.

யோசித்தேன்.

என் கணவர் கடன் வாங்கியது எனக்கே தெரியாது என்பதும்,

என்னிடம் கேட்டா கடன் கொடுத்தீர்கள் என்று கேட்பதும்...

உங்களைப் போன்றவர்கள் கடன் கொடுத்ததால்தான் என் கணவர் இறந்துவிட்டார் என்று பழிபோடுவதும்... எப்படி சரியாக இருக்கும்? அப்படி நான் நடந்துகொண்டால், அது என் கணவரின் ஆத்மாவுக்குச் செய்யும் துரோகமாகிவிடும்.

என் பிள்ளைகள் ஆறு பேரும் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு நான் ஒரு முன்னுதாரணமாக இருக்க வேண்டும். எதிர்காலத்தில் 'என் அம்மா நெருக்கடியான காலத்தில் இப்படித்தான் முடிவெடுத்தார். இப்படித்தான் செயல்பட்டார். அந்த வழியில் நாங்களும் செல்ல வேண்டும்' என்ற எண்ணம் என் பிள்ளைகளுக்கு வரக்கூடிய அளவுக்கு நியாயமான நல்ல முடிவை நான் எடுக்க வேண்டும். தாற்காலிக நிம்மதி தலைமுறை தலைமுறையாக நம் குடும்பத்துக்கே இழுக்கு ஆகிவிடக் கூடாது.

யோசித்தேன்! எல்லாவற்றையும் யோசித்தேன்!!

இரவு வந்தது!

எனக்கு ஆலோசனை தந்த நெருக்கமானவர்கள், நான் அந்த ஆலோசனைக்கு என்ன பதில் சொல்லப்போகிறேன் என்ற முடிவினை அறிவதற்காகக் காத்திருந்தார்கள். ஏதோ எனக்கு அவர்கள் நல்லது செய்யப்போவதாகக் கருதிக்கொண்டு, அவர்கள் மிக சாதுரியமான ஆலோசனையை எனக்கு வழங்கியதாகக் கருதிக்கொண்டு, அதற்காக நான் அவர்களைப் பாராட்டுவேன் என்று நினைத்துக்கொண்டு, நான் வாய்திறந்து சொல்லப்போகும் வார்த்தைகளுக்காகக் காத்திருந்தார்கள்.

நான் இக்கட்டில் சிக்கி இருக்கும்போது இப்படிப்பட்ட ஆலோசனைகளை வழங்குபவர்கள் என் அருகில் அதிக நாள்கள் இருப்பது உணர்வுரீதியாக எனக்கும் என் குடும்பத்துக்கும் நல்லதல்ல என்று முடிவு செய்தேன்.

'உங்கள் ஆலோசனைக்கு நன்றி' என்றேன்.

நான் எனக்குள்ளே நல்ல முடிவை எடுத்துவிட்டேன். அதை இவர்களிடம் சொன்னால், அவர்கள் நினைத்த முடிவாக அது இல்லையே என்று நினைத்து என்னைக் குழப்புவார்கள். பயமுறுத்துவார்கள். அதனால் நான் எடுத்த முடிவை அவர்களிடம் சொல்வதைவிட, செய்துகாட்டுவதுதான் சிறந்தது என்று முடிவு செய்தேன்.

என் முடிவை யாரிடமும் சொல்லாமல், 'எல்லாவற்றையும் நான் பார்த்துக்கிறேன். நீங்க போயிட்டுவாங்க. நான் தூங்கப் போகிறேன்' என்று சொல்லிவிட்டு, அவர்கள் பதிலுக்குக் காத்திருக்காமல் படுக்கை அறைக்குச் சென்று தாழிட்டுக் கொண்டேன்.

இந்த உலகம் நல்ல மனிதர்களால் நிரப்பப்பட்டிருக்கிறது. இங்கே கிட்டத்தட்ட எல்லாரும் நல்ல மனிதர்கள்தான். ஆனால் சூழ்நிலைகளும், சந்தர்ப்பங்களும் ஒரு நல்ல மனிதரை அடையாளம் காண்பதில் சில தடைகளைப் போடுகின்றன. அந்தத் தடைகளை விலக்க நாம் நேர்மையாகவும், நிதானமாகவும் நடந்துகொள்ள வேண்டும். அப்படி நடந்தால் நாம் நல்லவர் என்பது அவர்களுக்குப் புரிந்துவிடும். அவர்கள் நல்லவர்கள் என்பது நமக்கும் தெரிந்துவிடும். இரு தரப்பினரும் நல்லவர்களாக இருந்தால், அவர்களிடையே நடக்கும் விஷயங்கள் அனைத்தும் நல்லதாகவே அமைந்துவிடும்.

முதலில் நமக்கு நம் மீது நம்பிக்கை இருக்க வேண்டும்.

அடுத்து பிறர் நம்பும்படி நடக்க வேண்டும்.

மற்றவர்களை நம்பவும் வேண்டும்.

என் கணவரின் மரணத்துக்குப் பின்னால் இந்த மூன்றையும் என் கொள்கையாக எடுத்துக்கொண்டேன்.

என் கணவர் பட்ட கடன் என்ற ஒரு விஷயத்தை மட்டும் எடுத்துக்கொள்ளுங்கள். முதலில் எனக்கு என்மேல் நம்பிக்கை இருந்தால்தான், அந்தக் கடன்களை என்னால் அடைக்க முடியும் என்ற துணிச்சல் வரும். அடுத்து, அந்தக் கடனை நான் அடைக்க விரும்புகிறேன் என்பதை என் செயல், பேச்சு, நடத்தை மூலம் கடன் தந்தவர்களுக்கு வெளிப்படுத்த வேண்டும். கடன் கொடுத்த அவர்களை நான் நம்பவும் வேண்டும். நான் அவர்களை நம்பினேன்.

என் கணவர் கடலூரில் சிறந்த குடும்பத்தில் பிறந்து, சிறந்த மனிதராக வாழ்ந்தார். அவரோடு சேர்ந்தவர்களும் சிறந்தவர்களாகத்தான் இருக்க முடியும். அது கடன் கொடுத்தவர்களுக்கும் பொருந்தும். என் கணவர் சிறந்த மனிதராக இருந்ததால் அவருக்குக் கடன் கொடுத்த யாரும் 'அத்தாட்சிக்காக எழுதிக்கொடுங்கள்' என்று கேட்டிருக்கவில்லை. யாரிடமும் பணம் கொடுத்ததற்காக எந்த ஆதாரமும் இல்லை. ஆனாலும் அவர்கள் எவ்வளவு பணம் கடனாகக் கொடுத்ததாகச் சொன்னார்களோ அதை அப்படியே நான் ஏற்றுக்கொண்டேன்.

'உங்களை நம்புகிறேன். என்னையும் நம்புங்கள்' என்றேன். நான் இதயபூர்வமாக நம்பிக்கையையும், நல்ல எண்ணங்களையும் வெளிப்படுத்தியதால், 'இவர் எப்படியாவது கடனை திரும்பத் தந்துவிடுவார்' என்ற நம்பிக்கை அவர்களுக்கு வந்தது.

இருந்த நகைகளை விற்றேன்.

வெள்ளிப் பொருள்களையும் விலை பேசிக் கொடுத்தேன்.

தேவைக்குப் பயன்படும் என்று அவ்வப்போது சேர்த்து வைத்த உண்டியலையும் உடைத்து, உள்ளே இருந்த பணத்தையும் எடுத்தேன். மொத்தமாகச் சேர்த்தேன்.

கடன் கொடுத்ததாகச் சொன்ன அனைவரையும் அழைத்தேன். எல்லாரையும் அழைத்து இருந்த பணத்தைப் பங்கிட்டுக் கொடுத்தேன்.

'பள்ளிக்கூடத்தை புதிய வேகத்தோடு நடத்தப்போகிறேன். அரசு அங்கீகாரம் பெறப்போகிறேன். மெட்ரிகுலேஷன் ஆக்கப்போகிறேன். அது என் கொள்கை. விவசாயமும் செய்யப் போகிறேன். என் கணவர் செய்த தொழிலை என் பிள்ளைகளும் நடத்தி, சம்பாதித்து கொடுத்து விடுவேன்' என்றேன்.

அதன்படி சிறிது சிறிதாக மாதந்தோறும் கொடுத்தேன். சில மாதங்கள் குறிப்பிட்ட தேதியில் சரியாக வந்து நின்ற அவர்கள், நான் ஒழுங்காகக் கொடுத்ததும், வருவதை நிறுத்திவிட்டு, 'ரெடி செய்து வைத்துவிட்டு கூப்பிடுங்கள்' என்றார்கள். பின்பு 'என்ன மேடம்! எங்க பணம் ஓடிப்போகவா போகுது..? மெதுவாகக் கொடுங்கள்' என்றார்கள்.

நானும் நல்லவள். அவர்களும் நல்லவர்கள். இப்படித்தான் நாம் வாழ்க்கையை அணுக வேண்டும்.

என் பிள்ளைகளைப் போன்ற உங்களிடம் என் அனுபவத்தில் கிடைத்த ஒரு பாடத்தைப் பகிர்ந்துகொள்ள ஆசைப்படுகிறேன். வாழ்க்கையில் சோகம், துக்கம், பிரச்னை எல்லாம் வரும். அப்போது நெருக்கடிகளுக்குப் பயந்து, தாற்காலிக நிம்மதிக்கு ஆசைப்பட்டு மனசாட்சிக்கு எதிரான முடிவுகளை எடுத்துவிடாதீர்கள். அது உங்களை மட்டுமல்ல, உங்கள் சந்ததியையும் தவறான வழிக்குக் கொண்டு சென்றுவிடும்.

உண்மையை உயிராகக்கொண்டு உழைக்கத் தயாராகுங்கள். உங்களிடம் இருக்கும் திறமை வெளிப்படும். அது உங்களையும், உங்கள் சந்ததியையும் கோபுரத்துக்கு உயர்த்திவிடும். அதைப்பார்த்து பார்த்து நீங்கள் காலம் முழுவதும் பெருமையுடன் வாழலாம், என்னைப்போல!

வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும். காலச் சக்கரம் சுழன்று கொண்டேதான் இருக்கும். துன்பம் வரும்போது துவளாமல் மன உறுதியுடன் நின்றால்தான் வருங்கால வசந்தத்தை வரவேற்க முடியும்.

# 12



## ஆயிரம் ரூபாய் வேலை வேண்டாம்...
## ஆயிரம் பேருக்கு வேலை கொடுங்கள்...

**என்** அன்புக் கணவர் காலமான பின்பு கண்களை மூடிக்கொண்டு, வெறித்தனமாக என் பயணத்தை நான் தொடங்கிவிடவில்லை. நான் ஒவ்வோர் அடியையும் மிக கவனமாக எடுத்து வைத்தேன். நான் எடுத்துவைத்த அடிகள் குடும்பத்தில் எத்தகைய சலசலப்பை ஏற்படுத்தும், சமூகத்தில் எத்தகைய விவாதத்தை உருவாக்கும் என்பது எனக்குத் தெரியும். அதை எல்லாம் எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்பதை நான் தீர்மானித்துக்கொண்டுதான் ஒவ்வோர் அடியையும் எடுத்துவைத்தேன்.

கணவரை இழந்த பின்பு மனைவி மூலையில் அமர்ந்து கண்ணீர் சிந்திக்கொண்டே இருப்பாள் என்பதுதான் நமது சமூக எண்ணம். அப்படி மூலையில் அமர்ந்து அழுதுகொண்டே இருப்பவள்தான் கணவர் மீது உண்மையான அன்பு வைத்திருப்பாள் என்பது நாம் வாழும் சமூகத்தின் நம்பிக்கை. மரணத்துக்குப் பிந்தைய காரியங்கள் முடியும் வரை கணவனை இழந்த மனைவி வீட்டை விட்டு வெளியே செல்லாமல் இருக்க வேண்டும் என்பது உற்றாரும், உறவினர்களும், மற்றோரும் நம்பும் ஓர் ஐதீகம்.

'அந்த ஐதீகப்படி நடக்கும் கைம்பெண்களுக்கு மட்டுமே கணவர் மீது பற்றும் பாசமும் இருக்கும்' என்று நம்புகிறவர்களின் நம்பிக்கையைப் பெறும் நிலையில் எந்தப் பெண்ணும் இருக்கக் கூடாது. அதே நேரத்தில், மரணமடைந்த கணவரின் ஆத்மா சாந்தியடையும் விதத்தில் அவர் விட்டுச்சென்ற பணிகளை, அவர் தொடங்கி வைத்த விஷயங்களைச் செய்து முடிக்கும் விதத்தில் ஒவ்வொரு கைம்பெண்ணும் முனைப்புடன் செயல்பட வேண்டும். 'தான் விட்டுச்சென்ற பணிகளை, தனது பணியை, தனது கனவுகளை தன் மனைவி நன்றாகச் செய்து, தான் இல்லாததால் எந்த வெற்றிடமும் ஏற்படாமல் பார்த்துக்கொள்கிறாள்' என்று அந்த ஆத்மா நினைக்கும்போது, அந்த ஆத்மா மனைவிக்குத் தேவையான அத்தனை ஒத்துழைப்புகளையும் கொடுக்கும் என்பது என் வாழ்க்கையில் நிரூபணமான உண்மை.

கணவர் இறந்த மறுநாளே சமூக கட்டுப்பெட்டித்தனங்களை விலக்கிவிட்டு பள்ளிக்குச் சென்ற என்னை ஆசிரியர்களும், மாணவ – மாணவிகளும் சற்றே அதிர்ச்சியோடு பார்த்தார்கள். நான் அவர்களை எல்லாம் வழக்கமான புன்னகையோடு எதிர்கொண்டுவிட்டு, என் அறைக்குள் சென்றேன். வழக்கம்போல் என் பணிகளைக் கவனித்தேன்.

மாலையில் வகுப்புகள் முடிந்து மாணவ – மாணவிகள் எல்லாரும் விடைபெற்றுச் சென்ற பின்பு எல்லா ஆசிரியர்களையும் என் அறைக்குள் அழைத்து அமரச் செய்தேன். 'என் கணவர் இறந்த மறுநாளே நான் வந்து நிற்கிற இடம் கல்வி நிலையம். அதற்குக் காரணம் என் கனவுகள், லட்சியங்கள் எல்லாம் இந்தக் கல்வி நிலையத்தின் வளர்ச்சியில்தான் இருக்கின்றன. அதற்குத் தேவை திட்டமிட்ட கடுமையான உழைப்பு. நாம் அதற்கு இன்றே இப்போதே தயாராக வேண்டும்' என்று கூறி எனது கனவுத் திட்டங்கள் ஒவ்வொன்றையும் அவர்களிடம் விளக்கினேன். அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். இறுதியாக அவர்களிடம், 'என் கனவுகளும், லட்சியங்களும் ஈடேறும் அதே நேரத்தில் நாம்

பெயரோடு, புகழோடு வளருவோம். அந்த வளர்ச்சியின் பலன் எனக்கு மட்டுமல்ல எல்லோருக்கும் உண்டு' என்ற நம்பிக்கையை அவர்களுக்கு ஊட்டினேன். அந்த வளர்ச்சியில் அவர்களும் பலன் அடைவார்கள் என்று உறுதி கொடுத்தேன். ,

இந்த காலக்கட்டத்தில், புதிதாக இன்னொரு கடன் பிரச்னையும் உருவானது. தனியார்களிடம் கடன் வாங்கியிருந்த என் கணவர், 'ஸ்டேட் பேங்க் ஆப் இந்தியா'விலும் 3 லட்சம் ரூபாய் கடன் வாங்கி இருந்தார். 'சாஷே' தொழிலை மெல்ல மெல்ல வளர்த்த அவர், அதை வேகப்படுத்த அந்த கடனை வாங்கி இருக்கிறார்.

என்னை ஸ்டேட் பேங்க் மேனேஜர் 'செல்லப்பா' சந்தித்தார். அடுத்து என்ன செய்யப் போகிறீர்கள் என்று கேட்டார். 'எப்படியாவது உங்கள் கடனை அடைத்து விடுவேன்' என்றேன். அவர், 'நீங்கள் உங்கள் கணவர் ஆரம்பித்த தொழிலை நிறுத்தி விடாதீர்கள். நிறுத்தினால், உடனே எங்கள் கடனை நீங்கள் திருப்பி செலுத்த வேண்டி இருக்கும். நீங்கள் உங்கள் மகன்களை வைத்து அந்த தொழிலை தொடர்ந்து செய்யுங்கள். அதில் கிடைக்கும் லாபத்தை வைத்து சிறிது சிறிதாக வங்கிக் கடனை தீர்த்துவிடுங்கள்' என்றார்.

நெருக்கமானவர்கள் 'தொழிலை நிறுத்தி விட்டு பிள்ளைகளை வேலைக்கு அனுப்பு' என்று சொல்ல, அந்த அதிகாரி 'தொழிலை செய்து கடனை அடையுங்கள்' என்று நம்பிக்கை தந்தது எனக்கு தெம்பைக் கொடுத்தது. தளராமல் தன்னம்பிக்கை கொண்டேன்.

நான் தளரவில்லை, தன்னம்பிக்கையோடு இருக்கிறேன் என்பதையும், முன்பைவிட வேகத்தோடு நான் செயல்படப் போவதையும் அவர்களுக்கு உணர்த்திவிட்டு, வீட்டுக்கு வந்தேன். அங்கே என் பிள்ளைகள் அனைவரும் காத்திருந்தார்கள்.

அவர்களை எல்லாம் ஒன்றாக அமரவைத்து நம்பிக்கையோடு பேசத்தொடங்கினேன். நான் பேசிய பேச்சிலிருந்து என் பிள்ளைகள் மிக முக்கியமான விஷயம் ஒன்றைப் புரிந்துகொண்டார்கள். அது, 'அம்மா, அப்பாவின் இழப்பில் இருந்து விடுபட்டுவிட்டார்' என்பது!

அப்போது அவர்களுக்குள் 'அம்மாவே அந்த சோகத்தைத் தாங்கிக்கொண்டு விடுபட்ட பின்பு, நாம் ஏன் இன்னும் அந்த சோகத்தில் மூழ்கியிருக்க வேண்டும்?' என்ற எண்ணம் உருவானது. அதைத்தான் நான் எதிர்பார்த்தேன்.

பின்பு குடும்பத்தில் இருக்கும் பண நெருக்கடியை அவர்களிடம் சொன்னேன். அதை நான் சமாளித்துவிடுவேன் என்று நம்பிக்கையூட்டினேன். குடும்பத்தினர், உறவினர்களில் சிலர் விலகி நிற்பதையும், 'நாம் வாழ்வோமா அல்லது வீழ்வோமோ' என்ற சந்தேகம் சிலரிடம் இருப்பதையும் அவர்களிடம் விளக்கினேன்.

நான் உணர்ச்சி பொங்கப் பேசிக்கொண்டிருந்ததைப் பார்த்த என் மூத்த மகன் டாக்டர் ராஜ்குமார் எழுந்து, 'அம்மா...' என்றான். அவன் எதையோ பேச விரும்புவதையும், ஆனால் அதைச் சொல்லத் தயங்குவதையும் நான் உணர்ந்தேன். 'நீ இந்தக் குடும்பத்தின் தலைமகன். நீ என்ன நினைக்கிறாயோ அதைச் சொல். நிச்சயம் அது நல்லதாகத்தான் இருக்கும்' என்று நான் நம்பிக்கையோடு சொன்ன பிறகு அவன் மனத்தில் இருந்ததை எல்லாம் எங்களிடம் வெளிப்படுத்தினான்.

'அம்மா...! அப்பா இறந்த அன்று இரவில் நீங்கள் என்னை அப்பா ஆராய்ச்சிகளை மேற்கொண்ட வேல் பார்மஸிக்குள் சென்று படுத்துக்கொள்ளச் சொன்னீர்கள். நானும் போய்ப் படுத்தேன். அசதியில் உடனே தூங்கிவிட்டேன். சிறிது நேரத்தில் அப்பாவின் சத்தம் கேட்டது. 'உனக்காக வைத்திருக்கும் ஃபைலை பார்' என்றது அந்தக் குரல். அது எனக்கு ஒரு கனவுபோல் தோன்றியது. உடனே நான் விழித்ததும், என் பார்வையில் படும்படி 'பைல்' ஒன்று இருந்தது. அதை எடுத்து பிரித்துப் பார்த்தேன். அதில் 'சாஷே' தொழில்நுட்பத்தை அப்பா முழுமையாக விளக்கி எழுதி வைத்திருந்தார். மெஷின், மூலப்பொருள்கள், அதன் செய்முறை, வியாபார நுணுக்கம் போன்ற அனைத்தும் அதில் தனித்தனியாகப் பிரித்து விலாவாரியாக எழுதிவைக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவிலே

இது புதிய தொழில்நுட்பம். இதை நீ தான் செய்ய வேண்டும் என்று எனக்கு அன்புக்கட்டளை இட்டிருப்பதுபோல் தெரிகிறது அம்மா' என்று நெகிழ்ச்சியுடன் சொன்னான், என் மகன்.

அதைக் கேட்டபோது எங்களுக்கெல்லாம் வியப்பாக இருந்தது. என் கணவர் 'சாஷே ஷாம்பு' என்ற அவரது கனவு திட்டத்தை நிஜமாக்கிக் காட்டத் தேவையான அத்தனை ஏற்பாடுகளையும் செய்துவைத்திருப்பதைப் பார்த்து நான் புல்லரித்துப் போனேன்.

என் மூத்த மகனின் டாக்டர் படிப்பு அப்போது நிறைவடைந்து, அவன் பயிற்சி மருத்துவருக்குரிய பணியில் இருந்ததால், தந்தையின் சாஷே ஷாம்பு கனவுத் திட்டத்தை நிறைவேற்றப் போதுமான ஆற்றலும் சிந்தனையும் அவனிடம் இருந்தன. தந்தையை வணங்கிவிட்டு அதில் அவன் ஈடுபட்டான். (சாஷே ஷாம்புவைத் தயாரித்தது, இந்தியாவிலே முதல் முறையாக இந்த சாஷே முறையை அறிமுகப்படுத்தி, இந்தியா முழுவதும் உள்ள மக்கள் மத்தியில் அது மாபெரும் வரவேற்பைப் பெற்றது. இந்தியாவிலே முதல் முறையாக சாஷே தொழில்நுட்பத்துக்கு ஐ.எஸ்.ஐ. முத்திரை பெற்றது போன்ற அனைத்து முக்கிய விஷயங்களையும் என் மகன் டாக்டர் சி.கே. ராஜ்குமார் பிந்தைய அத்தியாயத்தில் சேர்த்திருக்கிறார். அதைப்படித்து முழு விவரங்களையும் தெரிந்துகொள்ளுங்கள்). அந்த பணிகள் அனைத்திலும் என் இளைய மகன் அசோக்குமாரும் சேர்ந்து செயல்பட்டான்.

என் மூத்த மகன் டாக்டர் ராஜ்குமார், இளைய மகன் அசோக்குமாரைத் தவிர மீதி அனைவரும் அந்த காலகட்டத்தில் அவரவர் படிப்பின் இறுதிக்கட்டத்தில் நின்று கொண்டிருந்தார்கள். அவரவர் படிப்பை கவனமாகத் தொடரும்படி கூறிவிட்டு, நான் பள்ளிக்கூட வளர்ச்சியில் முழு கவனம் செலுத்தத் தொடங்கினேன்.

என் கணவர் மரணத்தை அருகிலிருந்து பார்த்தவர்கள் நானும், என் இரண்டாவது மகன் சி.கே.அசோக்குமாரும்தான். நான் எப்படியோ என் மனத்தை வலுப்படுத்திக்கொண்டு அந்த இழப்பிலிருந்து விடுபட

என் மனத்தை கல்வி, ஆன்மிகம் என்று திசை திருப்பிவிட்டேன். ஆனால் அருகில் இருந்து அப்பாவின் மரணத்தைப் பார்த்த அசோக்குமாரால் அவ்வளவு எளிதாக அதிலிருந்து விடுபட முடியவில்லை. அவன் பார்வைக்கு ஆள் வாட்டசாட்டமாக இருந்தாலும், வக்கீலுக்கு படித்துக்கொண்டிருந்தாலும் அவனுக்கு இளகிய குழந்தை மனது. அதனால் தந்தையின் இறப்புக்காட்சி மீண்டும் மீண்டும் அவன் நினைவில் வந்து, மனத்தைக் கலங்கச் செய்தது. அது அவனது உடலையும் பாதிக்கச் செய்தது.

அந்தக் காலகட்டத்தில் எங்கள் வீட்டு சாப்பாட்டு முறைகள் முற்றிலும் மாறிப்போயிருந்தது. முதலில் வசதிபடைத்த வீட்டு சாப்பாடு சாப்பிட்டுக்கொண்டிருந்த நாங்கள் சூழ்நிலைக்குத் தக்கபடி உணவுப்பழக்கத்தை மாற்றினோம். பணநெருக்கடி இருந்ததால் வீட்டுச்செலவுகளை வெகுவாகக் குறைத்துவிட்டேன். அந்த நேரத்தில் எங்கள் தோட்டம் நன்றாகக் கைக்கொடுத்தது. தோட்டத்தில் கிடைத்த நுங்கு, கிழங்கு, பழவகைகள் கிழங்கு வகைகள், கடலை போன்றவை எங்களுக்கு ஆரோக்கியமான உணவாக மாறிக்கொண்டிருந்தன. எந்த உணவு கிடைத்ததோ அதை ஏற்றுக்கொள்ளும் அளவுக்கு எங்கள் உடலும், மனமும் மாறிப்போய் இருந்தது.

அப்போது என் கவனம் முழுவதும் பள்ளிக்கூடத்தை மேம்படுத்துவதிலேயே இருந்தது. அதனால் என் பிள்ளைகளைக் கவனிக்க எனக்கு போதுமான நேரம் இருந்திருக்கவில்லை. அந்தத் தருணத்தில் எனது மனசாந்திக்காக துணிச்சலான முடிவு ஒன்றினை எடுத்தேன். நான் வணங்கும் கடவுள் சத்ய சாய் பாபாவிடம் வேண்டி, என் குழந்தைகளை எல்லாம் அவருக்கு சமர்ப்பணம் செய்ய ஆசைப்பட்டேன். தாய் என்ற நிலையில் இருக்கும் நான் அந்த தாய்மைப் பொறுப்பை பாபாவிடம் ஒப்படைப்பதுதான் அந்த சமர்ப்பணம். அவரிடம் நான் ஒப்படைத்துவிட்டால் அவரது கரங்களில் என் பிள்ளைகள் எந்த பாதிப்பும் இல்லாமல் பத்திரமாக வளர்வார்கள். நான் என் கல்விப் பணியைப் பார்த்துக்கொண்டு, விரைவாக கடன்களையும் சமன் செய்துவிட்டு அதிலிருந்து மீளமுடியும் என்று

நம்பினேன். அதனால் மானசீகமாக பாபாவிடம் வேண்டி, 'இறைவா! என் ஆறு பிள்ளைகளும் இனி உன் பிள்ளைகள். அவர்களை உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன். ஏற்றுக்கொள்' என்றேன். அவரும் ஏற்றுக்கொண்டார். (என் பிள்ளைகள் ஆறு பேரும் இறைவனின் குழந்தைகள். அதனால்தான் இவ்வளவு வளர்ச்சியடைந்திருக் கிறார்கள்.

பிள்ளைகளை சாய் பாபாவிடம் ஒப்படைத்துவிட்டு, பள்ளியின் வளர்ச்சிப் பணியில் முழு மூச்சாக ஈடுபட்டு நான் முதலில் அரசு அங்கீகாரத்துக்கு விண்ணப்பித்தேன். அரசு அங்கீகாரத்துக்கு தகுதியானதுதானா என் பள்ளி என்று பார்வையிடுவதற்காக அரசு கல்வி அதிகாரி வந்தார்.

அவர் என்னை சந்தித்ததும், அன்று என் வாழ்க்கையில் நடந்த அதிரடியும், திருப்பமும் இன்றும் என்னால் மறக்கமுடியாதவை. மனித வாழ்க்கையில் இப்படி எல்லாம்கூட நடக்கும் என்பதற்கான உதாரணங்கள் அவை.

பாபா நர்சரி பள்ளிக்கு அரசு அங்கீகாரம் பெற விண்ணப்பித்ததை நான் யாரிடமும் சொல்லவில்லை. அதை நான் சொல்லிவிட்டுச் செய்திருந்தால், அப்போதே என் குடும்பத்தில் உள்ள என்னைவிட மூத்த உறுப்பினர்கள் சிலர் அதைத் தடுத்திருப்பார்கள். அதனால் யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் விண்ணப்பித்திருந்தேன்.

என் குடும்பத்தில் மூத்தவர்கள், படித்தவர்கள் நிறைய இருந்தார்கள். அவர்களிடம் நான் எதையும் எப்போதும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் என் கணவர் உயிருடன் இருந்த வரை எங்களிடமிருந்து கிடைத்த பலன்களை அவர்கள் அனுபவித்துக்கொண்டிருந்தார்கள்.

என் கணவர் இறந்த பின்பு சிலரது சொல், செயல் எல்லாமே மாறின. என் எதிர்காலம் என்னவாகும் என்று பயந்தார்களா அல்லது நான் பலகீனமான மனத்தைக் கொண்டவள் என்று நினைத்தார்களா என்று எனக்குத் தெரியாது. என் பிள்ளைகளின் படிப்பை அப்படியே நிறுத்திவிட்டு, யாரிடமாவது கிடைத்த வேலையைப் பார்த்து சம்பாதித்து

குடும்பக் கஷ்டத்தைப் போக்கும்படி அறிவுரை சொன்னார்கள். எனது படிப்பை அப்படியே நிறுத்திவிட வேண்டும் என்பதில் எனக்கு உடன்பாடே இல்லை.

நான் அப்போதே என் பிள்ளைகளிடம் 'இந்த மாதிரி ஆலோசனை சொல்பவர்கள் பக்கமே நீங்கள் திரும்பிப் பார்க்கக் கூடாது. அவர்கள், நீங்கள் எல்லாரும் பயனுள்ள படிப்பை பாதியிலே நிறுத்திவிட்டு, யாரிடமாவது கையைக் கட்டிக்கொண்டு நின்று சம்பளம் வாங்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். உங்கள் தந்தை அரசாங்கத்திடம் கூட சம்பளம் வாங்க விரும்பாதவர். எவ்வளவு பணக் கஷ்டம் வந்தாலும் என்னால் அதைச் சமாளிக்க முடியும். என்ன ஆனாலும் நான் பார்த்துக்கொள்கிறேன். நீங்கள் யாரிடமும் ஆயிரம் ரூபாய்க்கு கைகட்டி நின்று வேலைபார்க்கும் சூழலுக்கு ஆளாகிவிடக் கூடாது. நீங்கள் ஒவ்வொருவரும் ஆயிரம் பேருக்கு வேலை வழங்குபவராக ஆக வேண்டும் என்ற லட்சியத்தோடு படிப்பைத் தொடருங்கள்' என்று கூறி, என் பிள்ளைகளைப் படிக்க அனுப்பியது, எனக்கு ஆலோசனை கூறிய மூத்தவர்களுக்குப் பிடிக்கவில்லை. என்னுடைய கடன் சுமை மேலும் அதிகமாகி நான் கஷ்டப்படப்போவதாக அவர்கள் கருதிக்கொண்டிருந்தார்கள். அதனால் நான் முன்னேற்றம் பற்றி சிந்தித்தாலோ, என் பள்ளிக்கூட வளர்ச்சிக்காக ஏதாவது செய்தாலோ எதிர்த்துக்கொண்டே இருந்தார்கள். ஆகவேதான் நான் அவர்களுக்குத் தெரியாமலே அரசு அங்கீகாரத்துக்காக விண்ணப்பித்திருந்தேன். என் கணவரின் மரணத்துக்குப் பிறகு என் அப்பா, அம்மா இருவரும் என்னோடு கடலூருக்கு வந்து தங்கியிருந்தார்கள்.

இனி அந்த அதிகாரியோடு கிடைத்த அனுபவத்தைச் சொல்கிறேன். அவர் என் பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்தபோதே ரொம்ப சூடாகக் காணப்பட்டார். எந்த அறிவிப்பும் இல்லாமல் அவர் திடீரென்று வந்து நின்றதைப் பார்த்ததும் நான் அவரை வரவேற்று அமரவைத்தேன். பள்ளிக்கூட மாணவர் சேர்க்கை, வருகைப் பதிவேடு, ஆசிரியர்களைப் பற்றிய குறிப்புகளை எல்லாம் பார்த்தார். என்னிடம் சில கேள்விகளைக் கேட்டார். நான் பதில் சொன்னேன்.

அதன் பின்பு அரசின் வரைமுறையைக்கூறி, அதற்குத் தகுந்தபடி என் பள்ளிக்கூடத்தில் இல்லாத சில அம்சங்களைக் குறிப்பிட்டார். அது தேவை, இது தேவை; அது இல்லை, இது இல்லை என்று அவர் சில குறைகளை அடுக்கிக் கொண்டிருக்க, என் குடும்பத்தின் மிக மூத்த உறுப்பினர் ஒருவர் வேகமாக அங்கு வந்தார். வந்த வேகத்திலே என்னைத் திட்டத் தொடங்கிவிட்டார்.

''இந்தமாதிரி கேள்விகளுக்கெல்லாம் நீ பதில் சொல்லணுமா...? உனக்கு இந்தப் பள்ளிக்கூடம் தேவையா...? கணவரை இழந்த பெண்கள் அவங்க அவங்க வேலையைப் பார்த்துட்டு வீட்ல இருக்கலையா? உனக்கு மட்டும் ஏன் இவ்வளவு பிடிவாதம்? ஸ்கூலும் வேண்டாம், ஒண்ணும் வேண்டாம்...' என்று அவர் உச்சக்குரலில் கத்திக்கொண்டே இருந்தார். அந்தக் கத்தலில் கோபம், கொந்தளிப்பு, ஆவேசம் போன்றவற்றோடு பெண்களின் திறமை பற்றிய குறைவான மதிப்பீடும் இருந்தது.

இடியும், மழையும், மின்னலும் ஒன்று சேர்ந்து தாக்கியதுபோல் களேபரப்படுத்திவிட்டு அவர் பேசி ஓய்ந்து அந்த அறையை விட்டு வெளியேறியதும் நான் அந்த அதிகாரியின் முகத்தைப் பார்த்தேன். வெலவெலத்துப் போயிருந்தார். ஓரளவு சுதாரித்து அந்தச் சூழ்நிலையிலிருந்து விடுபட்டு, பரிதாபமாக என் முகத்தைப் பார்த்தார். நானும் ஓரளவு அதிர்ந்துபோய்த்தான் இருந்தேன்.

'இந்தப் பெண்ணுக்கு வீட்டுக்குள்ளேயே இவ்வளவு எதிர்ப்பு இருக்கிறதே, இவரது பள்ளிக்கு அரசு அங்கீகாரம் கொடுத்தால், இவரைப் போன்றவர்களின் எதிர்ப்பையும் மீறி இவரால் பள்ளியை நடத்த முடியுமா?' என்பதுபோல் யோசித்து, 'உங்கள் பள்ளிக்கு அரசு அங்கீகாரம் தருவதற்கு வாய்ப்பில்லை' என்று கூறிவிடுவாரோ என்று நான் நினைத்து சாய் பாபாவை வேண்டிக்கொண்டிருந்தேன்.

அந்த அதிகாரி நிதானமாக, தெளிவாக என்னிடம் பேசத்தொடங்கினார். அவரது பேச்சு அவர் சிறந்த மனிதாபிமானம் கொண்டவர் என்பதை எனக்குக் காட்டியது.

'இந்த மாதிரியான மனிதர்களுக்கு மத்தியில் நீங்கள் ஒரு பள்ளிக்கூடத்தைத் தொடங்கி நடத்தி வருகிறீர்கள். நீங்கள் எவ்வளவு கஷ்டப்பட்டு இதனை நடத்திவருகிறீர்கள் என்பது எனக்குப் புரிகிறது. துளிர்விட்டு வளர்ந்த செடி ஒன்று, பூ பூத்து, காய்காய்த்து கனி கொடுக்க வேண்டுமானால் தேவையான அளவுக்கு அதற்கு தண்ணீரும் உரமும் போட வேண்டும். மாறாக சுடுநீர் ஊற்றி அதைக் கருக வைத்துவிடக் கூடாது. நீங்கள் தன்னம்பிக்கையோடு நல்ல செடியாக வளர்ந்து கொண்டிருக்கிறீர்கள். நிச்சயம் சமூகத்துக்குப் பயன்படும் விதத்தில் சேவை செய்வீர்கள். உங்கள் குடும்பத்தில் உள்ள இந்த மாதிரியான மனிதர்களுக்கு மத்தியில் நீங்கள் வாழ்ந்து காட்ட வேண்டும். அதனால் உங்கள் பள்ளிக்கு அரசு அங்கீகாரம் கிடைக்க நான் பரிந்துரை செய்வேன். கவலைப்படாதீர்கள். என் சகோதரிக்குச் செய்வதுபோல் நினைத்து இந்த உதவியைச் செய்கிறேன்' என்றார்.

'ஆஹா இப்படி ஒரு நல்ல மனிதரா!' என்று நான் வியக்கும் அளவுக்கு அவர் என்னிடம் நடந்துகொண்டார். என் குடும்பத்தில் உள்ள ஒருவரேகூட, என் மீது நம்பிக்கை வைக்காதபோது, யாரோ ஒருவர் என் மீது இவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறாரே என்று சிலிர்த்துப் போனேன். நான் ஏற்கனவே சொன்னதுபோல் இந்த உலகம் நல்ல மனிதர்களால்தான் நிரம்பியிருக்கிறது!

பொதுவாக அரசு அதிகாரிகள் பணம் வாங்கிக்கொண்டுதான் எதையும் செய்வார்கள் என்று நினைப்பது தவறு என்பதை நிரூபிக்கும் விதத்தில் இந்த அதிகாரி நேர்மையாக நடந்து கொண்டார். அவர்தான் எனக்கு நம்பிக்கையையும் ஊட்டி, அரசு அனுமதியையும் வழங்கினார்.

தேவஆசீர்வாதம் என்ற இன்னொரு கல்வி அதிகாரியிடம் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தையும் சொல்லித்தான் ஆக வேண்டும். மெட்ரிகுலேஷன் பள்ளிக்கான அனுமதிக்காக நான் விண்ணப்பித்தபோது அவர் ஆய்வுக்காக வந்திருந்தார்.

அவரும், பள்ளிக்கூடத்தில் என் அறைக்குள் நுழையும்போதே கோபமாகத்தான் காணப்பட்டார். 'எங்கெல்லாம் தேடுவது, உங்கள் பள்ளிக்கூடத்தை..? கண்டுபிடிக்கவே முடியவில்லை. விண்ணப்பத்தில் முகவரியைத் தெளிவாக எழுதினால் என்ன?' என்பது அவரது கேள்வியாக இருந்தது.

'மிகவும் சிரமப்பட்டு அடையாளம் கண்டுபிடித்திருப்பீர்கள்போல் தெரிகிறது. உட்காருங்கள் சார்' என்றேன், நான்.

அவரும் வழக்கம்போல் பள்ளிக்கூடம் பற்றி நிறைய கேள்விகளை எழுப்பினார். பாதி கேள்விகளுக்கு என்னால் திருப்தியாக பதில் சொல்ல முடிந்தது. மீதி கேள்விகளுக்கு அரைகுறையாக விளக்கம் கொடுத்துக்கொண்டிருந்தேன். அவர் ஆய்வுக்கு வருவதற்கும் அடுத்த ஆண்டு அட்மிஷன் தொடங்குவதற்கும் ஒரு மாதம்தான் இடைவெளி இருந்தது.

அவர் திருப்தி இல்லாமல் உட்கார்ந்து என்னிடம் கேள்விமேல் கேள்வி கேட்டுக்கொண்டிருந்தபோது சுந்தரம் என்கிற ஆசிரியர் வந்தார். 'மேடம்! ஆசிரியர்கள் கூட்டம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருக்கிறோம். ஆசிரியர்களும், நமது மாணவர்களும் கலந்துகொள்வார்கள். (அதிகாரி தேவஆசீர்வாதத்தைப் பார்த்து) அய்யாவும் வந்திருக்கிறார்கள். அவரும் கலந்துகொண்டால் ஆசிரியர்களாகிய எங்களுக்கெல்லாம் பெருமையாக இருக்கும்' என்றார்.

நான் அந்த அதிகாரியின் முகத்தைப் பார்த்தேன். அவர் வேண்டா வெறுப்பாக சம்மதித்தார்.

உடனடியாக கூட்டத்தைத் தொடங்கினார்கள். ஒவ்வோர் ஆசிரியரும் எங்கள் பள்ளிக்கூடத்தின் சிறப்புகளையும், படிக்கும் மாணவர்களின் நலனில் நாங்கள் காட்டும் அக்கறையையும் புள்ளி விவரங்களோடு அடுக்கினார்கள். 'மக்கு' என்ற பெயரோடு உள்ளே வந்து மதிப்பு மிக்கவர்களாக மாறி, வெளியேறிய மாணவர்களின் பட்டியலை வாசித்தார்கள். நான் செய்த சமூக சேவைகள், பெண்கள் நலனுக்காக

நான் செய்துகொண்டிருக்கும் பணிகளை எல்லாம் ஆதாரபூர்வமாக சுட்டிக்காட்டினார்கள். அதை எல்லாம் தேவஆசீர்வாதம் பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்தார்.

நிகழ்ச்சி முடிந்தது. தேவஆசீர்வாதம் கீழே இறங்கி வந்ததும் என்னிடம் 'இவ்வளவு சிறப்புமிக்க நீங்கள், மேலும் சேவை செய்து சமூகத்துக்கு உதவ வேண்டும். அதற்கு என்னால் முடிந்த உதவியாக மெட்ரிகுலேஷன் அங்கீகாரம் தந்துவிடுகிறேன்' என்றார்.

நான் உடனே 'நீங்கள் உடனடியாகத் தந்தால்தான் இந்த வருடம் நான் அட்மிஷன் போட முடியும்' என்றேன்.

அனுமதி கொடுத்தார். அதற்காக அரசுக்குச் செலுத்தவேண்டிய பணத்தை நான் உடனடியாகச் செலுத்தவேண்டி இருந்தது. அந்தக் காலகட்டத்தில் அது ஒரு மலைப்பான தொகை. ஆனாலும் எப்படியோ புரட்டி, குறிப்பிட்ட நாளுக்குள் செலுத்தி அங்கீகாரத்தைப் பெற்றேன்.

அந்த இரண்டு நல்ல அதிகாரிகளையும் நான் மறக்கவில்லை என்பதற்காக இதை எழுதுகிறேன். நான் அன்று சாதாரணமாகத் தொடங்கி, இப்படிப்பட்ட நல்ல அதிகாரிகளால் அங்கீகரிக்கப்பட்டு வளர்ந்த எங்கள் கல்வி நிறுவனம் இன்று பெயர் சொல்லும் அளவுக்கு கிளை பரப்பி வளர்ந்து நிற்கிறது. அதன் பெருமையில் இவர்களைப் போன்ற அதிகாரிகளுக்கும் பங்கு உண்டு.

# 13



## உதயமானது இந்தியாவின் முதல் சாஷே ஷாம்பு!

இந்தியாவின் தெற்கு முனையில் அதாவது முக்கடலும் சங்கமிக்கும் கன்னியாகுமரி கடற்கரையில் இரண்டு நண்பர்கள் போய் நின்றார்கள். இரண்டு பேரும் வாழ்க்கையில் மிகவும் கஷ்டப்பட்டவர்கள். வாழ்க்கையில் பல்வேறு முயற்சிகளை எடுத்துப்பார்த்து அவற்றில் எல்லாம் தோல்வியடைந்தவர்கள்.

'பார்த்தாயா...! நாம் வாழ்க்கையின் முடிவிற்கு வந்துவிட்டோம் என்பதை இந்தக் கடலும் காட்டுகிறது. அவ்வளவுதான். இதுதான் இறுதி. இதற்கு மேல் நிலப்பாப்பே இல்லை' என்று நண்பர்களில் ஒருவர் கூறினார்.

உடனே இன்னொரு நண்பர் 'நீ கடற்கரையில் நின்றுகொண்டு கடலைப் பார்த்தபடி நிலப்பாப்பு முடிந்துவிட்டது என்கிறாய். அப்படியே கொஞ்சம் மாற்றி யோசித்துப்பார். கடலைப் பார்க்கும் நீ திரும்பி நின்றுகொண்டு பார்த்தால், இங்கே இருந்துதான் பூமி தொடங்குகிறது என்பதை உணர்வாய்' என்றார்.

உடனே அவரும் திரும்பிப் பார்த்தார். 'ஆமாம் இங்கிருந்துதான் பூமி தொடங்குகிறது' என்று புதிய நம்பிக்கையோடு தனது முயற்சியை மீண்டும் தொடங்கினார்.

அதுபோல்தான் எங்கள் வாழ்க்கையும்! கணவரின் மரணம் என்ற ஓர் எல்லையைக் காட்டி, 'இதோ உங்கள் வாழ்க்கை முடிந்து போய்விட்டது' என்று சொன்னார்கள். நான் அப்படியே திரும்பிப் பார்த்து, 'இதிலிருந்துதான் எங்கள் வாழ்க்கை இன்னொரு உத்வேகத்துடன் தொடங்குகிறது' என்றேன்.

என் மூத்த மகன் டாக்டர் சி.கே.ராஜ்குமாரின் கையில் என் கணவர் எழுதி வைத்திருந்த பைல் கிடைத்ததும், மளமளவென்று அசோக்குமாரோடு சேர்ந்து அதற்கு உயிரூட்டத் தொடங்கினான். தயாரிப்பு, மெஷின் வடிவமைப்பு, விற்பனை வாய்ப்பு போன்றவற்றில் அவர்கள் மூளையைச் செலவிட்டார்கள். மற்ற மகன்களும் தோள் கொடுத்தார்கள். இந்தியாவில் முதல்முறையாக 'சாஷே ஷாம்பு' பிறந்தது. 'வெல்வெட்' ஷாம்பு என்ற பெயரில் 50 காசுக்கு அது விற்பனையானது. அது மிகுந்த தொழில் புரட்சியை ஏற்படுத்தி, மக்களையும் மனம் மகிழ வைத்தது.

ஒரு தொழில் என்றாலே, 'இந்தத் தொழில் இப்படித்தான்' என்ற செக்குமாடு சிந்தனை காலங்காலமாக இருந்துகொண்டிருக்கிறது. அந்த கடிவாள சிந்தனையைக் கழற்றித் தூர வீசிவிட்டு ஒரு புதுமையை, ஒரு மாற்றத்தை அதில் புகுத்தினால் அந்தத் தொழில் நிச்சயம் ஜெயிக்கும் என்ற எண்ணம் என் கணவருக்கு உண்டு. அவரோடு வாழ்ந்ததால் நானும் அவரைப் போல் சிந்திக்கத் தொடங்கினேன்.

'மைனஸ்' என்பது எல்லாவற்றிலும் இருக்கும். அதைக் கண்டறிந்து நீக்கிவிட்டால் நம்மிடம் இருப்பதெல்லாம் 'பிளஸ்' ஆகிவிடும் என்று என் கணவர் அடிக்கடி சொல்வார். சிற்பம் வடிப்பதை அதற்கு உதாரணமாகக் குறிப்பிடுவார்.

'ஒரு கல் சிற்பம் ஆவது தேவையானதை செதுக்குவதன் மூலம் மட்டுமல்ல! தேவையற்றதை அதிலிருந்து நீக்குவதன் மூலம்தான் அது மிகச்சிறந்த சிற்பமாகிறது.' என்பார்.

அதைத்தான் என் பிள்ளைகளுக்கு நான் பாடம்போல் கற்றுக்கொடுத்தேன். என் மகன்கள் 'சாஷே ஷாம்பு' தொழிலில்

இறங்கியதும், அப்பாவின் கருத்தை அப்படியே கடைப்பிடித்தார்கள். தேவையற்றவற்றை எல்லாம் அடையாளம் கண்டு அவற்றை ஒதுக்கினார்கள். அதன்மூலம் எங்கள் தொழில் பட்டை தீட்டப்பட்ட வைரம்போல் ஜொலித்தது.

குழந்தை ஒன்றைப் பெற்று கையில் தூக்கி வைத்திருக்கும்போது நமக்குள்ளே ஒரு கனவு வர வேண்டும். கற்பனை வர வேண்டும். இந்த உலகத்திலே இது மிகச் சிறந்தது என்ற கர்வமும் கொஞ்சம் வர வேண்டும். எங்கள் சிந்தனையில் உதித்த 'சாஷே ஷாம்பு'வை உருவாக்கி என் மூத்த மகன் என் கையில் தந்தபோது மேலே சொன்ன அத்தனை உணர்வுகளையும் நான் அனுபவித்தேன்.

எங்கள் ஷாம்பு முதலில் வியாபாரத்துக்கு வந்தபோது, வித்தியாசம், விசேஷம், புதுமை, பிரமாண்டம், எதிர்பார்ப்பு போன்ற அனைத்தையும் உருவாக்கியது.

நீங்கள் மளிகைக் கடைகளுக்கு பொருள்கள் வாங்கச் சென்றிருப்பீர்கள். நீங்கள் பொருள்களை வாங்கிக்கொண்டிருக்கும் போது ஒரு வாகனத்தில் இருவர் ஏதாவது ஒரு விற்பனைப் பொருளைக் கொண்டுவருவார்கள். பெரும்பாலும் அவர்கள் அலைந்து திரிந்து சோர்ந்துபோய்க் காணப்படுவார்கள். களைப்பு கண்களில் தெரியும். அலைச்சலின் வியர்வை அழுக்கு அவர்களது உடையில் தெரியும்.

அப்படி வந்து நிற்கும் அவர்கள் எவ்வளவு உயர்ந்த பொருளைக் கொண்டுவந்தாலும் உடனடியாக கடைக்காரர்களின் பார்வை அவர்கள் பக்கம் திரும்பாது. அந்தக் கடையில் நின்று பொருள்கள் வாங்கும் வாடிக்கையாளர்களின் பார்வையும் அவர்கள் பக்கம் திரும்பாது. 'அண்ணாச்சி எங்களை கவனிங்க... என்ன பொருள் வேணும்? எவ்வளவு வேணும்னு சொல்லுங்க...' என்பார்கள். 'ஆர்டர்' எடுக்க வந்திருக்கும் அவர்கள் பக்கமே திரும்ப முடியாத அளவுக்கு, வாடிக்கையாளர்கள் 'எங்களுக்கு சீக்கிரம் சாமானைக் கொடுங்க' என்பார்கள்.

இதில் எங்கே அடிப்படைக் கோளாறு இருக்கிறது என்பதை என் பிள்ளைகள் ஆராய்ந்தார்கள். அப்போது அவர்களுக்கு ஒரு சூட்சுமம் தெரிந்தது. 'அதாவது ஆர்டர் எடுக்கச் செல்லும் அந்த நபர், முதலில் அவரை மாற்ற வேண்டும். அவர் தன்னை மாற்றிக்கொண்டால் அவருக்குத் தக்கபடி வியாபாரிகளை மாற்றிவிடலாம். அப்போதே வாடிக்கையாளர்களையும் திரும்பிப் பார்க்க வைத்துவிடலாம்' என்பதுதான் அந்த சூட்சமம்.

நாங்கள் இந்தியாவிலே முதல்முறையாக அற்புதமான சாஷே ஷாம்புவை உருவாக்கினோம் என்று கூறிக்கொண்டு சும்மா இருக்கவில்லை. வியாபாரிகளுக்குத் தக்கபடி எங்களை மாற்றினோம். அதனைப் பயன்படுத்தும் மக்களுக்கு தக்கபடியும் எங்களை மாற்றினோம்.

எப்படி தெரியுமா? ஒரு குழுவை அமைத்தோம். அவர்கள் அணிந்துகொள்ள எங்கள் சாஷே ஷாம்புவின் மாதிரியை கொண்ட சூப்பரான டி.சர்ட்களை உருவாக்கிக் கொடுத்தோம். கையில் சாஷே ஷாம்புவின் சிறப்பு பற்றிய பைல்களை வைத்திருப்பார்கள். நேர்த்தியான உடை, 'டை' கட்டி, ஷு போட்டுச் செல்வார்கள். எங்கோ தொலைதூரத்திலிருந்து வருகிற 'ஆபீசர்' போன்ற தோற்றம் அவர்களிடம் இருக்கும். அவர்கள் அன்பான புன்னகையை முகத்தில் ஏந்திக்கொண்டு கடைக்காரரை நோக்கிச் செல்வார்கள்.

அவர்கள் போய் இறங்கியதும் கடைக்காரர் ஏதோ பெரிய ஆள்கள் தங்கள் கடையைத் தேடி வந்திருக்கிறார்கள் என்ற எதிர்பார்ப்போடு வரவேற்பார். கூட்டமாக நின்றுகொண்டு 'எனக்கு உப்பு கொடு...' 'சீக்கிரம் புளி கொடுங்க' என்று நச்சரித்துக்கொண்டிருக்கும் வாடிக்கையாளர்களும் 'ஏதோ புதுசா கொண்டு வந்திருக்காங்க. அதை என்னன்னு பார்க்கலாம்' என்று கடைக்கண் பார்வையை எங்கள் ஆள்கள் பக்கம் வீசுவார்கள். உடனே கடைக்காரர் 'சார் சொல்லுங்க... என்ன கொண்டு வந்திருக்கீங்க..?' என்பார்.

எங்கள் குழுவினர் பளிச்சென்று பூமாலையைத் தூக்கிப்போடுவது போல் சாஷே ஷாம்புவைத் தூக்கி அவரிடம் காட்டும்போது, 'புதுசா...?

இது எப்படி வியாபாரம் ஆகுமோன்னு தெரியலையே...!' என்று கடைக்காரர் சொல்லி முடிப்பதற்குள் அங்கே குழுமி நின்றுகொண்டிருக்கும் வாடிக்கையாளர்கள் தனக்கு இரண்டு, அவருக்கு நான்கு, பக்கத்து வீட்டுக்கு மூன்று என்று போட்டிபோட்டு கேட்டு வாங்குவார்கள். இப்படித்தான் எங்கள் சாஷே ஷாம்பு அறிமுகத்தில் அதிசயம் நடந்தது.

அதை வாங்கும்போது அவர்கள் முகத்தில் அப்படி ஒரு புன்னகை பூத்ததை நாங்கள் பார்த்தோம். வீட்டுக்கு வாங்கிச் செல்லும் அம்மாக்கள் அதை மறைத்து வைத்துக்கொண்டு தங்கள் குழந்தைகளிடம், 'அம்மா புதுசா என்ன வாங்கி வந்திருக்கேன் தெரியுமா சொல்லு...?' என்று கேட்க, அதுவரை சாஷே ஷாம்புவை பார்த்திராத குழந்தைகள், அதை என்னவென்று சொல்லத் தெரியாமல் திகைத்து நிற்பார்கள்.

பின்பு தாய் ஆசை ஆசையாக அந்தக் குழந்தைகளைக் குளிப்பாட்டத் தொடங்குவாள். ஒரு ஷாம்புவை அப்படியே பிரித்தெடுத்து பூ போல அதைக் கையாண்டு, கத்தரியால் வெட்டி ஷாம்புவை அப்படியே கை நிறைய எடுத்து, தன் குழந்தையின் தலையில் தேய்த்து குளிப்பாட்டிவிட்டு, துவட்டிவிடும்போது 'சில்க்' போல் குழந்தைகளின் முடி சிலிர்த்து நிற்பதைப் பார்க்கவே அழகாக இருக்கும். அம்மாவுக்கு!

மறுநாள் அம்மா கடைக்குச் செல்லும்போது குழந்தைகள் 'அம்மா சாக்லேட் வாங்கிட்டு வரவேண்டாம். அந்த ஷாம்புவை வாங்கிட்டுவா' என்று சொல்லும் அளவிற்கு சாஷே ஷாம்பு மக்கள் மனத்தில் எளிதாக இடம்பிடித்தது. அதனால் நிகழ்ந்தது கூந்தல் புரட்சி... மகிழ்ச்சிப் புரட்சி... பொருளாதாரப் புரட்சி.

அந்த நாள்களில் ஷாம்புவின் தலைநகரமாக கடலூர் இருந்தது. கடலூருக்குள் நுழையும் வழியில் 'ஷாம்பு நகரம் உங்களை அன்புடன் வரவேற்கிறது' என்று விளம்பரங்கள் பளிச்சிட்டன.

எங்கள் சாஷே ஷாம்பு புரட்சியில் வளர்ந்தது நாங்கள் மட்டுமல்ல. வியாபாரிகளும் வளர்ந்தார்கள். வாடிக்கையாளர்கள் மகிழ்ந்தார்கள்.

அத்தனைக்கும் மேலாக கடலூர் நகரமே, வாழ்ந்து, வளர்ந்தது, குடிசைத் தொழில்போல் அதை மாற்றி, தேவையான மூலப்பொருள் களை வீட்டுக்கு வீடு கொடுத்து, கையால் இயங்கும் மெஷின்களையும் கொடுத்து, தயாரிப்பு முறைகளையும் கற்றுக்கொடுத்தோம். அதனால் இந்தியா முழுவதிலும் எங்கள் ஷாம்பு சக்கைப் போடுபோட, அதைத் தயாரித்து வழங்கிய மக்களின் கைகளில் நிறையப் பணம் புழங்கியது. அவர்கள் வாழ்க்கைத்தரம் உயர்ந்தது. அந்தப் பணத்தில் படித்தவர்கள் அநேகர். புதிய தொழில் தொடங்கியவர்கள் ஏராளம். திருமணத்துக்கு ஏங்கிக்கொண்டிருந்த பெண்களுக்குத் திருமணம் நடைபெற்றது. வீடு, நிலபுலன்களை மக்கள் வாங்கவும் தொடங்கினார்கள். 1980ஷை – ஆம் ஆண்டு வாக்கில் கடலூரில் மிகப்பெரும் பொருளாதார மேம்பாடு, சாஷே ஷாம்புவால் எங்கள் கண்முன்னே நிகழ்ந்தது.

ஒருமுறை நான் கடலூர் பஜாருக்குள் காரில் சென்றுகொண்டி ருந்தேன். என் முன்னே ஒரு பெரிய யானை உடலை அசைத்து அசைத்துச் சென்றுகொண்டிருந்தது. டிராபிக் ஜாம் ஆனாலும் அதன் நடை அழகில் நான் லயித்தேன். சிறிது நேரத்தில் அந்த கம்பீர யானை, அக்கம்பக்கத்தில் தனது (தும்பிக்) கையை நீட்டியது. காசு கொடுத்தார்கள் அதற்குதான் என்ன செய்கிறோம் என்றே தெரியாது. ஒருவேளை தேங்காயோ பழமோ தருவார்கள் என்று நினைத்து அது கையை நீட்டியிருக்கலாம். இவர்கள் `50' காசு, ஒரு ரூபாய் வைக்க, (இப்போது யானைகளை 5 ரூபாய் 10 ரூபாய் கொடுத்தால்தான் வாங்கும் அளவுக்கு பழக்கிவிட்டார்கள்). 'சரி நம்மோடு நிற்கும் பாகனுக்குப் பயன்படுமே' என்ற எண்ணத்தில் அது அவரிடம் கொடுத்துக்கொண்டிருந்தது.

நான் பார்த்துக்கொண்டே இருக்க, யானைக்குக் காசு கொடுக்க பலர் போட்டி போட்டார்கள். காசு கொடுப்பவர்களுக்கு செலவு. வாங்கும் யானைக்கும் மகிழ்ச்சி இல்லை. ஆனாலும் காசை தும்பிக்கையில் கொடுத்துவிட்டு ஜாலியாக மக்கள் துள்ளினார்கள். அப்போதுதான் யானையின் பிரமாண்டம் எனக்குப் புரிந்தது. யானைக்கு காசு கொடுத்துவிட்டு உற்சாகத் துள்ளல் போடுகிறார்கள்

மனிதர்கள். அந்த அளவுக்கு யானை கம்பீரமும், கர்வமும் கொண்டதாக இருக்கிறது. அவ்வளவுக்கு மக்கள் நேசிக்கும் மதிப்பு மிகுந்த யானையை நமது வியாபாரத்துக்கு எப்படிப் பயன்படுத்தலாம் என்று சிந்தித்தேன்.

உடனே என் பிள்ளைகளை அழைத்து 'யானை ஐடியா' கொடுத்தேன். எப்படி தெரியுமா?

ஊருக்கு ஒரு கடை. கடைக்காரர்கள் தானே எங்களுக்கு முதலாளி? அவர்தானே உச்சி குளிர்ந்து பொருள்களை விற்க வேண்டும்?

"வழக்கமாக பத்து டஜன் சாஷே ஷாம்பு வாங்குகிறவர் கடைக்கு முன்னால் யானையுடன் போய் நில்லுங்கள்" என்றேன்.

போனார்கள். 'ஒரு மாலையை யானையின் கையில் கொடுத்து அந்த வியாபாரியின் கழுத்தில் போடச் சொல்லுங்கள்' என்றேன். போட்டார்கள். அந்த நேரத்தில் சிலிர்ப்போடு அவர் நிற்கும்போது 20 டஜனை எண்ணிக் கொடுத்தார்கள். அதையும் சிரிப்போடு வாங்கிக்கொண்டார். தரமான பொருள்களை வியாபாரிக்கும் லாபமுள்ள பொருள்களை எப்படி வேண்டுமானாலும் விற்கலாம் என்பதுதான் எங்கள் கொள்கை.

அப்படி நாங்கள் புதுமை செய்தபோது இன்னும் ஓர் அதிசயமும் நிகழ்ந்தது. யானை மீது வியாபாரம் செய்தது, ஊர் முழுவதும் பரவியது. நம்ம கடை முன்பும் யானை வர வேண்டும். நமக்கும் அது மாலைபோட வேண்டும் என்று பல வியாபாரிகள் நினைத்து போட்டிபோட்டு வாங்கினார்கள். யானையும் அங்கெல்லாம் போனது.

யானை மூலம் மக்கள் மனத்திலும் சாஷே ஷாம்பு நன்றாகப் பதிந்ததால் மக்களும் நிறைய வாங்கிப் பயன்படுத்தினார்கள். இப்படி எல்லாம் புதிது புதிதாகச் சிந்தித்து, செயல்பட்டுத்தான் நாங்கள் வளர்ந்தோம்.

# 14



## அன்பு... அறிவு... அம்மா!



மகன், டாக்டர் ‘வெல்வெட்’

சி.கே.ராஜ்குமார்

**அம்மாவிடமிருந்து கற்றதும் பெற்றதும்**

‘**நா**ன் பெற்றவை ஆறும் தெய்வக்குழந்தைகள்’ என்று நான் சொல்லும்போதெல்லாம், என் பிள்ளைகள் ‘ஆமாம்... நாங்கள் ஹேமா – சின்னி கிருஷ்ணன் என்ற தெய்வங்கள் பெற்றெடுத்த குழந்தைகள்’ என்று கூறி என்னைச் சிலிர்க்க வைக்கிறார்கள்.

நான் என் பிள்ளைகளிடம், ‘என்னைப்பற்றி பலரும் பலவிதமாகப் புகழ்கிறார்கள். பற்பல பட்டங்கள் தருகிறார்கள். அவர்கள் எல்லாரும் என்னை ஒரு சாதனைப்பெண் என்ற கண்ணோட்டத்தில் பார்க்கிறார்கள். நீங்கள் என் பிள்ளைகள். உங்கள் பார்வையில் நான் தாயாக உங்களை எப்படி வளர்த்தேன் என்பதைக் கூறினால், அது இந்த புதிய தலைமுறைக்கு பயனுள்ளதாக இருக்குமே என்றேன். அவர்களும் ஆர்வத்தோடு சம்மதித்தார்கள். அவர்களது கருத்துகளைத் தொகுத்து தந்தார்கள். அதை நீங்களும் படித்துப் பாருங்களேன்!

இது என் மூத்த மகன் டாக்டர். சி.கே.ராஜ்குமாரின் கருத்து –

‘என் தாய் என்ற இரு சொல்லுக்குள், என் அம்மா என்ற ஓர் உருவத்துக்குள் என்னை வியக்கவைத்த பல முகங்கள் இருக்கின்றன. இந்தியாவில் 30 சதவீத குடும்பங்கள், குடும்பத்தலைவர் மாரடைப்பால் திடீரென்று மரணத்தைத் தழுவும்போது தடுமாறி நிலைகுலைந்து இருந்த இடம் தெரியாமல் போய்விடுகின்றன. அப்படி ஒரு சூழ்நிலை எங்கள் குடும்பத்தில் ஏற்பட்டபோது எங்கள் அம்மா தன்னையும் ஆறுதல் படுத்திக்கொண்டு எங்களையும் தேற்றினார். எங்கள் குடும்பக் கப்பல் தரைதட்டாமல் பார்த்துக்கொண்டார்.

எங்கள் தந்தை இறந்த அந்தநாள் என் மனக்கண்முன்னே அப்படியே நிழலாடுகிறது. சென்னையில் பயிற்சி டாக்டராக இருந்த எனக்கு, அப்பா கடலூரில் திடீரென காலமான செய்தியைச் சொன்னார்கள். நானும் அவசர அவசரமாகப் புறப்பட்டு ஓடோடி வந்தேன். ‘ஆசை ஆசையாக நம்மை வளர்த்த அப்பா போய்விட்டாரே. இனி நம் அம்மா என்ன செய்வாரோ?’ என்ற ஆற்றமுடியாத சோகத்தோடு, அம்மாவைக் கட்டிப்பிடித்து கண்ணீர்விட பஸ்ஸைப் பிடித்து வந்து இறங்கினேன்.

‘அப்பா எங்கேயும் போகவில்லை. இங்கேதான் இருக்கிறார். நம்மோடுதான் இருக்கிறார். நாமெல்லாம் அழுது அவரது ஆத்மாவைக் கலங்க வைக்க வேண்டாம். நாம் அழுவதை அவர் இறந்த பின்புகூட தாங்கிக்கொள்ளமாட்டார். அதனால் அழக் கூடாது. அதிலும் நீ டாக்டர். எந்த மரணமும் ஒருபோதும் உன்னை பாதிக்கக் கூடாது...’ என்று நம்பிக்கையூட்டி, என்னைத் தேற்றினார்.

‘சாஷே புரட்சி’ திட்டத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, அம்மா முன்னால் போய் நின்றதும் ‘ஒரு டாக்டரால் உருவாக்கப்பட்ட பொட்டலம் ஷாம்பு என்ற பெயரோடு அதைத் தயாரித்து வெளியிடு’ என்றபோது, என் பார்வையில் அம்மா தீர்க்க தரிசனம் தரும் ஞானியாகத் தெரிந்தார்.

அந்த ‘சாஷே ஷாம்பு’ தயாரிப்பு பணியை மேற்கொண்டு, எப்படி எப்படி வியாபாரம் செய்ய வேண்டும் என்ற ஆலோசனைகளை

வழங்கியபோது, அம்மா என் பார்வையில் ஒரு 'பிசினஸ் மேனேஜ்மென்ட்' நிபுணராகத் தெரிந்தார்.

ஷாம்பு தயாரிப்பு தொழிலில் இறங்கிவிட்டோம். விதவிதமாக அதைத் தயாரித்தோம். ஆனால் 'சாஷே'யில் அதை ஊற்றி 'சீல்' செய்வது பெரும் போராட்டமாக இருந்தது. திருச்சி 'பெல்' தொழிற்சாலையில், சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக்கழக பாலிடெக்னிக் துறையில் எல்லாம் அந்த 'சீல்' மெஷினை உருவாக்கப் பாடுபட்டோம்.

எந்தத் துறையாக இருந்தாலும் அதில் முதல் அடி எடுத்துவைப்பது, சந்திரனில் கால் பதிக்க நீல் ஆம்ஸ்ட்ராங் எடுத்த முயற்சி போன்றதுதான். நான் அந்த 'சீல்' மெஷினுக்காக அலையாய் அலைந்து ஒவ்வொரு மெஷினாக பார்த்து அதில் சின்னச்சின்ன மாற்றங்களை ஏற்படுத்தி எங்களுக்காக உருமாற்றியபோது, சிலர் 'எதற்காக இவ்வளவு முயற்சி எடுக்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். நான் 'சாஷே ஷாம்பு' கொண்டுவரப்போகிறோம் என்றபோது, 'இல்லாத ஊருக்கு வழிகாட்டப் போகிறீர்களாக்கும்' என்று பலர் கிண்டலாகக் கேட்ட சம்பவங்கள் நிறைய உண்டு. கடைசியில் வெறும் ஆயிரம் ரூபாய்க்கு அந்த 'சீல்' மெஷினை சென்னை ஜெனரல் பேட்டர்ஸ் சாலையில் உருவாக்கி வாங்கி வந்தோம். அதை வைத்து தினமும் பத்தாயிரம் சாஷேக்களை 'சீல்' செய்து அம்மா கையில் கொண்டுபோய் அள்ளிக்கொடுத்தபோது, 'உன் அப்பா எழுதி வைத்த பைலுக்கு உயிர் கொடுத்துவிட்டாய்' என்று என்னை உச்சி முகர்ந்தார்.

அதற்குள் எங்கள் 'பொட்டலம் ஷாம்பு' தமிழகத்தின் மூலை முடுக்கு எங்கும் நுரையைக் கிளப்ப, 'வோல்டாஸ்' நிறுவனம் என்னை அழைத்தது. மதிப்பும், மரியாதையும் கொடுத்து வியாபாரம் பேசினார்கள். 'இந்தியா முழுதும் உங்கள் தயாரிப்பை எடுத்துச்சென்று நாங்கள் விற்றுத் தருகிறோம். ஒப்பந்தம் போட்டுக்கொள்வோம்', என்றார்கள். அப்பாவின் கனவுத்திட்டம் கைகூடிவந்தது. உடனே அம்மாவிடம் போன் செய்து தகவலைச் சொன்னேன். 'கடவுளை வேண்டிக்கொண்டு கையெழுத்து போடு. அப்பா உன்னுடன் இருந்து

ஆசீர்வதிப்பார்' என்றார்கள். 1983-ம் ஆண்டில் 'வோல்டாஸ்' நிறுவனத்தோடு ஒப்பந்தம் செய்து கொண்டோம்.

அம்மாவின் நிறைவான செயல்களும், ஆலோசனைகளும் எங்கள் வாழ்க்கையை நிறைவாக மாற்றியது. பெயர், புகழ், பணத்தில் நாங்கள் நிறைந்தோம்.

பின்பு தாய்லாந்தில் நவீன பவுச்மெஷின் ஒன்று உருவாக்கப் பட்டிருந்ததை அறிந்தோம். அங்கு சென்று அதனை வாங்கி வந்தோம். அதன்பிறகு மிகப்பெரிய அளவில் ஷாம்பு சாஷேக்களை உருவாக்க முடிந்தது. இந்தியா முழுவதும் எங்கள் தயாரிப்பு கொடிகட்டிப் பறந்தது. தயாரிப்பு மற்றும் வடிவமைப்புகளில் நிறைய மாற்றங்களை உருவாக்கினோம். 6 வருடங்கள் எங்கள் தயாரிப்பை வோல்டாஸ் நிறுவனம் 'மார்கெட்டிங்' செய்த பின்பு 1989-ம் ஆண்டில் 'கோத்ரேஜ்' நிறுவனங்களின் தலைவர் ஆதி கோத்ரேஜ் அவர்களிடமிருந்து எனக்கு அழைப்பு வந்தது. அவரோடு தொழில்முறைப் பேச்சுகளை நடத்தினேன். எங்களுக்குள் உடன்பாடு ஏற்பட்டது. 1989- ல் இருந்து எங்கள் வெல்வெட் சாஷே ஷாம்புவை 'கோத்ரேஜ்' நிறுவனம் மார்க்கெட்டிங் செய்தது.

சாஷே ஷாம்பு தொழில்நுட்பத்துக்கு இந்தியாவில் முதன்முதலில் 'ஐ.எஸ்.ஐ.' முத்திரை பெற்றுவிட வேண்டும் என்ற ஆசை எனக்கு ஏற்பட்டது. அதற்காக விண்ணப்பித்தோம். எங்கள் வெல்வெட் ஷாம்புவின் தரத்தைப் பார்த்து, விரைவாக 'ஐ.எஸ்.ஐ.' தர முத்திரையைத் தந்தார்கள்.

இந்தியாவில் புரட்சி ஏற்படுத்திய எங்கள் ஷாம்பு பல வெளிநாட்டு எம்.பி.ஏ. வகுப்புகளில் வெல்வெட் சிக்ஷேம்பு வெற்றிக்கு உதாரணமாக எடுத்துக் கொண்டு கல்வி நிறுவனங்களிலும் ஆய்வுக்குரிய விஷயமாக மாறியது.

'இவ்வளவு வேகமாக இந்தத் தயாரிப்பு வளர என்ன காரணம்? எப்படி இவ்வளவு பெரும் தொழில் புரட்சியை ஏற்படுத்தினார்கள்?

மக்கள் இவ்வளவு பெரும் வரவேற்பை அளிக்க என்ன காரணம்? இந்தியப் பொருளாதாரத்தில் அது எத்தகைய நல்ல மாற்றங்களை உருவாக்கியது?' என்ற அடிப்படையில் அமெரிக்கப் பல்கலைக் கழகத்திலும், அகமதாபாத் மாணவர்கள் மத்தியிலும் விவாதங்கள் நடந்தன.

கடலூரில் பிறந்த இந்த வெல்வெட் ஷாம்பு சாஷே, கடல் கடந்து சென்று பெருமை படைக்கும் அளவுக்கு எங்களுக்கு அடிப்படையை அமைத்துக் கொடுத்தவர் அம்மா. ஒவ்வொரு முறையும், தொழில் வளர்ச்சிக்காக அம்மாவிடம் ஆலோசனை கேட்பேன். நான் ஓர் ஆலோசனை கேட்டால், அம்மா ஒன்பது ஆலோசனைகளை சொல்வார். புதிதாக நாங்கள் போடும் ஒவ்வொரு தொழில் திட்டத்தில் இருக்கும் நிறைகளையும், குறைகளையும் எடுத்து என் முன்னால் வைத்து அதில் சிறந்ததைத் தேர்ந்தெடுக்க அம்மா வழிகாட்டுவார். அந்தச் சிறந்த வழிகாட்டுதலால்தான் நாங்கள் சிறந்தவர்களாக ஆனோம்.

எங்கள் அன்பின் சின்னம், எங்கள் அறிவின் சின்னம் அம்மாதான்! அவரது அன்பும், அறிவும் எங்களையும் அன்பானவர்களாகவும், அறிவானவர்களாகவும் உருவாக்கி இருக்கிறது. அன்போடு, அறிவோடு, அம்மாவின் வழிகாட்டுதலோடு நாங்கள் வாழ்க்கையில் உயர்ந்துகொண்டிருக்கிறோம்.'

# 15



## ஆன்மிகப் பாதையில் அம்மா...



மகன், 'Yofi' சி.கே.அசோக்குமார்

**எ**ன் இரண்டாவது மகன் சி.கே. அசோக்குமார், மிகவும் பக்குவமானவன். அப்பாவின் மரணத்தையும், அதைத் தொடர்ந்து நான் பட்ட கஷ்டங்களையும் அருகில் இருந்து பார்த்து வளர்ந்தவன். அதனால் பல்வேறு குடும்பச் சுமைகளை அவனும் அமைதியாக தனது தோள்களில் ஏற்றிக்கொண்டான். அதை அவன் வெளியே சொல்வதில்லை. என் ஆன்மிகச் சிந்தனைகளை முழுமையாகப் புரிந்து கொண்டவன் என் மகன் அசோக்குமார்தான்!

அவனுக்குள் ஆன்மிக சிந்தனைகள் எட்டிப் பார்த்தது வியப்பான விஷயம். மூத்த மகன் டாக்டர் ராஜ்குமாருடன் இணைந்து வியாபாரத்தில் மூழ்கியிருந்த அவன் ரமணர் மீது பற்று கொண்டான். அவர் மூலம் 'நான் யார்?' என்ற சிந்தனை தோன்றி, அதுவே அவனை ஆன்மிகத்தை நோக்கி ஈர்த்துவிட்டது. ஆன்மிக பூமியான திருவண்ணாமலைக்கு அடிக்கடி சென்று வந்தான். காலப்போக்கில்

வியாபாரத்தை மறந்து அங்கேயே தங்கினான். அப்படியே திருவண்ணாமலை அவனை விழுங்கியது.

இளம் வயதிலே சைவத்துக்கு மாறினான். வக்கீலுக்குப் படித்தும் கோர்ட் பக்கம் அதிகம் செல்லாதவன். ஆங்கில மீடியத்தில் படித்தும், தமிழில் அழகுற பொருள் பொதிந்த கவிதைகள் எழுதுவான். அவன் எழுதிய கவிதைகளில் ‘பொய் முகம்’ எனக்கு மிகவும் பிடித்தது.

அதில் நான் ரசித்த சில வரிகளை இங்கே சொல்கிறேன்:

செந்தாமரையாய் பூத்த அழகு முகம்! சேற்றை மறைத்த
செங்கமலம்!

நாலுபேரு மத்தியிலே நல்லவனா பாத்த முகம்
யாருமில்லா நேரத்திலே போனதெங்கே சொல்லாத்தா?
ஊருமெச்ச போலியான முகம். உள் இழுத்த ஆமை ஓடாய் ஒரு
முகம்
சாதி சமயத்தில் ஏறிய முகம். பேதம் பார்த்த ஒரு முகம்.
போதையில் ஒரு முகம்
கடன் கேட்கும்போதும், கடன் கொடுக்கும் போதும்
பச்சோந்தியாய் நிறம் மாறும் முகம்.
வறுமையில் வாடிய முகம். பணம் சேரும்போது ஏறுமுகம்
சோகத்தை மறைத்த சந்தோஷ முகம். கோபத்தை மறைத்த
சாந்த முகம்.
கூழை கும்பிடு போட்ட முகம். கூட இருந்தே குழி
பறிக்கும் முகம்.
நயமாய், வஞ்சகமாய், நயவஞ்சகமாய், பன்முகம்
இத்தனை முகம் கொண்ட நாமெல்லாம் நான்முக, ஆறுமுக
கடவுள்தானேன்னு சூடமேத்தி சொல்லாத்தா!
கள்ளம் கபடமில்லா பிஞ்சுமுகம் நஞ்சாகி போனதெப்போ?
காதலனாய் களியாட்டம் போட்ட முகம். கல்யாணத்திற்கு பின்
போனதெங்கே?

பெத்தவங்க ஆனபுறம் பெத்தவங்க மேல வைச்ச பாசம்

போனதெங்கே சொல்லாத்தா?

ஊழ்வினையால் வந்த முகம்! சூழ்நிலை கைதியாய் ஒரு முகம்!
நகல்களாகாமல், பொய்முகம் களைந்து, நாம் நாமாக வாழ்வது எப்போது?
மனம் சொல், செயல் லயமானால், மனம் ஒரு முகபட, புலனைந்தும் ஒடுங்க,
அகமும் புறமும் ஒன்றாக, மெய் வெளிபட, பொய்முகம் தானே விலகுமே!

நச்சுன்னு இருக்குதா கவிதை!

அசோக்குமாரின் சொல், சிந்தனை, செயல் மூன்றுக்கும் எப்போதுமே தொடர்பு இருக்கும். யோகா, தியானம், நேச்சுரோபதி என்று இயற்கையான வாழ்க்கையை அமைத்துக்கொண்ட அவன், அவற்றை ஒருங்கிணைத்து மக்களுக்கு வழங்கும் 'யோஃபை' (YoFi) என்ற நிறுவனத்தை நடத்துகிறான்.

சேவை உணர்வும் அவனுக்கு உண்டு. உலகிலே இந்தியாவில்தான் பார்வையற்றவர்கள் அதிகம். 'தொடு உணர்வு' என்ற மென்மை மிகுந்த அறிவு பார்வையற்றவர்களிடம் அதிகம் இருக்கிறது. அதை உணர்ந்து சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளில் 'ரிப்ளக்ஸாலஜி' என்ற ஆரோக்கிய கலையை அவர்களுக்கு கற்றுக் கொடுத்து, 'ரிப்ளக்ஸாலஜி' மையங்களை அங்கே உருவாக்கியிருக்கிறார்கள். அந்த மையங்களுக்கு மக்கள் அதிகம் செல்கிறார்கள். அதன்மூலம் மக்களுக்கு உடல் நலம் கிடைக்கிறது. பார்வையற்றவர்களுக்கு கௌரவமான முறையில் வருமானம் கிடைக்கிறது. விழி இழந்தவர்கள் வாழ்க்கையில் ஒளி ஏற்றிட விரும்பிய என் மகன், 'நேச்சுரல்ஸ்' நிறுவனத்துடன் இணைந்து 'ரிப்ளக்ஸாலஜி' மையமும் தொடங்கியிருக்கிறான்.

ஆன்மிகத்தையும், சேவையையும் இரு கண்களாகக் கொண்டிருக்கும் அவன், என்னைப் பற்றி விவரிக்கும் கருத்துக்கள்:

'அம்மாவிடம் துணிச்சலும், தைரியமும் மிக அதிகம். பிரச்னைகள் வரும்போதுதான் அவரிடம் இருக்கும் முழுத் திறமையும் வெளிப்படும்.

1972-இல் நாங்கள் கடலூரில் அடர்ந்த தோட்டத்துக்குள் அமைந்திருந்த பழைமையான வீட்டில் வசித்து வந்தோம். அப்போது ஒருமுறை பேய்மழை கொட்டியது. நாங்கள் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்த காலகட்டம் அது. சூறாவளியும், மழையும் தொடர்ந்து அடித்ததால் நீர் நிரம்பி சாத்தனூர் அணை உடைந்தது. பெண்ணை, கெடிலம் ஆகிய இரு ஆறுகளிலும் நீர் பொங்கி இரண்டும் ஒன்றாயின. எங்கள் வீடு இருந்த தோப்பு முழுவதும் நீர் சூழ்ந்தது. வீட்டுக்குள்ளும் நீர் புகுந்தது. அப்போதும் அம்மா தைரியத்தை இழக்கவில்லை. எங்கள் வீட்டுப் பணியாளர் ராமுவை துணைக்கு அழைத்தார். அவர் உதவியோடு எங்களை எல்லாம் மிதக்கும் வசதி கொண்ட ஒரு பெரிய பேரலில் அம்மா ஏற்றினார். அவரும் ஏறிக்கொண்டார். அப்படியே ராமு தள்ளிக்கொண்டு போனார். எல்லாரும் போய் வேல் பார்மஸியை அடைந்தோம். எங்களை எல்லாம் அப்பாவும், ராமுவும், அம்மாவும் சேர்ந்து பார்மஸியின் மாடியில் ஏற்றிவிட்டார்கள். நாங்கள் பாதுகாப்பாக இருந்தாலும் அப்போது கடலூரே வெள்ளத்தில் மிதந்தது.

2004-ல் சுனாமியை அம்மா சந்தித்தார். அப்போது கடலூரில் உள்ள வீடோ, தோப்போ பாதிக்கப்படவில்லை என்றாலும் ஏராளமான மக்கள் இறந்தார்கள். அதைக் கேள்விப்பட்டு அம்மா கலங்கிப்போனார். தம்பி ரங்கநாதனை அழைத்து, 'முடிந்த அளவு உதவி செய்' என்றார். அவர் கெவின்கேர் மூலமாக ரூ.50 லட்சத்துக்கு அங்கன்வாடி மையங்களை உருவாக்கிக் கொடுத்தார். 2011-ம் ஆண்டு இறுதியில் தானே புயலையும் அம்மா சந்தித்தார். அதிலும் மக்கள் பெரும் பாதிப்புக்குள்ளானார்கள். மரங்கள் எல்லாம் விழுந்தன. மக்கள் எல்லாரும் கலங்கினார்கள். எங்கள் தோப்பில் இருந்த பெரும்பகுதி மரங்கள் அழிந்தன. தானே புயலின் கோரத்தாண்டவம் முடிந்ததும், அம்மா கடலூரைச் சுற்றிப் பார்த்துவிட்டு தம்பி சி.கே.ரங்கநாதனை அழைத்து 'உதவி செய்' என்றார். அவரும் தாராளமாக உதவினார்.

நாங்கள் எல்லாரும் தொழில் துறையில் காலூன்றி வேகமாக வளர்ந்து கொண்டிருந்த காலகட்டத்தில், அம்மா எங்களுக்கெல்லாம்

திருமணத்துக்கு பெண் தேடிக்கொண்டிருந்தார். அம்மாவின் வேகத்துக்கு பெண் வீடு ஒன்றும் சரியாக அமையவில்லை. அப்போதுதான் வீட்டு உதவியாளர் ராமு 'அம்மா! நான் ஒரு கனவு கண்டேன் என்றபடி அம்மாவிடம் வந்தார். அம்மா விவரம் கேட்க, கடலூர் திருவந்திபுரம் சாலையில் இருக்கும் திரௌபதி அம்மன் கோயிலில் நாம் திருக்கல்யாண உற்சவம் நடத்த வேண்டும். நடத்தினால் எல்லாருக்கும் திருமணம் விரைவாக நடக்கும் என்பதை நான் கனவுபோல் கண்டேன்' என்றார்.

ஆன்மிகத்தில் இருந்த பற்றால், திரௌபதி அம்மன் கோயிலில் திருக்கல்யாண உற்சவம் செய்து வைக்க அம்மா ஆசைப்பட்டார். விமரிசையாக அதை நடத்தினார். நடத்திய அடுத்த வருடமே அண்ணன் டாக்டர் ராஜ்குமாருக்கு திருமணம் நடந்தது. அடுத்தடுத்து ஒவ்வொருவருக்காக திருமணம் அமைந்தது. தொடர்ந்து பல ஆண்டுகள் திரௌபதி அம்மன் கோயில் திருக்கல்யாண உற்சவத்தை அம்மாவே கோயிலில் நடத்தினார்.

திருமணமான எங்களுக்கெல்லாம் பெண் குழந்தைகளே பிறந்தனர். பெண் குழந்தைகள் மட்டும் போதாது ஆண் குழந்தைகளும் வேண்டும் என்று அம்மா ஆசைப்பட்டார். அதற்கும் கோயில் கோயிலாக வழிபாடு செய்தார். அப்போது ஆன்மிக ஜோதிடர் ஒருவர், 'உங்கள் மகன் குமாரவேலுக்குத் திருமணம் செய்து வையுங்கள். திருமணம் முடிந்து அவருக்கு முதலில் ஆண் குழந்தை பிறக்கும். அடுத்தடுத்து எல்லாருக்கும் ஆண் குழந்தைகள் பிறக்கும்' என்றார். அம்மா கடவுளை வேண்டிக்கொண்டு, தம்பி குமாரவேலுக்குப் பெண் பார்த்தார். வீணா மணமகள் ஆனார். திருமணம் முடிந்தது. ஏற்கனவே ஜோதிடர் சொன்னதுபோல் அவர்களுக்கு முதலில் ஆண் குழந்தைதான் பிறந்தது. அடுத்தடுத்து குடும்பத்தில் எங்களுக்கெல்லாம் ஆண் குழந்தைகள் பிறந்தனர்.

கடலூரில் உள்ள சக்கரத்தாழ்வார் கோயில் அந்தக் காலகட்டத்தில் கவனிப்பாரற்றுக் கிடந்தது. மலைமேல் இருக்கும் அற்புதமான ஆலயம்

அது. அருட் சக்தி நிறைந்தது. அங்கு கடவுள் உத்தரவு பெற்று தாயார் சந்நிதியை ராமு கட்டினார். அதில் ஸ்ரீ விஜயவள்ளி தாயார் சிலையை வைக்கும் பொறுப்பை அம்மா ஏற்றுக்கொண்டார். அதற்காக மகாபலிபுரத்துக்குச் சென்று அம்மன் சிலை ஒன்றைப் பார்த்தார். அது பிடிக்காததால், பின்பு விலை மதிப்புமிக்க சிலை ஒன்றைத் தேர்வு செய்தார். அப்போது அம்மா 'நான் இறந்துபோனாலும், இந்தக் கடவுள் சிலை என்றும் 'இறவாமல் இருக்கும்' என்று கூறினார்.

அந்தச் சிலையை ஏற்றிக்கொண்டு காலாப்பட்டு அருகில் காரில் வந்தபோது அதிசயம் ஒன்று நடந்தது. காருக்குள் சிலை இருப்பது யாருக்கும் தெரியாது. அப்படி இருக்க திடீரென்று கும்பலாக இளைஞர்கள் ஓடிவந்து காரை மறித்தார்கள். அவர்கள் கையில், அருகில் உள்ள குளத்திலிருந்து பறித்த அழகான தாமரைப்பூக்கள் இருந்தன. அவர்கள் என்ன ஏதென்று காரணம் கேட்காமல் அம்மாவிடம் தாமரைப்பூக்களைக் கொடுத்தனர். அம்மா சிலிர்த்துப்போனார். பின்பு அந்த அம்மன் சிலை கொண்டுவரப்பட்டு, சக்கரத்தாழ்வார் கோயிலில் நிறுவப்பட்டது.

அம்மா ஏதாவது பொருளாதார நெருக்கடிகளோ, தொழில் பிரச்னைகளோ ஏற்பட்டால் அதுபற்றி எங்களிடம் எதுவும் பேசிக்கொள்ளமாட்டார். ஆனால் திடீரென்று சாப்பிடுவதை நிறுத்திவிடுவார். சில நாள்கள் தண்ணீர் மட்டுமே பருகுவார். அந்த நாள்களில் பெரும்பாலான நேரம் ஆன்மிகச் சிந்தனையுடனே இருப்பார். அவர் சாப்பிடாமல், வெறும் தண்ணீர் மட்டும் அருந்திக் கொண்டிருப்பது எங்களுக்குத் தெரியாமல் பார்த்துக்கொள்வார். நான் மட்டும் அதுபற்றி அம்மாவிடம் எதுவும் கேட்காமல் மவுனமாக அம்மாவை கண்காணிப்பேன். இரண்டொரு நாள்களில் மீண்டும் சாப்பிடத் தொடங்கிவிடுவார்.

எனக்கு விவரம் தெரியத் தொடங்கிய பின்புதான் இதில் இருக்கும் ரகசியத்தை அறிந்தேன். அவ்வப்போது ஏற்படும் பிரச்னைகளைத் தீர்ப்பதற்காக அம்மா, கடவுளை வேண்டிப் பிரார்த்திக்கும் விதத்தில்

உண்ணாவிரதத்தை மேற்கொண்டிருக்கிறார். அவரது சக்திமிக்க உண்ணாவிரதம் எங்கள் குடும்பத்தில் ஏற்படும் நெருக்கடிகளைத் தீர்த்துவைத்திருக்கிறது. அந்தப் பிரச்னை தீர்ந்ததும் உண்ணாவிரதத்தைக் கைவிட்டு இயல்பு வாழ்க்கைக்கு அம்மா திரும்பிவிடுவார். இந்த மாதிரியான விஷயங்களை எல்லாம் நாங்கள் நினைவுகூர்ந்து பார்க்கும்போது எங்கள் அம்மா ஹேமாலயத்துக் கடவுளாக எங்கள் கண்களுக்குத் தென்படுகிறார்.

தொடக்கத்தில், அம்மா பூஜை புனஸ்காரங்களில் ஆர்வம் கொண்டிருந்தார். கடலூர் பாடலீஸ்வரர் கோயிலில் கோதானம் செய்தார். கடலூர் மத்திய சிறைச்சாலைக்குச் செல்லும் வழியில் எங்கள் குலதெய்வமான ஊத்துக்காட்டம்மை ஆலயம் உள்ளது. அங்கு அவ்வப்போது விசேஷ வழிபாடுகளை அம்மா செய்வார். கொல்லிமலைக்குச் செல்வார். சுலோகங்கள் சொல்லிக்கொண்டே இருப்பார். நல்லது நடக்க வேண்டும் என்றால் எத்தனை யாகமும் செய்வார்.

2011–ம் ஆண்டில் தமிழகத்தில் உள்ள மிகப் பிரபலமான பெண்மணியிடமிருந்து அம்மாவுக்கு போன் வந்தது. 'நீங்கள் விரும்பி வழிபடும் சாய் பாபா அவர்கள் எங்கள் வீட்டுக்கு வருகை தருகிறார். நீங்களும் வாருங்கள்' என்று அழைத்தார். அம்மாவும் சரி என்றார்.

நானும், அம்மாவும் சென்னையிலுள்ள அவரது வீட்டுக்குச் சென்றோம். அங்கே பெருங்கூட்டம் நின்றிருந்தது. அந்த வீட்டின் தலைவர் அம்மாவைப் பார்த்ததும் கூட்டத்தை விலக்கிவிட்டு அம்மாவுக்கு வழிவிடும்படி பாதுகாவலர்களுக்கு உத்தரவிட்டார். அம்மா அருகில் சென்று பாபாவை தரிசித்தார். அப்போது நான் பாபாவின் இரு கரங்களையும் பற்றிப் பிடித்துக்கொண்டேன். எனக்கும் அவர் ஆசீர்வாதம் வழங்கினார்.

உருவ வழிபாட்டில் அம்மாவின் ஆன்மிகப் பயணம் தொடங்கியது. குலதெய்வ வழிபாட்டில் ஆர்வம் காட்டினார். பின்பு குரு சாய்பாபா அவர்களின் பக்தியில் ஐக்கியமானார். அடுத்து வள்ளலாரின் ஞான

மார்க்க வழியில் தஞ்சம் அடைந்தார். அந்தப் பாதையிலே தன் ஆன்மிகப் பயணத்தை தற்போது மேற்கொண்டிருக்கிறார்.

ஆன்மிகத்தின் தொடக்கம் பக்தி மார்க்கம். அடுத்து யோக மார்க்கம். யோக மார்க்கத்தின் வழியாக ஞான மார்க்கத்தை அடையலாம். பக்தியில் தன்னை உணர்வதற்கான வழியைக் கண்டறிந்து அதன் வழியில் பயணப்படுவது யோகமார்க்கம். அதன்மூலம் தன்னை உணர்வது ஞான மார்க்கம். சில வருடங்களாக ஞான மார்க்கத்தின் மூலம் அம்மா தன்னை உணர்ந்துகொண்டிருக்கிறார்.

ஊன் சாப்பிட்டு உடம்பை வளர்ப்பதில் அம்மாவுக்கு விருப்பமே இருந்ததில்லை. வள்ளலாரின் அத்தனை கொள்கைகளும் அம்மாவுக்குப் பிடிக்கும். தனக்கு முழு ஈடுபாடு கொண்ட அந்தக் கொள்கைகளை அனைவருக்கும் அறிய வைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அம்மா ஹேமா இல்லத்தில் ஒவ்வொரு மாதமும் 3–வது சனிக்கிழமை 'வள்ளலார் சத்சங்கம்' நடத்துகிறார். அதன்மூலம் நிறையப் பேர் பலன் பெற்றார்கள். மீனவர் குடும்பத்தைச் சேர்ந்த பலர் குடும்பத்தோடு சைவ உணவு சாப்பிடத் தொடங்கினார்கள்.

'உணவு சுத்தம் இல்லாவிட்டால் உடல் சுத்தம் கிடைக்காது. அதனால் அசைவம் சாப்பிடுவதைத் தவிர்க்க வேண்டும்' என்ற தத்துவத்தை அம்மா அதிஅற்புதமாக விளக்குவார். சமயம், தத்துவம், மனம், உடல், ஆரோக்கியம் ஆகியவற்றைக் கலந்து அம்மா விளக்கும்போது கேட்பவர்கள் மனதில் அந்தக் கருத்துகள் அப்படியே பதிந்துவிடும். பல நூறுபேர் உண்மையை உணர்ந்து சைவ உணவுக்கு மாறி உணர்வு ரீதியாகவும், ஆரோக்கிய ரீதியாகவும் மேம்பட்டிருக்கிறார்கள்.

கர்நாடக இசை, வீணை, பாட்டு, சுலோகங்கள் போன்ற பலவற்றை அம்மா கற்றார். பெயரளவுக்கு அதை எல்லாம் கற்காமல், அவற்றில் ஆழ்ந்த ஞானம் பெற்றிருந்தார். பிறகு அம்மா ஒருமுறை நோயுற்றபோது சிகிச்சை முடிந்து வந்த பின்புகூட வீணை பயிற்சி பெற்றார். மேடைப் பேச்சும் அம்மாவுக்கு நன்றாக வரும். யதார்த்தமான முறையில் தான் விரும்பிய கருத்துகளை அழகாக எடுத்து வைப்பார்.

இயற்கை மீதும், மூலிகைகள் மீதும் பிடிப்பு கொண்ட அம்மா, மூலிகைகள் பற்றிய தன் அறிவை படிப்பு மூலம் மேம்படுத்திக்கொள்ள விரும்பினார். அதனால் சித்த மருத்துவம் கற்று டாக்டர் பட்டம் பெற்றார். கொல்லிமலைக்குச் சென்று மூலிகைகளைத் தரம் பிரித்துப் பறித்து வருவார். அதில் லேகியம், சூரணம் போன்றவற்றை உருவாக்கி ஏழை நோயாளிகளுக்கு வழங்கினார். அதை ஓர் இலவச சேவையாகச் செய்து ஏழைகளின் ஆரோக்கியத்தை மேம்படுத்தினார். மருந்தோடு, பக்குவமாகப் பேசி அவர்களுக்கு தன்னம்பிக்கையும் ஊட்டுவார்.

மாதம் ஒருமுறை கடலூரில் உள்ள எங்கள் வீட்டில் இயற்கை மருத்துவ முகாம் நடக்கும். அம்மாதான் அதை நடத்துவார். அதில் நோய் தீர்க்கும் மண் குளியல், வாழை இலை போர்த்தும் சிகிச்சைகளைக் கொடுப்பார். இயற்கை உணவுகளையும் தயாரித்து வழங்குவார். வீட்டின் உள்ளேயே 'ஹேமா நேச்சுரோபதி & யோக மையம்' ஒன்றையும் அம்மா நடத்தி, இலவச சேவையாற்றினார்.

நான் அம்மாவுடன் இருக்கும் தருணங்களில் சிலர், 'அம்மா! உங்களுக்கு வயதாகிவிட்டது. ஆனாலும் தினமும் பலமணி நேரம் உழைக்கிறீர்களே. உங்களால் அது எப்படி முடிகிறது?' என்று கேட்பார்கள். அம்மா அதற்கு என்ன பதில் சொல்லப்போகிறார்கள் என்று நான் கவனித்துக்கொண்டிருப்பேன்.

அவர்களிடம் அம்மா, 'நாம் வயதானாலும் சாப்பிடுகிறோம். சாப்பிட்ட உணவு செரிமானம் ஆகும் வரை நம் உடலில் உழைக்கும் சக்தி இருக்கும். நாம் உயிருள்ளவரை உழைக்க வேண்டும். உயிருள்ளவரை சமூகத்துக்கு நம்மால் என்ன செய்யமுடியுமோ அதைச் செய்துகொண்டிருக்க வேண்டும். வயதாக வயதாக நமக்கு அறிவு முதிர்ச்சியும், பக்குவமும் வரும். வயதைக் காரணங்காட்டி அதை எல்லாம் நமக்குள்ளே பதுக்கிவைத்தால் யாருக்கும் எந்தப் பலனும் கிடைக்காது. அதனால் வயதைப் பாராமல் உழைக்க வேண்டும். நம் அனுபவத்தையும் மற்றவர்களுக்குக் கொடுக்க வேண்டும்' என்பார்.

அம்மா இப்படி விளக்கம் கொடுப்பதைப் பார்த்து, கேள்வி கேட்பவர் தன் வயதை மறந்துவிடுவார். வயதான அவரும் தன்னை இளைஞராக நினைத்து உழைக்கத் தொடங்கிவிடுவார். உழைப்புதானே மனிதனுக்கு உயிர்!

தன்னை மறந்து, தன் வயதை மறந்து அம்மா உழைக்கும்போது அவரது பிள்ளைகளான எங்களுக்கும் வயது மறந்துபோகிறது. நாங்களும் எங்களை இளைஞர்களாக நினைத்து, களைப்பின்றி உழைத்துக்கொண்டிருக்கிறோம். புதிய புதிய தொழில்களையும் ஆர்வத்தோடு தொடங்கிக்கொண்டிருக்கிறோம்.''



# 16



## அம்மா ஊட்டிய நம்பிக்கை மருந்து!



மகள், 'மகப்பேறு மருத்துவர்'

ஆண்டாள் பாஸ்கர்

**எ**னது மூத்த மகள் டாக்டர் ஆண்டாள். அவளது கணவர் டாக்டர் பாஸ்கர். இருவரும் ஆந்திர மாநிலம் நெல்லூரில் பிரபலமான டாக்டர்கள். அவர்களது மகள் (அதாவது என் அன்புப் பேத்தி) திவ்யாரஞ்சிதா. அவளும் டாக்டருக்கு படித்துக்கொண்டிருக்கிறாள்.

என் மகள் ஆண்டாள் பாஸ்கர் மகப்பேறு மருத்துவர் என்பதால் அவளுக்கு எங்கள் குடும்பத்தில் யாருக்கும் கிடைக்காத பாக்யம் கிடைத்திருக்கிறது. அவளது ஆஸ்பத்திரியில் பிறக்கும் குழந்தைகள் முதலில் அவள் கரங்களில்தான் தவழ்கின்றன. இந்த பூமியில் முதலில் அவள் முகத்தைப் பார்த்துவிட்டுத்தான், தன் அம்மாவின் முகத்தையே அவை பார்க்கின்றன. இது எவ்வளவு பெரிய கொடுப்பினை என்பதை என் மகள் எப்படி உணர்ந்துகொள்கிறாளோ எனக்குத் தெரியாது. ஆனால் அதை நான் அவளுக்குக் கிடைத்த பெரும் பேறாகக் கருதுகிறேன்.

‘என் வாழ்க்கையிலிருந்து, என் வளர்ப்பு முறையிலிருந்து என்ன பெற்றிருக்கிறாய்? என்ன கற்றிருக்கிறாய்?’ என்று என் மகள் ஆண்டாள் பாஸ்கரிடம் கேட்டேன்.

இதோ அவளே சொல்கிறாள்:

‘நான் பக்தியால் பிறந்தவள். எங்கள் குடும்பத்தில் மூன்று தலைமுறையாக பெண் குழந்தைகள் பிறக்கவில்லை. கடவுள் அருளால் அதை அம்மா முறியடிக்க நினைத்திருக்கிறார். ஆண்டாள் பூஜை செய்திருக்கிறார். அவர் விருப்பப்படியே நான் பிறந்ததால் என் பெயரை ‘ஆண்டாள்’ ஆக்கிவிட்டார்.

பத்து வயதாக இருக்கும்போது அம்மா என்னை சாய் பாபா ஆசிரமத்துக்கு அழைத்துச்சென்றார். அப்போது அம்மா ஆஸ்துமா தொந்தரவால் அடிக்கடி அவதிப்படுவார். அன்று வழிபாட்டை முடித்துவிட்டு, இரவில் எல்லாரும் அங்கேயே தூங்கினோம். அம்மாவின் கனவில் சாய் பாபா தோன்றி, ‘என்ன வேண்டும் சொல்...’ என்று கேட்டிருக்கிறார். ‘உன் பாத சேவையும், அருளும் வேண்டும்’ என்று அம்மா கேட்டிருக்கிறார். சாய் பாபாவும் புன்னகையுடன் ஆசீர்வதித்துவிட்டு மறைந்திருக்கிறார். அன்றே அம்மா ஆஸ்துமா தொந்தரவிலிருந்து விடுபட்டுவிட்டார். பத்து வயதில் இப்படி ஓர் அனுபவத்தை அம்மா அருகிலே இருந்து உணர்ந்ததும் எனக்குள்ளும் பக்தி புகுந்துகொண்டது.

எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. கிட்டத்தட்ட அதே ஆண்டில் இன்னொரு சம்பவமும் நடந்தது. அம்மாவுடன் மீண்டும் புட்டபர்த்தி போயிருந்தேன். அப்போது பத்து நாள்கள் ஆசிரமத்தில் தங்கியிருந்தோம். தினமும் சித்திராவதி நதிக்கு அம்மாவின் கையைப் பிடித்துக்கொண்டு நடந்து குளிக்கச்செல்வேன். நதிக்கரையில் உள்ள கடை ஒன்றில் பாபாவின் பெரிய படம் ஒன்று வைக்கப்பட்டிருந்தது. தினமும் அந்தக் கடையைக் கடந்து செல்லும்போது அம்மா சில நிமிடங்கள் அப்படியே பாபாவின் படத்தின் முன்னால் நின்றுவிடுவார். இமைகொட்டாமல் பாபாவைப் பார்த்துக்கொண்டிருப்பார். தினமும் அம்மா, அப்படி பார்ப்பதை அந்தக் கடைக்காரர் கவனித்திருக்கிறார்.

'என்னம்மா இந்த பாபா படத்தை வாங்கிக்கொள்கிறீர்களா?' என்று கேட்டார். அம்மா, தயக்கத்தோடு விலைகேட்டார். அவர் 40 ரூபாய் என்றார். அம்மாவிடம், கடலூருக்கு திரும்பிச்செல்ல பஸ் டிக்கெட் எடுப்பதற்குத் தேவையான பணத்தைத் தவிர, மிகக் குறைந்த அளவு பணமே கையில் இருந்தது.

கடைக்காரரிடம் பணம் இல்லை என்று சொல்ல அம்மாவுக்கு மனம் இல்லை. ஆனால் அந்தப் படத்தை வாங்காமல் செல்லவும் மனமில்லை. அம்மாவின் தயக்கத்தைப் புரிந்துகொண்ட கடைக்காரர், 'உங்களை அடிக்கடி ஆசிரமத்தில் பார்க்கிறேன். இப்போது பணம் தராவிட்டாலும் பரவாயில்லை. படத்தைத் தருகிறேன். அடுத்த முறை வரும்போது பணத்தைத் தாருங்கள்' என்றார். அறிமுகமில்லாத அவரிடம் கடன் வாங்க அம்மா விரும்பவில்லை.

அம்மா பதில் எதுவும் சொல்லவில்லை. நாங்கள் கடையைக் கடந்து போய்விட்டோம். நாங்கள் நதியில் குளித்துக் கொண்டிருந்தபோது அம்மா 'அந்த பாபா படத்தை எப்படியாவது வாங்க வேண்டும். அதை பாபாவிடம் கொண்டுபோய், அவரது கையெழுத்தையும் வாங்கிவிட வேண்டும்' என்றார். நான் அந்த அதிசயம் எப்படி நடக்கும் என்று சிந்தித்துக்கொண்டிருந்தேன்.

பத்தாவது நாள். அன்று நாங்கள் கடலூருக்குத் திரும்ப வேண்டும். அந்தக் கடைக்கு அருகில் அம்மாவும் நானும் சென்றுகொண்டிருந்த போது எங்கள் ஊரில் உள்ள ரெட்டியார் அம்மா ஒருவர் அந்தப் பக்கமாக வந்தார். அவரும் பாபாவை தரிசிக்க வந்திருக்கிறார். அவர், அம்மாவைப் பார்த்து நலம் விசாரித்துவிட்டு, ஆசிரமத்துக்கு வந்து எத்தனை நாள்கள் ஆகியிருக்கின்றன என்றெல்லாம் கேட்டார். பின்பு அவராகவே பர்ஸை திறந்து பணத்தை எடுத்தார். 'பத்துநாள் இங்கே தங்கியிருக்கீங்க. பணம் ஏதாவது தேவைப்படும். இதை வைச்சுக் குங்க. திரும்பி ஊருக்கு வந்த பிறகு தாருங்கள்' என்றார். அம்மாவுக் குத் தாங்கமுடியாத மகிழ்ச்சி. பணத்தை வாங்கிக்கொண்டார்.

ஓடிப்போய் அந்த பாபா படத்தை வாங்கினார். அன்றே சாய் பாபாவைப் பார்க்கவும் வாய்ப்பு கிடைத்தது. அம்மா நினைத்ததுபோல், அவரிடம்

ஆசீர்வாதமும், கையெழுத்தும் வாங்கிவிட்டார். கையெழுத்து போட்ட சாய் பாபா அப்போது எங்களைப் பார்த்து அர்த்தமாக ஒரு புன்னகையையும் சிந்தினார். 'நீ நினைத்தது நடந்துவிட்டதல்லவா!' என்பது அந்தப் புன்னகைக்கான அர்த்தமாக இருக்கலாம்.

நல்லவற்றை, நமக்குத் தேவையானவற்றை கடவுளிடம் கேட்டால் அது நிச்சயம் கிடைத்துவிடும் என்ற நம்பிக்கை அன்று எனக்கும் ஏற்பட்டது.

அம்மா உண்மைக்காக வாழ்ந்தார். நாங்கள் உண்மையாக வாழ வேண்டும் என்பதற்காக அவர் அப்படி வாழ்கிறார் என நினைத்தோம். இல்லை. அவருக்கு பொய்யாக வாழத் தெரியாது. உண்மையாக மட்டுமே வாழத் தெரியும் என்பதை உணர்ந்து, நாங்களும் உண்மையை வாழ்க்கையாக்கிக்கொண்டோம்.

25 வயதுக்குள்ளேயே எங்கள் வாழ்க்கைக்குத் தேவையான எல்லாவற்றையும் அம்மா கற்றுத் தந்துவிட்டார். நான் டாக்டருக்குப் படித்து முடித்த பின்பு 26 வயதில் எனக்குத் திருமணம் நடந்தது. எனக்கு ஏற்ற வரனை அம்மாதான் தேடிப்பிடித்து, தேர்ந்தெடுத்து திருமணம் நடத்திவைத்தார்.

என் கணவர், எனக்கு தாத்தா வழி உறவினர். 'ஏற்கனவே சொந்தக்காரர். அதனால் உன்னை நல்லா பார்த்துப்பார். நல்ல பெயர் எடுத்துக்கோ' இந்த மூன்று வரிகள் தான் அம்மா எனக்கு அருளிய திருமண உபதேசம்.

சென்னையில் தி.நகர் அபிபுல்லா ரோட்டில் SGS கல்யாண மண்டபத்தில் திருமணம் நடந்தது. அண்ணன் அசோக்குமார் அழைத்துச் சென்று நெல்லூரில் கணவர் வீட்டில் கொண்டுவிட்டார். அன்று தொடங்கிய எங்கள் மகிழ்ச்சியான மணவாழ்க்கை இன்றும் நிம்மதியாகப் போய்க்கொண்டிருக்கிறது.

அம்மா எங்களை எல்லாம் வயிற்றில் சுமக்கும்போது ராமநாமம் சொல்லிக்கொண்டே இருப்பதாகக் கூறுவார். நான் நூற்றுக்கணக்கில் பிரசவம் பார்த்திருக்கிறேன். ஒவ்வொரு குழந்தையும் தாயின்

வயிற்றிலிருந்து வெளியே வரும்போதும் நானும் என்னைச் சுற்றி நிற்கும் நர்ஸ்களும் கடவுள் பெயரை ஜெபிப்போம். அந்தக் குழந்தையின் பெற்றோர் எந்த மதத்தைச் சார்ந்திருக்கிறார்களோ அந்தக் கடவுளின் பெயரை அது பிறக்கும் நேரத்தில் உச்சரிப்போம். முதன்முதலில் அந்த நாமத்தைக் கேட்டபடிதான் அது என் கைகளில் விழும். அதுபோல் ஆசீர்வாதம் செய்வது, மனப்பூர்வமாக வாழ்த்துவது எப்போதும் அம்மாவுக்குப் பிடிக்கும். அதையும் நான் கடைப்பிடிக் கிறேன்.

அம்மா நம்பிக்கையின் சின்னம். வானமே இடிந்து விழுந்தால்கூட அவர் தடுமாறமாட்டார். அதுபோல் யார் எவ்வளவு கவலையோடு வந்தாலும் அவர்களுக்கு நம்பிக்கை என்கிற மிக அற்புதமான ஊக்க மருந்தை கொடுத்து அவர்களது கவலையை போக்க வைத்து விடுவார்.

அவர் யார் யாருக்கு எந்தெந்த அளவில் அந்த நம்பிக்கை மருந்தை ஊட்டுகிறார் என்பதை நான் அருகில் இருந்து கவனித்தேன். அதை இப்போது என் நெல்லூர் ஆஸ்பத்திரியில் நடைமுறைப்படுத்திக் கொண்டிருக்கிறேன்.

'குழந்தை இல்லை. எவ்வளவோ மருத்துவம் பார்த்து விட்டோம்' என்று கவலையோடு பல தம்பதிகள் வருகிறார்கள். அவர்களுக்கு அம்மாவிடம் இருந்து கற்ற நம்பிக்கை மருந்தைத்தான் முதலில் கொடுக்கிறேன். அதனால் அவர்கள் மனது முதலில் சரியாகிறது. பின்பு 'பாசிட்டிவ்' சிந்தனைகளை அவர்களுக்கு வழங்குகிறேன். அவர்களுக்கு நம்பிக்கை பிறந்து, மகிழ்ச்சி தென்படுகிறது. அதன் பிறகு முறையாகப் பரிசோதித்து தேவையான சிகிச்சைகள் தருகிறேன். தாய்மை அடைகிறார்கள்.

அம்மா அழகாக பாடுவார். குரல் கணீரென்றிருக்கும். 'ஓ மஞ்சி காக்கம்மா' என்ற தெலுங்கு காக்கை பாடலை அம்மா ராகத்தோடு பாடுவதை கேட்டுக் கொண்டே இருக்கலாம். அம்மா தேவாரம் பாடும்போது நானும் உடன் சேர்ந்து பாடி மகிழ்வேன்.

அம்மாவிடம் இருந்து நான் கற்றுக்கொண்ட இன்னொரு பாடம், புகழ்ச்சியையும், இகழ்ச்சியையும் சமமாக பாவிப்பது. அம்மா பலன் பாராது உதவுவார். அப்போது பலன் பெற்றவர்கள் எல்லாம் புகழ்வார்கள். அதை காது கொடுத்து கேட்கமாட்டார். அதுபோல் அவரை புரிந்து கொள்ளாத ஒரு சிலர் இகழ்ந்ததும் உண்டு. அதையும் பெரிதாக்கி மனம் நோகவும் மாட்டார். அவரது மனம் ஒரு அமைதிக்கடல். அதில் யார் கல் எறிந்தாலும் எந்த சலசலப்பும் ஏற்படாது.

2012 பிப்ரவரி மாத இறுதியில் அம்மாவுக்கு உடம்புக்கு ரொம்ப முடியவில்லை என்ற செய்தி, சென்னையிலிருந்து நெல்லூருக்கு வந்தது. 'அம்மாவை அருகில் இருந்து கவனிக்க கொடுத்துவைக்க வில்லையே' என்று கடவுளிடம் கோரிக்கை வைத்துக்கொண்டே, நானும் என் கணவரும் நெல்லூரிலிருந்து கார் ஏறினோம். கார் வேகமாக வந்துகொண்டிருந்தது. சென்னைக்கு அருகில் வரும்போது விபத்து. எங்கள் இருவருக்கும் அடிபட்டது.

கணவரும் நானும் ஆஸ்பத்திரியில்தான் நினைவு திரும்பினோம். இருவருக்கும் அடி. உயிருக்கு ஆபத்தில்லை. கணவர் விரைவாக மீண்டார். நான் ஒன்றரை மாதம் அம்மா ஆஸ்பத்திரியில் தங்கியிருந்த அறையின் பக்கத்து அறையில் தங்கி சிகிச்சை பெற்றேன். கால்களில் பலத்த அடி என்றாலும் வீல்சேரில் சுற்றிச்சுற்றி வந்து அம்மாவையும் பார்த்துக்கொண்டேன்.

'நெல்லூரில் அவ்வளவு பெரிய ஆஸ்பத்திரியை நடத்தும் நீ, அம்மாவை அருகில் இருந்து கவனிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டாய். இதோ அந்த வாய்ப்பை இப்படி தந்திருக்கிறேன். பயன்படுத்திக்கொள்' என்று கடவுள் சொன்னதுபோல் இருந்தது.

அம்மா எங்களுக்கு மட்டும் அம்மா அல்ல! அவரைத் தெரிந்த, அறிந்த அனைவருக்கும் அம்மாதான்! அம்மா என்பதற்கு எடுத்துக்காட்டே எங்கள் அம்மாதான்! என் வாழ்க்கைக்கு ரோல் மாடல், என் அம்மாவும் அப்பாவும்!'

# 17



## அம்மாவிடம் அடி வாங்கினோம் படிப்படியாய் முன்னேறினோம்!



மகன், 'கெவின்கேர்' சி.கே.ரங்கநாதன்

**எ**ன் நான்காவது மகன் சி.கே.ரங்கநாதன். 'கெவின்கேர்' நிறுவனத்தின் தலைவன். அன்பாலும் அறிவாலும் அனைவரையும் அனுசரித்துச் செல்லும் பண்பாலும், தனது நிறுவனங்களை ஆயிரம் கோடிகளுக்கு மேல் வளர்த்தவன்.

என் மகன் ரங்கநாதனிடம் 'பாபா மெட்ரிகுலேஷன் பள்ளியை' 2007-ல் ஒப்படைத்தபோது அங்கு 1000 மாணவ - மாணவியர் படித்துக் கொண்டிருந்தார்கள். 12-ம் வகுப்பு வரை இயங்கிக்கொண்டிருந்தது.

அவன் பொறுப்பை ஏற்றதும் வாழ்க்கைக் கல்விக்கு அங்கே முக்கியத்துவம் கொடுக்கத் திட்டமிட்டு, 'C.K. School of Practical Knowledge' என்று பெயர் மாற்றம் செய்தான். வெறும் கல்வியை மட்டும் கொடுத்தால், அவர்கள் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு

வெளியே செல்லும்போது வாழ்க்கைக் கல்வியை எதிர்கொள்ளத் திணறிவிடுவார்கள். திணறலோ, திகைப்போ அவர்களுக்கு எதிர்காலத்தில் ஏற்படக் கூடாது என்பதற்காக, வித்தியாசமான முறையில் என் மகன் 'Practical Knowledge' கல்வியை வடிவமைத்து வழங்க திட்டமிட்டான்.

எந்தவிதத்திலும் குறைவில்லாத அளவுக்கு தரமான கல்வியை வழங்கிவிட்டு, வாரத்தில் பத்து மணிநேரம் மாணவர்களுக்கு 'வாழ்க்கைக் கல்வி' கொடுக்கும் விதத்தில் பாடத் திட்டத்தை தயாரித்திருக்கிறார்கள். வாழ்க்கைக் கல்வியை நுட்பமாக வழங்குவதற்காகவே விசேஷ தகுதி பெற்ற 15 கல்வியாளர்கள் இருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கைக் கல்வியை வழங்கும் முறையை கேட்கும்போதே எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

விவசாயம் பற்றி வாழ்க்கைக் கல்வியை நடத்தும்போது பக்காவாக விவசாயம் நடக்கும் தோட்டம், வயல்வெளிகளுக்கு அழைத்துச் சென்றுவிடுகிறார்கள். பூத்துக்குலுங்கும் பூந்தோட்டத்துக்கு மத்தியிலும், நெல் மணிகள் நிறைந்திருக்கும் வயலிலும் அந்த மாணவ – மாணவிகளுக்கு வகுப்புகள் நடக்கும். மண் வளத்தில் இருந்து, விவசாயம் செய்து கதிர் அறுத்து நெல்மணிகளை கோணியில் பாதுகாப்பதுவரை அங்கே வகைவகையாய் பிரித்து பாடத்தைச் சொல்லிக் கொடுத்துவிடுகிறார்கள்.

ஒருநாள் சாலையோர டீக்கடையை பற்றி பாடம் நடத்துவார்கள். இன்னொரு நாள் இயந்திரங்கள் தயாரிக்கும் மிகப்பெரிய நிறுவனத்துக்கு அழைத்துபோய் பாடம் நடத்துவார்கள். ஓடு தயாரிக்கும் தொழிற்சாலைக்குப் போனால், அதுபற்றிய அடிப்படை அறிவை கற்றடைந்துவிடுவார்கள். கண்ணாடி தயாரிக்கும் தொழிற்சாலைக்குச் சென்றால் அங்கிருக்கும் விஷயங்களைத் தெரிந்துகொண்டு வந்து அதுபற்றியும் மாணவ – மாணவிகள் விலாவாரியாக விளக்குவார்கள். அந்த மாணவர்களுக்கு மிக அற்புதமான ஞானம் கிடைக்கிறது. மின்சார சாதன பழுது நீக்குதல்,

மரவேலை செய்தல், பிளம்பிங் செய்தல் போன்றவற்றிலும் தேர்ச்சி பெற்றிருக்கிறார்கள்.

ஒருமுறை என் மகன் ரங்கநாதனிடம், மனித வாழ்க்கையில் இடம்பெறும் பெரும்பாலான பகுதிகளுக்கு மாணவர்களை அழைத்துச்சென்று வாழ்க்கைக் கல்வி பயிற்சி கொடுத்து விட்டாயே! ரயில் நிலையம், வங்கி எல்லாம் காட்டி விட்டீர்களா?' என்று கேட்டேன்.

'அதையும் விட்டுவைப்போமா! ஸ்டாக் எக்சேஞ்ச், இன்சூரன்ஸ், போலீஸ் நிலையம்கூட அழைத்து சென்றுவிட்டோம். இப்போது நமது மாணவர்களிடம் பங்குவர்த்தக அறிவும் இருக்கிறது. யாராவது சட்டத்தை மீறினால் போலீஸ் நிலையம் சென்று புகார் கொடுத்து முதல் தகவல் அறிக்கை (எப்.ஐ.ஆர்.) போட வைக்கவும் தெரியும் என்று என் மகன் சொன்னான். அக மகிழ்ந்தேன். அவனது கல்வி நிலையத்தில் இருந்து ஒரு மாணவன் 'முழு மனிதனாகி' வெளியே வர வேண்டும் என்று விரும்புகிறான். அது அவனது அப்பாவின் ஆசை. அது ஈடேறிவிட்டது.

சமீபத்தில் 696 மாணவர்கள் இடம் பெற்ற உலக சாதனை ஒன்று அங்கு நிகழ்ந்தது. அந்த மாபெரும் யோகா சாதனையை 'கின்னஸ்' அங்கீகரித்துவிட்டது. எங்கள் குடும்பத்து முதல் கின்னஸ் சாதனை அது. எங்கள் லட்சிய கல்வி நிறுவனம் என் மகன் தலைமையின் கீழ் மேலும் பல கின்னஸ் சாதனைகளை படைக்கும்.

இப்போது இன்ஜினீயரிங், பாலிடெக்னிக், ஆசிரியர் பயிற்சிக் கல்வி, எம்.பி.ஏ. போன்ற பல புதிய கல்வி மையங்களையும் என் மகன் உருவாக்கி இருக்கிறான். இது மேலும் விரிவடையும். தற்போது ஆயிரத்துக்கு மேற்பட்டவர்கள் படிக்கிறார்கள். அந்த சுற்றுவட்டாரப் பகுதியில் 'ஏ.சி.' இதத்தில் மாணவர்களுக்கு கல்வி வழங்கும் ஒரே நிறுவனம் ரங்கநாதனுடையதுதான். என் கணவரின் இதயமும் இப்போது இதமாக இருக்கும்!

ரங்கநாதன், என் வாழ்க்கையில், என் வளர்ப்பில் கற்றதையும் பெற்றதையும் இங்கே குறிப்பிடுகிறான்:

'நாங்கள் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு உதாரணமாக வாழ்ந்து காட்டுகிறவர் எங்கள் அம்மா. அவர் எங்களுக்காக வாழ்ந்து காட்டியதில் பேச்சு குறைவு. செயல்கள்தான் அதிகம்.

வாழ்க்கைப் பாதையில் அம்மா எங்களை இன்னும் அழைத்துச் செல்கிறார். அவர் முன் செல்ல நாங்கள் பின் தொடர்கிறோம். அவரது வாழ்க்கைப் பயணத்தில் சிக்கல்கள் வந்தன. தொந்தரவுகள் வந்தன. இடைஞ்சல்கள் வந்தன. அந்தந்த நேரங்களில் அவர் எப்படி, என்ன முடிவு எடுக்கிறார், எப்படி அவற்றைச் சமாளிக்கிறார் என்பதை நாங்கள் ஆழ்ந்து கவனிப்போம். ஏன் என்றால் அதுதான் அவர் எங்களுக்குக் கற்றுத்தருகிற வாழ்க்கைப் பாடம்.

எந்த ஒரு மனிதன் வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படை 'வேல்யூ சிஸ்டத்தை' கற்றுக்கொள்கிறானோ அவன் சிறந்த மனிதனாகி விடுவான். அம்மாவின் பாசறையில் நாங்கள் கற்றுக்கொண்ட வேல்யூ சிஸ்டம்தான் எங்கள் வளர்ச்சிக்கு அஸ்திவாரம்.

சின்னஞ்சிறு வயதில் எல்லாரும் அழுவது இயல்பு. நானும் அழுதேன். யார் அழுதாலும் அம்மாவுக்குப் பிடிக்காது. அதனால் வெங்காயத்தைப் பிழிந்து சாற்றை என் கண்களில் விட்டுவிட்டார்கள். அது சற்று கொடுமையானதாக இருந்தாலும் மனத்தில் ஆழப் பதிந்ததால் அத்துடன் அழுகையை விட்டுவிட்டேன். அதன்பிறகு இதுவரை நான் அழவில்லை. இனியும் அழமாட்டேன்.

'சவால் இல்லை என்றால், பிரச்னை இல்லை என்றால் அது வாழ்க்கையே இல்லை. சவால்கள் வரும்போது இடிந்து, உடைந்து, புலம்பி அழுதுகொண்டிருந்தால் எதுவும் நடக்காது. சவால்களை எதிர்த்து நில்! போராடு!' என்பார்கள் அம்மா!

'அது எப்படி அம்மா எங்களால் முடியும்?' என்று கேட்பதற்கு வாய்ப்பே இல்லாத அளவுக்கு அவர்கள் சவாலை எதிர்கொண்டு வாழ்ந்து, வாழ்க்கையின் நுட்பங்களையும், அர்த்தங்களையும் எங்களுக்குக் கற்றுத்தந்தார்கள். உண்மையைச் சொல்லட்டுமா...? அம்மா எங்கள் பாடப்புத்தகம்!

‘ஒரு மனிதனின் உயரத்தை அளப்பது அவன் பணமோ, பதவியோ, செல்வாக்கோ அல்ல! அவனது நடத்தைதான்’ என்று அம்மா அடிக்கடி சொல்வார். அது என் காதுகளில் இப்போதும் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிறது. என் நடத்தையும் சரியாக அமைந்து கொண்டிருக்கிறது.

எங்கள் குடும்பத்தில் நான் ஒரு நோஞ்சான். அதனால் சிறுவயதில் எனக்கு அடிக்கடி உடம்பு சரியில்லாமல் போகும். 4–ம் வகுப்பில் தோல்வி அடைந்துவிட்டேன். தோற்றுப்போய் பரிதாபமாக அம்மா முன்னால் போய் நின்றேன். ‘நீ படிக்காவிட்டாலும் பரவாயில்லை. இந்த வருஷம் இல்லாவிட்டால் அடுத்த வருஷம் பார்த்துக்கொள்ளலாம். நீ உடம்பை நல்லா பார்த்துக்கோ’ என்றுதான் பொதுவாக அம்மாக்கள் சொல்வார்கள். என் அம்மாவும் அப்படித்தான் சொல்வார் என்று நினைத்து அவர் முன்னால் நின்றிருந்தேன். என் அம்மா, ‘உடம்புக்கு சரியில்லை. அது இதுன்னு சொல்லாதே. காரணந்தான் ஆயிரம் சொல்லலாமே. ஒழுங்கா படிச்சு நல்ல மார்க் வாங்க உன்னால முடியும். போ..போ.. போய்ப் படி. இனி இப்படி தோத்துட்டு என் முன்னால வந்து நிற்கக் கூடாது’ என்றார்.

அப்போது அம்மா பச்சாதாபம் காட்டியிருந்தால், நான் படிப்பில் அதைவிடக் கீழே போயிருப்பேன். ‘உன்னால் முடியும். காரணமெல்லாம் சொல்லாதே. போய்ப் படி...’ என்ற அழுத்தமான வார்த்தைகள்தான், எனக்குள்ளே இருந்த அலட்சிய விலங்கை ஒடித்து எறிந்தது.

இன்றைய சமூகத்தில் சிறுவயதிலே குழந்தைகளுக்கு சம்பளம் மிகுந்த ஒரு வேலையைச் சுட்டிக்காட்டி, ‘அந்த வேலைக்கு நீ படிக்க வேண்டும்’ என்று கூறி, வேலைக்காரன் ஆக்குவதற்காகவே குழந்தைகளைப் பழக்கி வளர்க்கிறார்கள். அதற்காகத்தான் படிக்கவும் வைக்கிறார்கள். எங்கள் அம்மா, ஒருபோதும் ‘வேலைக்காகப் படி’ என்று சொல்லவில்லை. ‘வாழ்க்கைக்காகப் படி. பல பேருக்கு வேலை கொடுப்பதற்காகப் படி’ என்றார்கள். படிக்காவிட்டால் அடி வாங்கினோம். அடித்தாலும் அம்மா மீது நாங்களும், எங்கள் மீது

அம்மாவும் போட்டி போட்டு அன்பு காட்டினோம். அம்மாவிடம் அடி வாங்கினோம் என்று சொல்வதற்கும் பெருமைப்படுகிறோம்.

எங்களுக்கு பரீட்சை நடக்கும் காலத்தில் அம்மாவிடம் இருந்து இரண்டே இரண்டு வார்த்தைகள்தான் அடிக்கடி வரும். அவை 'படிப்பு நீ! நீ படிப்பு!' இதைத்தவிர வேறு எதையும் அம்மா பேசமாட்டார். 'பரீட்சை காலத்தில் வேறு எதையும் சிந்திக்கவோ, செய்யவோ வேண்டாம். படிக்கணும். அதுமட்டும்தான் தேவை' என்பதைச் சுருக்கி அப்படி சொல்வார்கள். அதனால் நாங்களும் மனத்தை ஒருமுகப்படுத்தி படிப்பில் இறங்கிவிடுவோம்.

படிப்பு மட்டுமல்ல; கர்நாடக இசை, தேவாரம், திருவாசகம் எல்லாம் கற்க வேண்டும் என்றார்கள். என் மனது அதில் ஈடுபடவில்லை. இந்தி படிக்கச் சொன்னார்கள். அதை நினைத்தாலே அப்போது எனக்கு வேப்பங்காய் கசப்பு. ஆனாலும் அம்மா சொன்னால் சரியாகத்தான் இருக்கும் என்றபடி அவற்றையெல்லாம் ஏற்றுக் கொண்டோம். இப்போது இந்தியா முழுதும் எங்கள் வியாபார சாம்ராஜ்ஜியம் பரவியிருப்பதால், அம்மா அன்று சொன்ன இந்தியின் அருமை இன்று புரிகிறது. அன்று கற்றுக்கொண்டதால் இன்று இந்தியிலும் சமாளிக்கிறோம். அன்று கிடைத்த அனுபவத்தில் வாழ்க்கையை ரசிப்பதுபோல் கர்நாடக இசையையும் இன்று ரசிக்கிறோம். தேவாரம், திருவாசகம் போன்றவை வாழ்வியல் தத்துவங்கள் நிறைந்த கடல். அன்று கற்றது அப்படியே அடி மனத்தில் பதிந்து கிடந்து தேவைப்படும் போதெல்லாம் வாழ்க்கைக்கும், தொழிலுக்கும் வழிகாட்டிக்கொண்டிருக்கிறது.

மன அழுத்தம் என்பது தொழிலதிபர்களுக்கெல்லாம் சொத்து மாதிரியாகிவிட்டது. வேண்டாம்.. வேண்டாம்.. என்று யாரும் அதனிடம் இருந்து ஒதுங்க முடிவதில்லை. எல்லாரையும் அது தன்னோடு சேர்த்துக்கொள்கிறது. ஆனால் அம்மா பிள்ளையான நாங்கள் ஆறுபேரும் அந்த மன அழுத்தத்துக்கு உள்ளாவதில்லை. ஏனென்றால், மன அழுத்தம் ஏற்படாத அளவுக்கு வாழ்வது எப்படி என்று அம்மா

எங்களுக்கு கற்றுத் தந்திருக்கிறார். அதையும் மீறி மன அழுத்தம் வந்துவிட்டால் எங்களுக்கு அல்வா சாப்பிடுவது மாதிரி! அப்போது காற்றாலை மாதிரி எங்களுக்குள்ளே உருவாகும் 'அழுத்த' சக்தியை பாசிட்டிவ் எனர்ஜியாக மாற்றி வெற்றி பெற்று விடுவோம்.

வாழ்க்கைப் படகை நன்றாக ஓட்டுவதற்கு நாம் கற்றுக்கொண்டால், சூறாவளியிலும் அதை இயக்கலாம். கடல் எப்போது அமைதியாகும் என்று காத்திருக்கவேண்டியதில்லை. உள்ளே புகுந்து கலக்கி விடலாம்.

அம்மா அடிக்கடி எங்களிடம் சொல்வார்கள். 'முள் பாதையைத் தெரிந்துகொள்ளுங்கள்; அதை மிதிக்காமல் இருப்பதற்காக! மலர்ப் பாதையை அறிந்துகொள்ளுங்கள்; அதன் வழியாக நடப்பதற்காக' என்பார்கள். அதனால் எங்களுக்கு எல்லா முள்பாதைகளும் தெரியும். ஆனால் மலர்ப் பாதை வழியாகத்தான் நடந்துசென்றுகொண்டிருக் கிறோம்.

நாங்கள் புதிதாக சாஷே ஷாம்பு தொழிலைத் தொடங்கி வேகமாக வளர்ந்து கொண்டிருந்தபோது, நடந்த சம்பவம் பக்கத்து மாநிலத்தில் வழக்கமான தயாரிப்புச் செலவுக்கு வரி கட்டுவதற்குப் பதிலாக விற்பனை விலைக்கு வரிகட்ட வேண்டும் என்ற புதிய சட்டம் போட்டிருந்தார்கள். எங்களுக்கு அதுபற்றித் தெரியவில்லை. எங்கள் நிறுவன ஊழியர்களும் உஷார்படுத்தவில்லை. அம்மாநில அரசுக்கு வழக்கமான வரியை மட்டும் செலுத்தி இருந்த சமயத்தில், ஒரு நோட்டீஸ் வந்தது. ஒன்றரைக் கோடி ரூபாய் பாக்கி என்று வரி கட்டச் சொல்லியிருந்தார்கள். இதுபற்றி எங்கள் மேனேஜரிடம் பேசிய அங்கிருந்த ஓர் அதிகாரி, '5 லட்ச ரூபாய் குடுத்துடுங்க... பார்த்துக்கலாம்!' என்று சொல்லியிருக்கிறார்.

எங்கள் மேனேஜர் இதை ஒரு வெற்றிச் செய்திபோல எங்களிடம் சொல்ல... செம டோஸ் அவருக்கு, 'முழுவரியையும் கணக்குப் பார்த்து கட்டிவிடுங்கள்!' என்று சொல்லிவிட்டோம்.

`இப்படியா இருப்பாங்க... ஒன்றரைக் கோடியை லட்டு மாதிரி தூக்கி நீட்டறீங்களே!` என்று சம்பந்தப்பட்ட அதிகாரி பதறித் துடித்திருக்கிறார். `நியாயம்னா நியாயம்தான். இன்னிக்கு இந்தப் பணத்துக்காக தடம் புரண்டா, நாளைக்கு வேறு சிலரும் தவறு செய்யத் தூண்டுவாங்க. தவறு கூடாது`னு பணத்தைக் கட்டினோம். அம்மா கற்றுத்தந்த நாணயத்தால் இப்படி நாங்கள் நடந்துகொண்டதால், கர்வத்தோடு இதை எங்களால் சொல்லிக்கொள்ள முடிகிறது.

`நமது வாழ்க்கையும், வாழ்க்கைக்கான வழிமுறையும் மிக எளிதானது. நாம் அதை முரண்பாடாக அணுகி சிக்கல் நிறைந்ததாக மாற்றிவிடுகிறோம்` என்று கூறி ஒவ்வொன்றையும் சரியாக அணுகுவது எப்படி என்று அம்மா எங்களுக்காக வாழ்ந்து காட்டியிருக்கிறார். பணம் நிறைய சம்பாதிப்பதற்கான தொழில் திட்டங்களோடு நாங்கள் அம்மாவை அணுகினால், உடனே அவர் `அந்தத் தொழிலில் இறங்கினால் நிம்மதி குறையுமா?` என்று திருப்பிக் கேட்பார். `நிம்மதியும், மகிழ்ச்சியும் கிடைத்தால்தான் அது நல்ல தொழில்` என்பார். அதனால் நாங்கள் தொழில் மூலம் பணம் சம்பாதித்ததைவிட நிம்மதியைச் சம்பாதித்தோம். மகிழ்ச்சியைச் சம்பாதித்தோம்.

பெரிய நிறுவனங்கள் எங்களோடு கூட்டுசேர வந்தால், அதனால் அவர்களுக்கு என்ன பலன்? நம்மிடம் அவர்கள் கூட்டுசேர என்ன காரணம்? நம்மைவிட பெரிய நிறுவனமா? சிறிய நிறுவனமா? என்றெல்லாம் அம்மா ஆயிரம் கேள்விகள் கேட்பார்கள். அதற்கெல்லாம் பதில் கொடுக்க வேண்டும். பதிலில் 100 சதவீதம் அம்மாவுக்கு நம்பிக்கை இருந்தால்தான் அந்தக் கூட்டுத் தொழிலுக்கு சம்மதம் தெரிவிப்பார்கள். அவ்வளவு நிதானமாக ஒவ்வொரு விஷயத்தையும் அணுகுவார்கள்.

நான் கல்லூரிப்படிப்பை முடித்ததும். சாஷே ஷாம்பு தொழிலில் இறங்கினேன். எனக்கு முதலில் தொழில் மீது அவ்வளவு ஈடுபாடு ஒன்றும் ஏற்படவில்லை. அதனால் ஒவ்வொரு சின்னப் பிரச்னைக்கும் தீர்வு தேடி அம்மா முன்னால் போய் நிற்பேன். அமைதியாக சில

நாள்கள் கேட்டுக்கொண்டிருந்தார். ஒருநாள் நான் போய் பிரச்னையைச் சொன்னதும், 'இந்த மாதிரி சின்ன விஷயத்துக்கெல்லாம் என்னிடம் வந்து நிற்காதே. படிச்சிருக்கே. உனக்கும் அறிவு இருக்கிறது. உன்னால இதுக்கு முடிவு எடுக்க முடியும் போ, என்று விரட்டினார். அன்றுதான் சுவரில் அடிபட்டுத் திரும்பிய பந்துபோல் வந்து, சிந்தித்தேன். எனக்குள்ளும் தலைமைப் பண்பு இருந்ததை உணர்ந்தேன்.

கல்வியில் நாங்கள் எல்லாரும் நெகிழ்ந்துபோகும் அளவுக்குக் கூர்மையான கண்ணோட்டம் அம்மாவிடம் இருந்தது. 'கல்வி என்றாலே அது அறியாமை என்ற இருட்டில் இருந்து, அறிவு என்ற வெளிச்சத்துக்கு மக்களைக் கொண்டுவருவதுதான். உண்மை அவ்வாறு இருக்க, அறியாமையில் இருப்பவர்களுக்கு 'மக்கு' என்று ஒரு பெயரைச் சூட்டி அவர்களைப் புறந்தள்ளுவதற்கு யாருக்கும் உரிமை இல்லை' என்று அம்மா சொல்வார்.

அதனால் எந்தக் குழந்தையை மக்கு என்று யார் சொன்னாலும், அந்தக் குழந்தை மீது அம்மாவுக்கு தனிப்பாசம் வந்துவிடும். அந்தக் குழந்தை மீது தனிக்கவனம் செலுத்தி, தன் இதயத்தில் இடம் கொடுத்துவிடுவார். அந்தக் குழந்தையை வீட்டுக்கு அழைத்து வருவார். உணவு கொடுப்பார். படிக்கச் செய்வார். கையைத் திருகி, காதைத் திருகி எப்படியாவது பாடத்தைப் புரியவைத்து, குழந்தையைத் தெளிய வைத்துவிடுவார். அதனால் வேறு பள்ளிகளில் சேர்க்க மறுக்கப்படும் குழந்தைகளை பெற்றோர்கள் அம்மாவிடம் கொண்டு வந்துவிடுவார்கள். அந்தக் குழந்தைகள், அம்மாவின் பள்ளியை விட்டு வெளியேறும்போது, 'நல்ல மார்க் எடுக்கிறான். நல்ல பையன்' என்ற பெயரோடுதான் செல்வார்கள்.

ஆதரவற்ற குழந்தைகளுக்கு அருசுவை உணவோடு ஆன்மீக போதனையும் வழங்குவது அன்னையின் இயல்பு. அவர்களில் பலருக்கு இலவச கல்வியும் வழங்கி வருகிறார்.

இன்று நான் நினைத்துப் பார்க்கிறேன். மக்கு என்ற பெயரில் அம்மாவிடம் அறிமுகப்படுத்தப்பட்ட பலர் அம்மா ஊட்டிய கல்வியால்

இன்று நல்ல நிலையில் இருந்து அம்மாவை வாழ்த்திக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் நன்றாக வாழ அதுவும் ஒரு காரணம்!

`முதலில் வைத்தது தாத்தா பெயர். அந்தப் பெயரையே அழைக்கத் தயங்கும் இவர்கள், உலகிலே பணக்காரச் சாமியின் பெயரை சூட்டிவிட்டு, வெங்கடேஷ் என்று எப்படி அழைப்பார்களோ! என்று நினைத்துக்கொண்டிருந்தபோது, 'வெங்கி.. வெங்கி..' என்று அன்புப் பெயராக சுருக்கி அழைக்கத் தொடங்கிவிட்டார்கள். பாருங்க...! எனக்கு மூன்று பெயர்!!

சிறுவயதில் தென்னை மரம் ஏறி தேங்காய் பறிப்பது போன்ற சுட்டித்தனங்கள் எல்லாம் என்னிடம் இருந்தன. கிணற்றில் குதித்து குளிப்பேன். இதனால் அம்மாவிடம் பிரம்படிகூட வாங்கியிருக்கிறேன். அப்போதே நான் புறா வளர்க்கத் தொடங்கிவிட்டேன். பறவைப் பாசம் என்னோடு சேர்ந்து வளர்ந்துவிட்டது. (அதனால்தான் கிழக்குக் கடற்கரைச் சாலையில் (ஈ.சி.ஆர். ரோட்டில்) இருக்கும் என் பங்களா, 'மினி பறவைகள் சரணாலயம்'போல் இருந்துகொண்டிருக்கிறது) பறவைபோல் 'பறப்பது' எனக்கு பிடிக்கும்போல் தெரிகிறது. அதனால் சிறு வயதில் நான் பலமுறை காணாமல் போயிருக்கிறேன். பின்பு என்னை எங்கெங்கோ தேடிப்பிடித்து வீட்டுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

சிறுவயதில் அடி வாங்கினேன். பின்பு அம்மாவின் கடுமையான சொற்களுக்குக் கட்டுப்பட்டேன். சிந்திக்கத் தொடங்கிய பின்பு சுட்டித்தனங்களைக் குறைத்து நல்ல பிள்ளையாக வளரத் தொடங்கினேன்.

அம்மா எங்களை அடிமையாக வளர்க்கவில்லை. சிந்திக்க வைத்து, தெளிவுள்ள மனிதனாக மாற்றினார்கள். அதனால் அம்மாவே வழங்கிய கருத்துச் சுதந்தர உரிமையைப் பயன்படுத்தி, அம்மாவிடமே விவாதம் செய்வேன்.

ஆன்மிகத்தை எடுத்துக்கொண்டால், சிறுவயதில் அம்மாவின் கொள்கைதான் என் கொள்கையும். அம்மாவுடன் சேர்ந்து சாமி

கும்பிட்டேன். அப்பா இறந்த பின்பு அந்த ஆன்மிக ஈடுபாட்டிலிருந்து நான் மாறுபட்டு கேள்விகள் கேட்டேன். அம்மா பதில் சொல்லி, அவர்கள் கொள்கையில் உறுதியாக இருந்தார்கள். நான் கேள்வி கேட்டு, கேள்வி கேட்டு என் கொள்கையில் உறுதியாக இருந்தேன். 'எனக்கு ஆன்மிக வழிபாட்டு முறைகள் பிடிக்கவில்லை' என்று அம்மாவிடமே கூறிவிட்டேன்.

அம்மா ஆன்மிகத்தை மனத்தில் வைத்துக்கொண்டு, அதன் வழிக்கு 'நீ வருவாய்..வருவாய் மீண்டும் வருவேடா...' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். ஆனால் நான் அம்மாவிடமிருந்து பெற்ற மன உறுதியோடு அப்படியேதான் இருக்கிறேன்.

முதலில் நாங்கள் எல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து தொழில் செய்தோம். அண்ணன்கள், தம்பிகளாக இணைந்து அந்த தொழில் அற்புதமாகத்தான் சென்று கொண்டிருந்தது. சாஷே ஷாம்பு தொழிலில் நாங்கள் கொடிகட்டிப் பறந்த காலத்தில், நான் சகோதரர்களிடமிருந்து பிரிந்து தனியாகத் தொழில் செய்ய விரும்பினேன். 'பிரிய வேண்டாம். ஒன்றாக தொழில் செய்யுங்கள்' என்று அம்மாவும், பாட்டி மனோரஞ்சிதமும் சொன்னார்கள். நான் பிடிவாதமாக வெளியே வந்துவிட்டேன்.

'சாப்பிட்டாயா.. சாப்பிட்டாயா..?' என்று அந்த நாள்களில் தினமும் ஒரு தடவையாவது அம்மா போன் செய்து கேட்பார்கள். அன்புப் பிணைப்பில் என்னை அப்படியே அவர்களுடனே வைத்துக் கொண்டார்கள். அம்மாவின் அன்புப் பிடிக்குள்ளே நான் இருந்துகொண்டு, நான் தொடங்கிய நிறுவனங்களில் எல்லாம் அம்மாவையும் சேர்த்துக்கொண்டேன். அம்மா என்னை விடுவதில்லை. நானும் அவர்களை விடுவதில்லை.

நான் பள்ளியிலும், கல்லூரியிலும் கடைசி பெஞ்சில்தான் இருப்பேன். நான் படிப்பில் ஒன்றும் அவ்வளவு பிரமாதம் இல்லை. கடைசி பெஞ்சில் இருப்பவர்கள்தான் எனக்கு நண்பர்களாகவும் இருந்தார்கள். 'மக்கு' என்று மட்டம் தட்டப்பட்டவர்களைக்கூட தூக்கிவிடும்

அம்மாவின் செயல்திறனைப் பார்த்தே வளர்ந்ததால், நானும் யாரையும் மக்கு என்று சொன்னதே இல்லை. எல்லாருமே அறிவாளிகள்தான் என்ற கொள்கை எனக்கு உண்டு. அதனால் தனியாகப் பிரிந்துசென்று தொழிலைத் தொடங்கியதும், என் நண்பர்களைத்தான் உடன் சேர்த்துக்கொண்டேன். அறிவாளிகள் யார் என்று அடையாளம் கண்டு அவர்களைத் தேடிப்பிடிக்க வேண்டிய அவசியம் எனக்கு ஏற்படவில்லை. நாங்கள் அனைவரும் சேர்ந்து எங்களையே அறிவாளிகள் என்று தொழிலில் நிரூபித்துக்கொண்டோம். என் நண்பர்களுக்கு பதில் அறிவாளிகள் என்று கூறப்பட்டவர்களை நான் சேர்த்திருந்தால், அவர்கள் எங்களை பயமுறுத்தி தொழிலுக்கு முட்டுக்கட்டை போட்டிருக்கலாம்.

நான் தனியாகப் பிரிந்து சென்று, தனியாக தொழில் செய்ததும் சிலர் என் அம்மாவிடம் சென்று, 'வெங்கி பிரிஞ்சு போயிட்டான். அவனே தனியாக தொழில் செய்துக்கிட்ட மாதிரி 'லவ்' பண்ணி அவனே கல்யாணமும் செய்துக்குவான்' என்று சொன்னார்கள். அம்மா உடனே 'அதெல்லாம் சும்மா பேச்சு. என் பிள்ளைங்களைப் பத்தி எனக்குத் தெரியும். நான்தான் எல்லோருக்கும் கல்யாணம் செய்துவைப்பேன்' என்றார்கள்.

எங்கள் மீது அம்மாவுக்கு அந்த அளவுக்கு நம்பிக்கை இருந்தது. நாங்களும் நம்பிக்கைக்குப் பாத்திரமாக நடந்துகொண்டோம். எங்கள் அனைவருக்கும் ஜோடி பார்த்து திருமணம் செய்துவைத்தது அம்மாதான். காதலெல்லாம் எங்களுக்கு வரவே இல்லை.

மாமியார் – மருமகள் உறவைப் பேணுவதில் அம்மா சிறந்த எடுத்துக்காட்டு. மருமகள்களின் தனிப்பட்ட சுதந்தரத்தில் அம்மா ஒருபோதும் தலையிடமாட்டார். அதனால் எந்த மருமகளும் அம்மாவிடம் சிரமப்பட்டதில்லை. என் மனைவி தேன்மொழி 'எனக்கு இவர் மாமியார் அல்ல... அம்மா! என் அம்மாவிடமிருந்து கிடைத்த பாசத்தைவிட அதிக பாசம், இவர்களிடமிருந்து கிடைக்கிறது' என்று நெகிழ்ந்து கூறுவார். இது நாங்கள் கூடுதலாக பெருமைப்பட்டுக் கொள்ளக் கிடைத்த விஷயம்.

தலைமுறை இடைவெளி என்பது எல்லா குடும்பங்களிலும் இருக்கிறது. எங்கள் குடும்பத்தில் வாண்டுகளும் உண்டு. வளர் இளம் பெண்களும் உண்டு. இவர்களிடம் உறவைப் பேணுவதிலாவது அம்மா தடுமாறுவார் என்று நினைத்த நான்தான் தடுமாறினேன். அம்மா தடுமாறவில்லை. அவர் 'டீன் ஏஜ்' பேரன், பேத்திகளிடம் பிணைப்பை ஏற்படுத்திக் கொண்டது எனக்கு ஆச்சரியமான அனுபவம்.

சில பேரன், பேத்திகள் அம்மாவைக் கண்டுகொள்ளாமலே இருப்பதை நான் கண்டதுண்டு. அவர்களை நினைத்து எனக்கு ஆத்திரமும் கோபமும் வரும். அடித்துதான் அவர்களை திருத்த வேண்டும் என்று நான் நினைத்த சில வாரங்களில் அந்தப் பேரன், பேத்திகள் அம்மாவை நாய்க்குட்டி மாதிரி சுற்றிச்சுற்றி வருவதை நான் பார்த்திருக்கிறேன்.

இது எப்படி சாத்தியம்?

அம்மா யாரிடமும் எதையும் திணிப்பதும் இல்லை. நிர்பந்திப்பதும் இல்லை. எதிர்பார்ப்பதும் இல்லை. விட்டுப்பிடிப்பார்கள். தன்னிடம் விலகி நிற்பவர்களுக்கும் அதிக அன்பைக் கொடுப்பார்கள். அன்பு என்றால் இதுதான் என்பதை அவர்களுக்குப் புரியவைத்துவிடு வார்கள். புரிந்தபின்பு நாய்க்குட்டிபோல் அவர்கள் அம்மாவைச் சுற்றுவார்கள். அதனால் இப்போது பிறந்த குழந்தைகள் கூட அம்மாவிடம் அதிகம் நெருங்கிவிடுகிறார்கள்.

சமூக சேவையில் அம்மாவை வெற்றிகொள்ள யாருமே இல்லை. ஏழைகளுக்கு, தெரிந்தவர்களுக்கு திருமணம் செய்துவைத்து அவர்கள் சந்தோஷமாக வாழ்வதைப் பார்க்க அம்மாவுக்கு மிகவும் பிடிக்கும். பணம், பொருள் என்று கேட்டவர்களுக்கெல்லாம் உதவி செய்துகொண்டிருப்பார். எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் அம்மா, உதவி செய்வதைப் பார்த்து எனக்கும் அந்தப் பழக்கம் வந்துவிட்டது. அதற்காகவே 'எபிலிட்டி பவுண்டேஷன்' என்ற அமைப்பை சமூக ஆர்வலர் ஜெயஸ்ரீ ரவீந்திரனுடன் தொடங்கினேன். இந்தியா முழுதும் உள்ள ஊனமுற்ற சாதனையாளர்களைக் கண்டுபிடித்துக் கொண்டு

வந்து சில லட்சங்களை அவர்களுக்கு விருதாகக் கொடுத்து எங்கள் குடும்ப சேவை உணர்வை நிரூபித்து, ஆத்ம திருப்தியைத் தேடிக் கொண்டிருக்கிறேன். எபிலிட்டி பவுண்டேஷனால் இன்னும் ஏராளமான சாதனையாளர்கள் தலை நிமிர்ந்து வாழ்வார்கள்.

அப்பா சின்னிகிருஷ்ணன் அவர்களிடம் இருந்த கண்டுபிடிப்பு ஆற்றல் அற்புதமானது. அவரது கண்டுபிடிப்புதான் இந்தியாவே போற்றும் முதல் சாஷே ஷாம்பு ஆனது. சில அற்புதக் கண்டுபிடிப்புகளை அப்பா நிகழ்த்தினாலும் அவர் உயிரோடு இருக்கும்போது அதனை வளர்த்துப் பாராட்ட, அங்கீகரிக்க யாரும் இல்லை. அந்தக் குறை அம்மாவின் மனத்தில் இருந்தது.

அப்படி இந்த தலைமுறையில் யாரும் அங்கீகாரத்துக்கு உன் அப்பாவைப்போல் ஏங்கக் கூடாது என்று என்னிடம் சொன்னார். அதனால் அம்மா ஆலோசனைப்படி அப்பாவின் பெயரிலே 'சின்னிகிருஷ்ணன் இன்னோவேஷன் அவார்டு' வருடந்தோறும் வழங்குகிறோம். புதிய கண்டுபிடிப்புகளை நிகழ்த்துபவர்கள் குடத்தில் இட்ட விளக்காக அமுங்கிப்போகாமல், அவர்களைக் குன்றிலிட்ட விளக்காக ஜொலிக்க வைத்துக்கொண்டிருக்கிறோம். இதன்மூலம் அப்பாவுக்கும், அம்மாவுக்கும் பெருமை சேர்த்துக்கொண்டிருக்கிறோம்.

அம்மா கடலூரில் பள்ளியைத் தொடங்கி நடத்தினார்கள். பின்பு அதனை சகோதரி விஜயலட்சுமி கவனித்தார். அவரும் பாண்டிச்சேரியில் தனிப் பள்ளி தொடங்கியதும், அம்மா தன் பள்ளியைக் கவனிக்கும் பொறுப்பை என்னிடம் கொடுத்தார். அப்போது 'நான் 8 அடி பாய்ந்திருக்கிறேன். நீ பதினாறு அடி பாய வேண்டும்' என்றார். அந்த பள்ளியை 'C.K. School of Practical Knowledge' ஆகமாற்றினோம். முதலில் கடலூரை ஷாம்புகளின் நகரமாக மாற்றினோம். இதோ இனி கடலூரை கல்வியின் நகரமாகவும் மாற்றிவிடுவோம். அதற்காக அற்புதமான திட்டங்களைத் தீட்டி செயல்படுத்திக்கொண்டிருக்கிறோம். வாழ்க்கைக்குத் தேவையான

எல்லாக் கல்வியும் அங்கே கிடைக்கும். இதற்கும் காரணம் அம்மாவின் ஆசீர்வாதம்தான்.

அம்மாவுக்கு இப்போது (2013–ல்) 80 வயது. நாங்கள் ஒருபோதும் அம்மாவிடம் அவர் வயதை நினைவுபடுத்தியதில்லை. ஒருமுறை ஆஸ்பத்திரியில் இருந்தபோது, 'எனக்கு வயதாகிவிட்டது. கடலூர் வீடு எல்லாவற்றையும் நீயே பார்த்துக்கொள்' என்றார்கள். நான் எதுவுமே பேசவில்லை. 'குணமானதும், அவரே வந்து கடலூர் பங்களாவில் எங்கள் ராணியாக வீற்றிருந்து, எங்களை ஆட்சி செய்வார்' என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. நம்பிக்கை வீண்போகவில்லை. அம்மாவுக்கு குணமானது. வந்தார். 'எங்களை இப்போதும் கடலூரில் இருந்து ஆட்சி செய்து கொண்டிருக்கிறார். அவர் ஆட்சிதான் என்றும் எங்களுக்கு பொற்கால ஆட்சி.'



# 18



## அம்மா ஒரு அதிரடி பெண்மணி



மகள், கல்வியாளர்

`அக்ஷரா` விஜயலட்சுமி ரமணிசங்கர்

**ஐ**ந்தாவதாகப் பிறந்த என் அன்பு மகள் விஜயலட்சுமி மிக அமைதியானவள். அவளது அன்புக் கணவர் ரமணிசங்கர். அவர்களுக்கு இரண்டு மகள்கள். மூத்த மகள் அஸ்வினி. இளையமகள் பவித்ரா.

என் மகள் விஜயலட்சுமி ரமணிசங்கர் என்னைப் பற்றிச் சொல்வதற்கு முன்னால், அவளைப் பற்றி நான் சொல்வதற்கு நிறைய விஷயங்கள் இருக்கின்றன. அவள் பட்டப்படிப்பை முடிக்கும்போதே அவளிடம் கல்வி பற்றிய வித்தியாசமான சிந்தனைகள் நிறைய இருந்தன. அதனால் நான் வெற்றிகரமாக நடத்திக்கொண்டிருந்த பாபா மெட்ரிகுலேஷன் பள்ளியில் அவளை இணைத்துக்கொண்டேன். அவள் சிறப்பாகச் செயல்பட்டதால், பின்பு அவளையே நடத்தும்படி கூறினேன். 1991-ம் ஆண்டில் இருந்து 2007-ம் ஆண்டுவரை 16

வருடங்கள் அவளும், அவளது கணவரும் இணைந்து அதனை சிறப்பாக நடத்தினார்கள். அதன்மூலம் பெற்ற அனுபவங்களை வைத்துக்கொண்டு, புதுமையும் பாரம்பரியமும் நவீனமும் கலந்த, மன அழுத்தம் இல்லாத வித்தியாசமான கல்வியை வழங்க, புதிய கல்வி நிறுவனம் தொடங்க என் மகள் விரும்பியதால், 1.4.2007 முதல், என் மகன் ரங்கநாதன், பாபா மெட்ரிகுலேஷன் பள்ளியை ஏற்று நடத்தத் தொடங்கினான்.

என் மகள் விஜயலட்சுமி ரமணிசங்கரின், குடும்பத்தின் லட்சியக் கல்வி நிறுவனமான 'அக்ஷரா வித்யாஸ்ரம்', பெண்ணையாற்றின் கரையில் வளர்ந்து நிற்கிறது. அது, வள்ளலார் அவர்களின் பாதம் பட்ட இடம். வள்ளலார் அவர்கள், பள்ளியின் அருகில் இருக்கும் ஆற்றின் கரையில் நடந்துசென்று தியானம் செய்து வந்திருக்கிறார். அதை நிரூபிக்கும் விதத்தில் 'அக்ஷரா வித்யாஸ்ரம்' பகுதிக்குள் நுழையும்போதே, அற்புதமான ஆன்மிக அலைகள் உருவாகும். அதை நானும் அனுபவித்திருக்கிறேன்.

பல ஏக்கர் பரப்பளவில் அமைந்திருக்கும் அந்தப் பள்ளி, கட்டடக் கலைக்கும் ஓர் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. இங்கிலாந்தைச் சேர்ந்த கட்டடக் கலைஞர் டோனி பார்டரும், அவரது மனைவி இஸ்ரேலைச் சேர்ந்த இல்லோனோவும் இணைந்து அதை வடிவமைத்திருக்கிறார்கள். அங்கே ஆழ்ந்த அமைதி தரும் தியானமண்டபமும் இருக்கிறது. மனத்தை லேசாக்கிக்கொண்டு, மிகுந்த மகிழ்ச்சியோடு ஆசிரியர்கள் வகுப்பறைகளுக்குச் செல்ல வேண்டும் என்பது அவர்கள் கொள்கை. அதனால் தினமும் காலையில் எல்லா ஆசிரியர்களும் சில நிமிடங்கள் தியானம் செய்துவிட்டுத்தான் வகுப்புக்குள் செல்வார்கள். எல்லா மாணவர்களுக்கும் தியானம், யோகாசனம், நீச்சல் போன்றவற்றையும் கற்றுத்தருகிறார்கள்.

இன்று படிப்பில் மாணவ – மாணவிகளிடம் போட்டி அதிகம். அதனால் அவர்களுக்கு மன அழுத்தமும் அதிகம். ஆனால் அக்ஷரா வித்யாஸ்ரமில் மன அழுத்தமே இல்லாத அளவுக்கு மகிழ்ச்சியாக

கல்வியைப் போதிக்கிறார்கள். மதிப்பெண் அடிப்படையில் மாணவர்களிடையே பாகுபாட்டை அவர்கள் உருவாக்குவதில்லை. ஒவ்வொரு மாணவ – மாணவியிடமும் 'உயர்ந்த தரம்' என்ன இருக்கிறது என்று கண்டுபிடித்து அதை ஊக்குவிக்கிறார்கள். மாணவர்களின் தனித்திறமைகளைக் கண்டறிந்து மேம்படுத்து கிறார்கள். அதனால் ஒவ்வொரு மாணவரும் திறமைசாலிகளாக அங்கே பட்டை தீட்டப்படுவது நான் வியந்து பாராட்டும் விஷயமாகும். எந்த மதத்தையும் சாராமல் எல்லா மதப் பண்டிகைகளையும் அர்த்தம் புரியும்படி கொண்டாடி மாணவ – மாணவிகளிடையே வேற்றுமைகளை விரட்டியடித்து சிறப்பான தேசிய ஒருமைப்பாட்டை வளர்க்கிறார்கள்.

'25 மாணவர்களுக்கு ஓர் ஆசிரியர்' என்ற அடிப்படையில் வகுப்புகளை நிர்ணயித்திருப்பதால், ஒவ்வொரு மாணவரும் ஆசிரியர்களின் தனிப்பட்ட கண்காணிப்பின் கீழ் இருந்து கல்வி கற்கிறார்கள். 'இப்படி மகிழ்ச்சிப் பள்ளியை இவர்கள் நடத்துவதால், மாணவ – மாணவிகள் எதிர்பார்த்த அளவு மதிப்பெண் பெறுகிறார்களா?' என்ற கேள்வி எனக்குள் எழுந்ததால் அதுபற்றி பள்ளியின் 'சி.ஈ.ஓ.' வாக இருக்கும் என் பேத்தி பவித்ராவிடம் கேட்டேன். அவள், 'பாட்டி! மற்ற பள்ளிகளைப்போல் இங்கு படிப்பவர்களும் அதிக மதிப்பெண் பெறுகிறார்கள். அதோடு மன அழுத்தமின்றி மகிழ்ச்சியோடு படிக்கிறார்கள். கல்வியைச் சுமையாக்காமல் சுகமாக மாற்றிக்கொடுக்கிறோம். ஒவ்வொரு மாணவரிடமும் இருக்கும் தனித்திறமைகளைக் கண்டறிந்து, மேம்படுத்தி, அதில் சாதிக்க வைத்து பாராட்டுச் சான்றிதழ் வழங்குகிறோம்' என்று சொன்னாள். அவள் மனத்தில் கல்வி போதிப்பதில் சாதிக்க வேண்டும் என்ற லட்சியங்கள் நிறைய இருக்கின்றன. பவித்ரா என்னைச் சந்திக்கும் போதெல்லாம் கல்வி பற்றித்தான் பேசுகிறாள். கல்வி பற்றித்தான் ஆலோசனை கேட்கிறாள். அதை நினைத்து நான் மகிழ்கிறேன்.

என் மகள் விஜயலட்சுமி ரமணிசங்கர், என் வாழ்க்கையிலிருந்து கற்றதையும் பெற்றதையும் இங்கே குறிப்பிடுகிறாள், கேளுங்கள்:

'எனக்கு ஆங்கில இலக்கியக் கல்வியைப் போதித்தது கடலூர் கந்தசாமி நாயுடு கலைக்கல்லூரி. எனக்கு வாழ்க்கைக் கல்வியைப் போதித்தது ஹேமாலயம். அங்கு வாழ்ந்து காட்டி எங்கள் வாழ்க்கை முழுமைக்கும் தேவையான அனுபவக் கல்வியை போதித்தவர் என் தாயார்தான்.

எங்கள் தந்தை சின்னிகிருஷ்ணன் அவர்கள் அதிகம் பேசமாட்டார். ஆழ்ந்த சிந்தனைவாதி. அண்ணன் அசோக்குமார் மட்டும்தான் அப்பாவிடம் அதிகம் பேசுவார். நான் வீட்டிலே ரொம்ப அமைதியானவள். நானும் டாக்டருக்குப் படிக்க வேண்டும் என்று அப்பா ஆசைப்பட்டார். அம்மாவோ நான் கல்வியாளராக வேண்டும் என்று ஆசைப்பட்டார். அம்மா நினைத்தது ஆண்டவன் மூலம் நிறைவேறியது.

என் அம்மா மிகத் தைரியமானவர். கடலூர் பீச் ரோட்டில் எங்களுக்குச் சொந்தமான இடம் ஒன்று இருந்தது. அப்பா மரணம் அடைந்த பின்பு, ஒரு கட்சியைச் சேர்ந்த சிலர் இரவோடு இரவாக அதில் தங்கள் கட்சிக்கொடியை நட்டு சொந்தம் கொண்டாடினார்கள். விஷயம் மறுநாள் அதிகாலையில் அம்மாவின் காதுகளுக்கு வந்தது. 'போலீஸ் நிலையத்துக்குப் போகலாம், 'தெரிந்தவர்களை வைத்துப் பேசலாம்' 'ஆட்களை திரட்டி இரண்டில் ஒன்று பார்த்துவிடலாம்' என்றெல்லாம் ஆளுக்கொரு ஆலோசனையை வழங்கிக்கொண்டிருந்தார்கள்.

அம்மா எதையுமே காது கொடுத்துக் கேட்கவில்லை. அந்தக் கட்சியின் கடலூர் பிரமுகரை நேரடியாகச் சென்று சந்தித்தார். ஆதாரபூர்வமாக அவரிடம் பேசினார். அடுத்த சில மணி நேரத்தில், அங்கிருந்த கட்சிக்கொடிகளை நட்டவர்களே, அகற்றி எடுத்துச் சென்றுவிட்டார்கள். இப்படி நேரடியாக, தைரியமாக பிரச்னைகளை எதிர்கொள்ளும் ஆற்றல் அம்மாவிடம் இருந்தது. அதைப்பார்த்து நாங்களும் அந்த ஆற்றலை வளர்த்துக்கொண்டோம்.

ஐதராபாத்துக்கு வெளிநாட்டுக் கல்வி நிபுணர் ஒருவர் வந்திருந்தார். எங்கள் கல்வி நிலையம் தொடர்பாக அவரை நான் சந்தித்துப்

பேசவேண்டி இருந்தது. எனக்கு தனியாகச் செல்ல தயக்கமாக இருந்தது. தம்பி குமாரவேல் மனைவி வீணா என்னோடு வருவதாகச் சொன்னார். ஆனாலும் எனது தயக்கம் நீங்கவில்லை என்பதைப் புரிந்துகொண்ட அம்மா, 'நானும் வருகிறேன்! கிளம்புங்கள்' என்றார்.

மூவரும் கிளம்பி ஐதராபாத்துக்குப் போனோம். அந்த வெளிநாட்டுக் கல்வி நிபுணரைச் சந்திக்க பலர் அப்பாயின்ட்மென்டோடு காத்திருக்க, நாங்கள் திடீர் சந்திப்புக்காகப் போய் நின்றோம். அம்மா அங்கிருந்தவர்களைச் சமாளித்து, அப்பாயின்ட்மென்ட் இல்லாமலே நாங்கள் சந்திக்கும்படி செய்துவிட்டார். என்ன பிரச்னைக்காகச் சென்றோமோ அதை வெற்றிகரமாக முடித்துவிட்டுப் புறப்பட்டோம். அம்மாவின் இந்த அதிரடி தன்னம்பிக்கையை நினைத்து இப்போதும் நான் வியப்பதுண்டு.

அம்மாவுக்கு மிகவும் பிடித்த விஷயம் ஏழைகளுக்கு உதவுவது. அடுத்தவர்களுக்கு உதவும்போது, அம்மா எங்களுக்குக்கூட தெரியாமல்தான் செய்வார். அம்மா செய்யும் உதவிக்கு நேரங்காலம்கூட கிடையாது. நள்ளிரவு 12 மணி 1 மணிக்குகூட சிலர் வந்து அம்மாவிடம் உதவி பெற்றுச் செல்வார்கள்.

என்னை இப்போது பலர் கல்வியாளர் என்று குறிப்பிடுகிறார்கள். அதற்குக் காரணம் அம்மாதான். அம்மா, மக்கு என்று கூறப்பட்ட மாணவர்களுக்கு எப்படி கல்வி கற்றுக்கொடுத்தார் என்பதைப் பார்த்து, அந்த 'டெக்னிக்கை' நானும் கற்றுக்கொண்டு நடைமுறைப்படுத்து கிறேன்.

மக்கு என்று கூறப்படும் மாணவர் அம்மா முன்னால் கொண்டு நிறுத்தப்படுவார். அந்த மாணவனிடம் அம்மா தனியாகப் பேசுவார். ஒரு மணி நேரத்துக்கு மேல் கூட அந்தப்பேச்சு நீடித்துக்கொண்டே போகும்.

முதலில் அவன் மனத்தைச் சரி செய்து, தன்னம்பிக்கையூட்டுவார். 'உன்னாலும் நன்றாகப் படிக்க முடியும். நிறைய மதிப்பெண்

பெறமுடியும்' என்று அவனுக்குள் நம்பிக்கையை விதைப்பார். அதன்பிறகு அந்த மாணவனுக்கென்று தனி 'டைம் டேபிள்' ஒன்றை உருவாக்குவார். அந்தந்தப் பாடத்தை அவனுக்குப் புரியவைக்க தனித்தனி ஆசிரியர்களைத் தேடிப்பிடித்து, அம்மாவின் கண்காணிப்பிலே பாடம் நடத்தச் செய்வார். புரியாத பாடங்களும் அவனுக்குப் புரிய வைக்கப்படும். அப்போது 'நீ படித்துத் தான் ஆக வேண்டும்' என்று அவனோடு சேர்ந்து அம்மாவும் உட்கார்ந்துவிடுவார். இரவு 12 மணி 1 மணிவரைகூட அந்தப் படிப்பு நீளும். 'நமக்காக பள்ளிக்கூடம் நடத்துபவரே விழித்திருக்கிறாரே. நம் மீது எவ்வளவு அக்கறை இருந்தால் இப்படி எல்லாம் தூக்கத்தைத் தொலைத்துவிட்டு நமக்காக நம்மோடு இருப்பார்' என்று அவன் சிந்தித்து, அம்மாவை நன்றிப் பார்வை பார்ப்பான்.

அம்மா அப்போது 'எனக்கு நீ உள்ளபடியே நன்றி செலுத்துவதாக இருந்தால் அதை படிப்பில் காட்டு. அதிக மதிப்பெண் பெற்றுக்காட்டு' என்பார். அதன்பிறகு அந்த மாணவன் விழுந்து விழுந்து படிக்கத் தொடங்கிவிடுவான்.

இதை நான் சில வரிகளில் சொல்லி முடித்துவிட்டேன். ஆனால் அம்மா 'யாரோ ஒரு பெண் பெற்ற பிள்ளை நமக்கென்ன' என்று நினைக்காமல் தன் பிள்ளைபோல அந்த மாணவனை நினைத்து அவனுக்காக எத்தனையோ முயற்சிகளை எடுத்து பல நாள்கள் தூக்கத்தைத் தொலைத்து பாடங்களை நடத்தி படிப்படியாக அவனை முன்னேற்றுவார். மக்கு எனப்படும் ஒரு மாணவனை சிறந்த மாணவன் ஆக்குவதற்கு அம்மா எவ்வளவு சிரமங்களை அனுபவித்தார் என்பது அருகில் இருந்து பார்த்த எங்களுக்குத்தான் தெரியும். அந்த மாணவனின் அப்பா, அம்மாவுக்குக்கூட தெரியாது.

படிக்காத ஒரு மாணவனைப் படிக்க வைப்பதற்கு அம்மா மூன்று மாதங்கள் எடுத்துக்கொள்வார். அந்தக் காலகட்டத்துக்குள் அவனை எப்படியாவது படிக்க வைத்துவிடுவார். அவன் நன்றாகப் படிக்கத் தொடங்கிய பின்பு அவனுக்கு பிரியாணி பொட்டலம்

வாங்கிக்கொடுப்பார். சினிமாவுக்கு அழைத்துச் செல்வார். பாராட்டுவார். அம்மாவோடு சேர்ந்து அந்த மாணவனைப் படிக்கவைக்க உதவிய ஆசிரியர்களுக்கும் பாராட்டும், உபசரிப்பும் கிடைக்கும்.

மற்ற மாணவர்களைப்போல் நாங்களும் நன்றாகப் படிக்க வேண்டிய கட்டாயத்தில் இருந்தோம். நன்றாகப் படிக்காவிட்டால் எங்களுக்கு அடியும் கிடைக்கும். தினமும் நாங்கள் பள்ளிக்குப் புறப்பட்டு காலணியின் உள்ளே காலை நுழைக்கும் நேரத்தில் அம்மா எங்கே இருந்தாலும் எங்களை நோக்கி அவர் குரல் வரும். 'டீச்சர் சொல்வதை கவனித்துப்படி' என்பார். இதுதான் எங்களுக்கு தினசரி உபதேசம். அதனால் நாங்கள் பள்ளிக்கூடத்துக்கும், ஆசிரியர்களுக்கும், கல்விக்கும் மதிப்பு கொடுத்தோம். அதனால்தான் அந்தக் கல்வி இப்போது எங்களுக்குக் கைகொடுத்து, பள்ளிக்கூடம் நடத்தும் அளவுக்கு எங்களை கல்வியாளர்களாக உருவாக்கியிருக்கிறது.

சிறுவயதில் நாங்கள் ஆடிப்பாடி, மகிழ்ந்து வளர்ந்தோம். எங்கள் வீட்டைச்சுற்றி நின்றிருந்த மரங்கள், எங்களுக்கு பிருந்தாவனம்போல் இருந்தது. சாப்பிடுவதற்கு விதவிதமான உணவுப்பொருள்கள் எங்கள் விளைநிலங்களிலிருந்தே கிடைத்தன. என் அண்ணன்கள், தம்பி எல்லாரும் மரம் ஏறி விளையாடுவார்கள். எங்கள் தோப்பிலே சிறிய குளம் இருந்தது. அசோக்குமார் அண்ணனைத் தவிர மற்ற அனைவரும் அந்தக் குளத்தில் குளித்து மீன் பிடித்துக்கொண்டு வருவார்கள்.

எங்கள் அம்மாவுக்கு அழகுணர்ச்சி அதிகம் உண்டு. நான் சிறுமியாக இருந்தபோது, அம்மா நல்ல 'மூடில்' இருந்தால், அவரது அழகு பற்றி பேசத் தொடங்கிவிடுவார். 'நான் ரொம்ப அழகு. என்னைத் திருமணம் செய்துகொள்ள 'கியூ'வில் வந்து நின்றார்கள். என் அம்மா என்னை சமையலறைப் பக்கமே நுழைய விட்டதில்லை. சமைக்கும்போது புகைபட்டு நான் கறுத்துப் போய்விடுவேன் என்று அம்மா பயந்தார்கள்' என்று சிலாகித்து அம்மா கூறுவார். அம்மா

உண்மையிலே அப்போது ரொம்ப அழகாக இருந்ததால் (இப்போதும் அம்மா எங்களுக்கு அழகுதான்) நான் இமை மூடாமல் அம்மாவின் அழகைப் பார்த்தபடியே அவர் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருப்பேன்.

மிகவும் மகிழ்ச்சியான மனநிலையில் அம்மா இருக்கும்போது அப்பா அருகில் போய் நின்றுகொண்டு என்னை அவர் அருகில் அழைப்பார். 'இதோ பார் உன் அப்பா எள்ளு. நான் பச்சரிசி. நாங்கள் இருவரும் சேர்ந்து போகும்போது நீயே பார். எள்ளும், பச்சரிசியும் கலந்து போனதுபோல் இருக்கும்' என்பார். அம்மா அப்படி சிரித்துக்கொண்டே சொல்வதை அப்பாவும் சேர்ந்து ரசிப்பார்.

இந்த உலகில் எல்லாருக்குமே முதல் பள்ளிக்கூடம் வீடுதான். முதல் ஆசிரியர் அம்மாதான். முதல் ஆசிரியரிடமிருந்து முழுமையான கல்வியைக் கற்றவர்கள் வாழ்க்கையில் முழுமை அடைவார்கள். அந்த விஷயத்தில் நாங்கள் கொடுத்து வைத்தவர்கள். எங்கள் 'வீட்டு பள்ளிக்கூடத்திலே' 'எங்கள் வீட்டு ஆசிரியரான' எங்கள் அம்மா எங்களுக்கு வாழ்க்கைப் பாடங்களை முழுமையாகக் கற்றுத்தந்துவிட்டதால் நாங்கள் ஆத்ம திருப்தியோடு, மனநிறைவாக வாழவேண்டிய முறையில் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். முதல் ஆசிரியராக இருந்து எனக்கு வாழ்க்கையைக் கற்றுத்தந்த அம்மாவை நான் இன்றும் நன்றியோடு நினைத்துக் கொண்டுதான், எங்கள் அக்ஷரா வித்யாஸ்ரமத்துக்குள் அடியெடுத்து வைக்கிறேன். எனக்கு மாதா, பிதா, குரு எல்லாமே என் அம்மாதான்.' என்கிறார் விஜயலட்சுமி ரமணிசங்கர், இயல்பான நெகிழ்ச்சியுடன்.

# 19



## 'தெரியாது' என்ற வார்த்தை அம்மாவுக்கு தெரியாது



மகன், 'நேச்சுரல்ஸ்' சி.கே.குமாரவேல்

**எ**ன் கடைக்குட்டி மகன் சி.கே.குமாரவேல் எந்த இடத்தில் இருந்தாலும் அந்த இடத்தைக் கலகலப்பாக்கிவிடுவான். சிரித்துக்கொண்டே இருப்பது அவனது கூடப்பிறந்த விஷயம். சின்ன வயதிலிருந்தே அவன் அப்படித்தான். அவனது மூத்த சகோதரர்கள்போல் அவனும் சிறந்த தொழிலதிபராக இன்று வளர்ந்திருந்தாலும், தொடக்கத்தில் அவன் தொழில்களோடு போராடினான். தடுமாறினான். தவித்தான். தோல்விகளிலிருந்து பாடம்கற்று, படிப்படியாக முன்னேறினான். இப்போது புதிதாகத் தொழில் தொடங்குகிறவர்களுக்கு பாடம் கற்றுக்கொடுக்கும் அளவுக்கு பக்குவமடைந்துவிட்டான். சென்னை ஐ.ஐ.டி.யில் உள்ள மாணவர்களுக்கு தொழில் பற்றியும் தொழில் நிர்வாகம் மற்றும் தொழிலில் புதிய சிந்தனை பற்றியுடம் பாடம் நடத்துகிறான்.

மகன் குமாரவேலுவும், மருமகள் வீணாவும் இணைந்து போராடி வென்று வெற்றிக்கொடி நாட்டிய 'நேச்சுரல்ஸ்' நிறுவனம், இப்போது இந்தியாவிலேயே அதிகமான கிளைகளைக் கொண்ட இந்தியாவின் 'நம்பர் ஒன்' அழகுக்கலை நிறுவனமாக பெயர் பெற்றிருக்கிறது. அதை நினைத்து பெருமைப்படுகிறேன்.

நான் 50 வருடங்களுக்கு முன்னால், 'கலாமந்திர்' என்ற அமைப்பு மூலம் கைவினைப் பயிற்சியை பெண்களுக்கு கொடுத்து பெண்களை தொழிலதிபர்களாக மாற்ற முயற்சித்தேன். அதில் நான் ஓரளவே வெற்றிபெற்றேன். என் மகன் அது போன்ற திட்டத்தை முன்னெடுத்துச் சென்று நேச்சுரல்ஸ் அழகுக்கலை நிறுவனம் மூலம் ஏராளமான பெண் தொழிலதிபர்களை உருவாக்கிக்கொண்டிருக்கிறான். 2018-ம் ஆண்டில் 3 ஆயிரம் பார்லர்கள் என்ற அவன் இலக்கு வெற்றியாகட்டும். 'Groom India' என்ற அவனது நிறுவனம் சிகரத்தை தொடட்டும்.

என்னைப் பற்றி அவனது எண்ணங்கள் என்னவாக இருக்கும் என்று பார்ப்போமா?

'என் தந்தை சற்று கறுப்பாக இருப்பார். அவரது அம்மாவுக்கு (எனது பாட்டி மனோரஞ்சிதத்துக்கு) அந்தக் கறுப்புநிறம் சற்று கவலையைக் கொடுத்திருக்கும் என நினைக்கிறேன். அதனால் அடுத்த தலைமுறை நல்ல நிறமாக உருவாக வேண்டும் என்று எங்கள் பாட்டி விரும்பி, சிவப்பு நிறமாக இருந்த அம்மாவை, அப்பாவுக்காக பாட்டி தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். (சும்மா இருக்கும்போது நான் 'ஆராய்ச்சி' செய்து கண்டுபிடித்த விஷயம் இது).

அப்பா நிறையப் படித்தவர். அம்மாவும் அனுபவசாலி. அப்படி இருக்கும்போது, என்னையும் சேர்த்து எப்படி அரை டஜன் குழந்தைகளைப் பெற்றார்கள். அதற்கு என்ன காரணம் என்று நான் நினைத்துப் பார்த்ததுண்டு. அங்கேயும் என் பாட்டி மனோரஞ்சிதத்தின் சிந்தனைதான் வேலை செய்திருக்கிறது. 'தனக்கு ஒரே ஒரு குழந்தைதான் பிறந்தது. கூடுதலாக குழந்தைகள் இல்லையே' என்ற

ஏக்கம் அவர்களுக்கு இருந்திருக்கிறது. அதனால் அதிகக் குழந்தைகளை மகன் பெற வேண்டும் என்று விரும்பியிருக்கிறார்கள். எனவே நாங்கள் பெ..ரி..ய.. குடும்பமாக இருப்பதற்கு எங்கள் பாட்டியும் ஒரு காரணம் என்று சொல்லலாம் அல்லவா?

நான் சிறுவயதிலே அடிக்கடி சிந்தித்துப்பார்த்து, சிறிது காலத்துக்குப் பின்புதான் என் அறிவுக்கு எட்டிய இன்னொரு விஷயத்தையும் நான் சொல்ல விரும்புகிறேன். எங்கள் ஆறு பேரில் பாட்டி நினைத்ததுபோல் முதல் மூவரும் தனி நிறம். கொழுகொழு குழந்தைகள் ரகம். அவர்கள் நடை, உடை, பாவனை எல்லாம் வித்தியாசமாக இருக்கும். அவ்வளவு ஏன்? அவர்கள் விளையாடும் விளையாட்டுகளில்கூட ஒரு 'ரிச்னெஸ்' தெரியும். நான் சொல்வது அண்ணன்கள் ராஜ்குமார், அசோக்குமார், அக்காள் ஆண்டாள் ஆகியோரைப்பற்றி!

அவர்களிடம் 'ரிச்' தெரிய என்ன காரணம் என்றால் எங்கள் பெற்றோர் வசதியாக இருந்த காலகட்டத்தில் பிறந்தவர்கள் அவர்கள். வசதியை அனுபவித்து வளர்ந்தவர்கள். அதனால் அவர்களது நடை, உடை, பாவனை எல்லாமே எங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டு, மேம்பட்டதாக இருந்தது. இதில் இன்னோர் உண்மையையும் சொல்கிறேன், கேளுங்கள். என் மூத்த அண்ணன் ராஜ்குமாருக்கு 15-வயது ஆன பின்புதான், அப்படி ஓர் அண்ணன் இருக்கிறார் என்பதே எனக்கு முழுமையாகப் புரியத் தொடங்கியது. அதுவரை அவரும் ஓர் உறவு என்ற அளவுக்குத்தான் என்னால் உணர்ந்துகொள்ள முடிந்தது.

அந்த அமுல் பேபிகளுக்கு நேர் மாறாக எங்கள் மூவரின் தோற்றமும், நடை, உடை, பாவனைகளும் இருந்தன. நிறத்திலும் நாங்கள் மூவரும் அப்பா ரகம். அண்ணன் ரங்கநாதன், அக்காள் விஜயலட்சுமி, நான் ஆகிய மூவரும் ஆறு பேரில் தனியாகத் தனித்து தோன்றுவோம். எங்கள் விளையாட்டு, சிறுவயது பழக்கவழக்கம், எங்களைச் சுற்றி இருந்த விளையாட்டுத் தோழர்கள் எல்லாருமே எங்கள் மூவரையும் போன்றவர்களாகத்தான் இருந்தார்கள். நாங்கள் வத்தல், தொத்தல்

மாதிரி வளர்வதற்குக் காரணம், நாங்கள் பிறந்து வளர்ந்த காலகட்டத்தில் எங்கள் பெற்றோர் பொருளாதார ரீதியாக கஷ்டப்படத் தொடங்கிவிட்டார்கள்.

ஆறுபேரில் மூன்று – மூன்றாக நாங்கள் தோற்ற ரீதியாகவும் – நடைமுறை ரீதியாகவும் குறிப்பிட்ட வயதுவரை வித்தியாசப்பட்டு நின்றிருந்தாலும், எங்களுக்குள் மனரீதியாக எந்த வித்தியாசமும் தோன்றாத அளவுக்கு அன்பால் இணைத்திருந்தார் அம்மா. அவரது அன்புச் சங்கிலிக்குள் எங்கள் ஆறு பேரையும் கோர்த்து எந்த பேதமும் இல்லாத அளவுக்கு பார்த்துக்கொண்டார்.

அப்பா ஆராய்ச்சிகளிலும், புதிய கண்டுபிடிப்புகளிலும் ஈடுபட்டு கடன்காரர் ஆகிக்கொண்டிருந்தபோது அருகில் இருந்தே என் அம்மா, அப்பாவின் ஒவ்வொரு செயலையும் பார்த்து வந்தார். அப்பாவுக்கு எங்கே தோல்வி ஏற்படுகிறது? எப்படி குடும்பத்தில் சிக்கல்கள் தோன்றுகின்றன? என்றெல்லாம் அப்பாவைப் பார்த்துப் பார்த்து அம்மா வாழ்க்கையைப் படித்துக்கொண்டே இருந்திருக்கிறார். அப்பா எடுத்த தவறான முடிவுகளிலும் அம்மா பாடம் கற்றிருக்கிறார். அப்பா மரணமடைந்த காலகட்டத்தில் அம்மா வாழ்க்கையை முழுமையாக கற்றவராகத் தேறிவிட்டார்.

எங்கள் அம்மாவின் வாழ்க்கை தத்துவம் இரண்டே வரிகளைக்கொண்டது. மிக எளிமையானது. அதைச் சொன்னால் நீங்களே ஆச்சரியப்படுவீர்கள்.

‘மாட்டை மேய்த்தோமா, கோலைப் போட்டோமா’

என்பதுதான் அந்த வாழ்க்கைத் தத்துவ வரிகள்.

இதில் இருக்கும் விஷயங்கள் புரிகிறதா உங்களுக்கு? சற்றே சிந்தித்துப் பாருங்கள்.

மாடு மேய்ப்பது ஒரு வேலை என்றால், அந்த மாட்டை கட்டுப்படுத்தி மேய்ப்பதற்கு ஒரு கோல் வேண்டும். அந்த மாட்டை மேய்க்கும்

வரைதான் அந்தக் கோல் கையில் இருக்க வேண்டும். மாடும் கோலைப் பார்த்துக்கொண்டே ஒழுங்காக மேயும். மேய்ந்து முடிந்த பின்பு மாட்டை ஓட்டிவிட்டு, கோலை கீழே போட்டுவிட வேண்டும். மீண்டும் அதை கையில் வைத்துக்கொண்டு மாட்டை மிரட்டலாம் என்று நினைத்தால், அது நம்மை மிரட்டும் அளவுக்கு டென்ஷன் ஆகவேண்டியது இருக்கும்.

அம்மா யாரிடமாவது ஒரு வேலையைக் கொடுப்பார்கள். அந்த வேலையை எப்படி செய்ய வேண்டும் என்று சொல்லிக் கொடுத்துவிட்டு அதோடு விட்டுவிடுவார்கள். தார்க்குச்சியை கையில் வைத்து குத்திக்கொண்டே இருப்பதுபோல், அதில் அடிக்கடி தலையிடமாட்டார்கள். கோலைக் கையில் வைத்துக்கொண்டு மிரட்டும் நபராக ஒருபோதும் அவர் இருந்ததில்லை.

பொதுவாக, பெண்கள் தங்கள் வாழ்க்கையில் நடக்கும் சாதாரண விஷயங்களைக்கூட 'சீரியஸ்' ஆக்கிவிடுவார்கள். ஆனால் அம்மா சீரியசான விஷயங்களைக்கூட எளிதாக யதார்த்தமாக அணுகுவார். அவரது வாழ்க்கையில் விதவிதமான பிரச்னைகள் தோன்றின. அதற்கெல்லாம் புதுப்புதுவிதமாக அம்மா தீர்வுகளைத் தேடினார்.

வாழ்க்கை வெற்றிக்கு அம்மா மூன்று விதமான கொள்கைகளைக் கடைப்பிடித்தார். ஒன்று, கடவுள் மீது இருந்த அபார நம்பிக்கை. அந்தத் தீவிர நம்பிக்கையை சாய் பாபா அவர்கள் மீது செலுத்தினார். அவர் மீது பாரத்தைப் போட்டுவிட்டு 'அவர் பார்த்துப்பார்' என்றபடி, இரண்டாவது கொள்கையான திட்டமிடுதலில் இறங்கிவிடுவார். மூன்று, எக்காரணத்தைக்கொண்டும் பின்வாங்காமல் அந்தத் திட்டத்தை நிறைவேற்ற கடுமையாக உழைப்பார். கடவுள் நம்பிக்கை, உடனடி செயல் திட்டம், கடுமையான உழைப்பு ஆகிய மூன்றும்தான் அம்மாவின் வெற்றி மந்திரங்கள்.

கடவுள் மீது பாரத்தைப் போடும்போதே அந்த முயற்சி வெற்றி பெற்றுவிடும் என்ற 90 சதவீத நம்பிக்கை அம்மாவுக்கு வந்துவிடும். உடனடியாக செயலிலும் இறங்கிவிடுவார்.

புதிய செயல் ஒன்றில் இறங்கும்போது பலருக்கும் அதில் இருக்கும் 'நெகடிவ்'வான விஷயங்கள்தான் நினைவுக்கு வரும். அம்மா அப்படி அல்ல. 'பாசிட்டிவ்'வான விஷயங்களை மட்டும் எடுத்துக்கொண்டு களத்தில் இறங்குவார். 'நீ கார் ஓட்ட விரும்பினால், நாம் செல்லும்போது எல்லா சிக்னலும் பச்சையாகத்தான் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கக் கூடாது. காரில் ஏறி அமர்ந்துவிட வேண்டும். எந்த சிக்னல் இருக்கிறதோ அதற்குத் தக்கபடி ஓட்டிக்கொண்டு செல்ல வேண்டும். அந்தத் தகுதியை நாம் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்' என்று சொல்வார்.

'கப்பல் கவிழ்ந்தால்கூட கன்னத்தில் கைவைக்கக் கூடாது. கன்னத்தில் கையை வைத்தால், தோற்றதாக நினைத்து நீயே மூழ்கிவிடுவாய்' என்பார்.

பொதுவாக தொழிலில் ஒரு தோல்வியோ, பிரச்னையோ ஏற்பட்டால் தோற்றவர்கள் உடனே அதற்கு என்ன காரணம் என்று பெரிய அளவில் விசாரணை நடத்தத் தொடங்கிவிடுவார்கள். யார், யாரெல்லாம் அந்தத் தோல்விக்குக் காரணம்? எங்கே, எப்படி அந்தத் திட்டம் தோல்வியடைந்தது என்று கண்டுபிடித்து, காரணமானவர் களைக் குறை கூறிக்கொண்டிருப்பார்கள். அம்மாவின் 'பாலிசி' அதற்கு நேர்மாறாக இருக்கும். 'சரி...நடந்தது நடந்துபோச்சு... அடுத்து என்ன செய்யணும்?'–என்றுதான் முதலில் கேட்பார். நாங்கள் எல்லாரும் எங்கள் கருத்துகளைச் சொல்வோம். எங்களை ஆத்திரப்படுத்தும் விதத்தில் சில குறுக்குக் கேள்விகளைக் கேட்பார். கேட்டுவிட்டு, இரவில் தூங்கச் சென்றுவிடுவார். காலையில் பளிச்சென்று ஒரு புதிய முடிவோடு வந்து நிற்பார். அந்த முடிவை எங்களிடம் விளக்கிவிட்டு, உடனடியாக அதனை நடைமுறைப்படுத்தச் சொல்வார். அந்த முடிவு அனேகமாக நாங்கள் யோசிக்காத முடிவாக இருக்கும். அதுதான் அம்மாவின் ஸ்பெஷாலிட்டி!

எனக்கு தொழிலில் சில சிக்கல்கள் ஏற்பட்டதால், கலங்கிய மனத்தோடு அம்மா முன்னால் போய் நின்றேன். 'உனக்கு கடன்

இருக்கிறதா? எல்லாத்தையும் எழுதி வைச்சுக்கோ. நிச்சயம் ஒருநாள் நீ சம்பாதிப்பே. அப்போ எல்லாருக்கும், வாங்கினதைத் திருப்பிக் கொடுத்துடு. திருப்பிக்கொடுக்காவிட்டால் அந்தப் பாவம் உன் குழந்தைகளைப் போய்ச் சேரும்' என்பார். மகனே கடன்பட்டிருந்தாலும் மகனுக்காகப் பேசமாட்டார். நியாயம், தர்மத்தைத்தான் அம்மா பேசுவார். அதுதான் எங்கள் அம்மாவின் சிறப்பு.

சிலரிடம் நாம் பேசிக்கொண்டிருந்தால், தனக்குத் தெரியாத விஷயங்களை எல்லாம் அடுக்குவார்கள். 'தனக்கு அது தெரியாது. இது தெரியாது' என்று சொல்லிக்கொண்டிருப்பார்கள். அம்மா வாயிலிருந்து 'தெரியாது' என்ற வார்த்தையே வராது. எதைச் செய்ய வேண்டும் என்றாலும் பாபா மீது பாரத்தைப் போட்டுவிட்டு துணிச்சலாக அதைச் செய்யத் தொடங்கிவிடுவார்.

அப்பாவின் மரணத்துக்குப் பிறகு அம்மாவின் 'ரோல்' கூடியது. அப்பாவாகவும் அவர் இருந்து எங்களை வழி நடத்திச்செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்போதுதான் நாங்கள் அம்மாவுக்குள் இருந்து புறப்பட்ட அப்பாவையும் பார்த்தோம். இரண்டு 'ரோல்'களையும் ஒருவரே சிறப்பாகச் செய்தார்.

அம்மா எப்போதும் தனது கஷ்டங்களைத் தாங்கிக்கொள்வார். அதே நேரத்தில் தன்னால் யாருக்கும் கஷ்டம் வந்துவிடக் கூடாது என்பதில் குறியாக இருப்பார். அதனால் அம்மாவால் கஷ்டத்தை அனுபவித்தவர்கள் என்று சொல்ல இன்று ஒருவர்கூட இல்லை.

இன்று உலகில் எவ்வளவோ நடுத்தர, ஏழைத் தாய்மார்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் குழந்தைகளை சந்தோஷமாக வளர்க்க அம்மா கண்டுபிடித்த வழிமுறை ஒன்றைச் சொல்கிறேன். நிறையப் பணம் இருந்தால்தான் பெரும் சந்தோஷத்தை அனுபவிக்க முடியும் என்பது பொதுவான கருத்து. ஆனால் பெருமளவு பணத்தால் அனுபவிக்க முடியாத சந்தோஷத்தைவிட பலமடங்கு சந்தோஷத்தை சின்னசின்ன விஷயங்கள் மூலம் அனுபவிக்கமுடியும் என்பதை நாங்கள் கஷ்டப்பட்ட காலத்தில் அம்மா நிகழ்த்திக்காட்டினார்.

எங்களுக்கு விதவிதமாக வாங்கித்தர அம்மாவிடம் பணம் இருக்காது. ஆனால் எங்களோடு விளையாடுதல், பீச்க்கு அழைத்துச் செல்லுதல், எங்களுக்கு உணவூட்டுதல், எங்களைச் சிரிப்பூட்டுதல் போன்ற சின்னசின்ன விஷயங்களில் கவனம் செலுத்தி, எங்களுக்கு நிறைய சந்தோஷத்தை அம்மா அள்ளி வழங்கினார். 10 ஆயிரம் கோடி பணம் இருந்தால்தான் மகிழ்ச்சி அல்ல! பாசத்தால் அதைவிட பெரும் மகிழ்ச்சியை அனுபவிக்கலாம் என்பதை நடைமுறைப்படுத்திக் காட்டினார் அம்மா. அதனால் பணம் இல்லாத காலத்தில்கூட எங்களுக்கு மகிழ்ச்சியில் எந்தக் குறைபாடும் தோன்றவில்லை.

அம்மா எளிதாக, அதிக மகிழ்ச்சியை அனுபவிக்கும் வழியை எங்களிடம் நடைமுறைப்படுத்தியதால் எங்களுக்கு 'விமானத்தில் பறக்க வேண்டும், காரில் செல்ல வேண்டும், விதவிதமான உடைகள் அணிய வேண்டும்' என்ற ஆசை எல்லாம் இருந்ததில்லை. 'மகிழ்ச்சி என்பது விமானம், கார், உடை, பயணத்தில் இல்லை; தாயின் மனத்தில் இருக்கிறது' என்பதை அம்மா எங்களுக்கு அனுபவத்தில் காட்டி, மகிழ்வித்தார். அதனால் எங்கள் உறவினர் வீட்டிலிருந்து வாங்கிய பழைய துணியை 'அயர்ன்' செய்து அணிந்துகொண்டு, மற்றவர்களைவிட அதிக மகிழ்ச்சியுடன் நாங்கள் தீபாவளியைக் கொண்டாடினோம். மகிழ்ச்சி என்பது புதிய துணியில் இல்லை என்பதை அப்போது நாங்கள் உணர்ந்தோம்.

எனக்கு பத்து வயதாக இருந்தபோது எங்கள் குடும்பத்தில் ஒருமுறை கஷ்டம் தலைவிரித்தாடியது. அப்போது அம்மாவிடம் குறிப்பிடும்படியாக இரண்டு வைரக்கம்மல் மட்டுமே இருந்தன. அவற்றைக் காதில் அணிந்திருந்தார். என்ன நினைத்தாரோ? திடீரென்று திருப்பதி கோயிலுக்குப் புறப்பட்டுப்போனார். திரும்பி வரும்போது அம்மா மொட்டை போட்டிருந்தார். காதில் கிடந்த வைரக் கம்மல்களையும் காணவில்லை. எங்கள் பாட்டி மனோரஞ்சிதம் 'கம்மல்களை காணவில்லையே' என்றார். அம்மா ரொம்ப ஈஸியாக 'அதை திருப்பதி உண்டியலில் போட்டுட்டேன். அதோடு சேர்ந்து நம்ம கஷ்டமும் போயிடுச்சு' என்றார். கஷ்டம் உடனே போய்விடவில்லை. ஆனால்

கஷ்டம் போய்விடும் என்ற நம்பிக்கையை அதன்மூலம் உருவாக்கிவிட்டு அம்மா வந்தார். கஷ்டம் போய்விடும் என்று உழைத்தார். கஷ்டம் போய்விட்டது.

அதுபோன்ற ஆன்மிக நம்பிக்கையை எங்கள் வாழ்க்கையிலும் ஒருமுறை அம்மா நிகழ்த்திக்காட்டினார். தொழில் ரீதியாக நாங்கள் அதிக பிரச்னையை சந்தித்துக் கொண்டிருந்த நேரத்தில் என்னையும், என் மனைவி வீணாவையும் அழைத்துக் கொண்டு தூரத்தில் உள்ள சில கோயில்களுக்குச் சென்றார். எங்களை உட்கார வைத்து விசேஷ பூஜைகள் செய்தார். எங்கள் மனதில் பாரம் குறைந்து லேசானது. புதிய நம்பிக்கை ஏற்பட்டது. புத்துணர்ச்சியுடன் சிந்திக்கும் ஆற்றல் கிடைத்தது. புதிய திட்டங்களை வகுத்து முன்னேறத் தொடங்கினோம். எங்களிடம் இருந்த மனத்தடைகளை அம்மா ஆன்மிகத்தின் மூலம் போக்கினார்.

பலருக்கும் ஒரு பழக்கம் உண்டு. புதிய தொழில் ஒன்றைத் தொடங்கும் திட்டம் இருந்தால் அதுபற்றி பலபேரிடம் ஆலோசனை கேட்பார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாகச் சொல்லும் ஆலோசனைகளை வைத்துக்கொண்டு குழம்புவார்கள். பின்பு புலம்புவார்கள். இறுதியில் அந்தத் தொழிலைத் தொடங்காமலே விட்டுவிடுவார்கள். எங்கள் அம்மா அப்படி அல்ல. அவரே பல கோணங்களில் யோசித்து இறுதி முடிவு எடுத்துவிடுவார். நாங்களும் அதுபோலத்தான். நாங்களே யோசித்து நாங்களே முடிவெடுத்து தொழிலில் இறங்கிவிடுவோம்.

அம்மாவுக்கு இப்போது 80 வயது. நான் பிறந்து 48 வருடங்களாக அம்மாவிடம் பாடம் படித்துக்கொண்டிருக்கிறேன். எந்த நேரத்தில் எந்த முடிவு எடுக்க வேண்டும் எப்படி செயல்பட வேண்டும் என்று அம்மா எங்களுக்காக வாழ்ந்து காட்டிக் கொண்டிருக்கிறார். அந்த பாடத்தை அவரிடம் இருந்து நாங்கள் கற்று, வாழ்ந்து, வளர்ந்து கொண்டிருக்கிறோம்', என்று நிறைவு செய்கிறான் என் மகன், நேச்சுரல்ஸ் சி.கே.குமாரவேல்.

# 20



## ஏழைகள் திருமணம் செய்ய ஏணிப்படி ஆனேன்

மரங்களைப் பார்த்து நான் வியப்பேன். அவற்றோடு எனக்கு அதிக தோழமை உணர்வு உண்டு. நான் பிறந்து வளர்ந்த, வாழ்க்கைப்பட்ட (இப்போது வாழ்ந்துகொண்டிருக்கும்) எல்லா இடங்களிலும் என்னைச்சுற்றி நிறைய மரங்கள் இருக்கும்படி பார்த்துக்கொள்வேன்.

எங்கள் வீட்டில் உள்ள 60 வருட வேப்ப மரத்தை குலதெய்வமாக நானும் எங்கள் குடும்பத்தாரும் வழிபடுகிறோம்.

மரம் என்பது உயிரின் உயிர். அதற்கு மரம் என்று ஒரே ஒரு பெயர்தான். அது மக்களுக்கு எத்தனை விதங்களில் உதவுகிறது தெரியுமா?

நிழல் தேவைப்படுகிறவர்களுக்கு நிழல் கொடுக்கும். இலைகளையும், பூவையும், காயையும், கனியையும் தேவையானவர்களுக்கெல்லாம் கொடுக்கும்.

கதவையும், கட்டிலையும், தொட்டிலையும் மக்களின் பயன் பாட்டுக்காகக் வழங்கிக்கொண்டே இருக்கும்.

அதுபோல் நானும் மரம்போல், யார் யாருக்கு என்னென்ன உதவி தேவையோ அதை வழங்க வேண்டும் என்று ஆசைப்படுவேன். அதனால்தான் எனக்கு மரம் பிடிக்கும்!

திருமண வயதில் இருக்கும் ஆண்களும் - பெண்களும் எனக்குத் தெரிந்தவர்கள் என்றால், அவர்களுக்கு ஜாதகப்பொருத்தம், மனப்பொருத்தம், வாழ்வியல் பொருத்தங்கள் பார்த்து அவர்களது சுற்றமும் நட்பும் சூழ திருமணம் செய்துவைத்துவிடுவேன். அது என் அம்மாவிடமிருந்து உருவானது. என் மாமியாரிடமிருந்து மேம்பட்டது.

நானும் என் மாமியார் மனோரஞ்சிதமும் இணைந்து ராமு மூலம் இந்தத் திருமணத் திட்டத்துக்கு பிள்ளையார் சுழி போட்டோம். 'எங்கிருந்தோ வந்தான்...' என்றொரு திரைப்பாடல் வருமே அதுபோல ராமு எங்கள் குடும்பத்து சேவகர். நீண்ட நெடுங்காலமாக எங்கள் குடும்பத்தோடு பணியாற்றுபவர். அவருக்கு 1964-ல் அவரது 31-ம் வயதில் திருமணம் செய்துவைத்தோம். மணப்பெண் கடலூரைச் சேர்ந்த துளசி. நான்தான் அந்தப் பெண்ணைத் தேர்வு செய்தேன். என் மாமியார் தாலி எடுத்துக்கொடுக்க, கடலூர் திருவந்திபுரம் கோயிலில் மங்கல நாண் பூட்டுவிழா நடந்தது. இப்போது ராமுவும் துளசியும் தாத்தா, பாட்டி ஆகிவிட்டார்கள். மகிழ்ச்சியோடு வாழ்ந்து வருகிறார்கள்.

நாங்கள் தொடங்கிய பாபா நர்சரி ஸ்கூலில் ஆசிரியையாகப் பணியாற்றியவர் கௌரி. என் கணவர் வழியில் உறவுப்பெண். பி.ஏ. வரை படித்திருந்த கௌரியை என் கணவர் பி.எட். படிக்கவைத்தார். 'பி.எட்' பூர்த்தி செய்துவிட்டு என் பள்ளியில் கௌரி பணிபுரிந்தாள்.

விவசாயத் துறையில் இணை இயக்குனராக கடலூரில் பணிபுரிந்தவர் கிருஷ்ணசாமி. அவர் தன் மகன் எம்.கே.ஆனந்தத்துக்காக கௌரியைப் பெண் பார்க்க வந்தார். நான் ஜாதகப் பொருத்தம் பார்த்தேன். நன்றாக இருந்தது. ஆனந்தம் பற்றி எனக்குத் தெரிந்தவர்களிடம் விசாரித்தேன். நல்ல பதில் கிடைத்தது.

'எல்லாம் திருப்தியாக இருக்கிறது. திருமணம் செய்து வைத்துவிடலாம்' என்று நான் முடிவு செய்தபோது கௌரியின் அம்மா, 'எதற்கும் நாம் போய் சாய் பாபாவைப் பார்த்துவிட்டு வந்துவிடுவோம். அவர் ஆசிகள் கிடைத்தால் எல்லாம் இனிதாக நடக்கும்' என்றார்.

சரி என்று பாபாவைச் சந்திக்க புறப்பட்டோம். இது 1977–ல் நடந்தது. அப்போது பாபா அவர்கள் பெங்களூரிலிருந்து 20 கி.மீ. தூரத்தில் இருக்கும், 'ஒயிட் ஃபீல்ட்' ஆசிரமத்தில் இருந்தார். அங்கு ஒரு கருத்தரங்கம் நடந்துகொண்டிருந்தது. நாங்கள் போய்ச் சேர்ந்த முதல்நாள், பாபாவைச் சந்திக்க முடியவில்லை. மறுநாள் மதியம் 3 மணிக்கு பாபா எங்கள் அருகில் வந்தார். கௌரியின் அம்மா கையிலிருந்து ஜாதகத்தை வாங்கினார். புன்னகை புரிந்தார். அப்போதே அவர் ஆசிர்வாதம் கிடைத்துவிட்டது. எல்லாரும் மனமொத்து 31.8.1977–ல் ஆனந்தம் – கௌரி திருமணத்தை நடத்திவைத்தோம். அவர்கள் மணவாழ்க்கை இனிதாக நடந்துகொண்டிருக்கிறது.

பாண்டிச்சேரியைச் சேர்ந்தவர் பிரபல வழக்கறிஞர் டி.முருகேசன். எங்கள் உறவினர். சமூக சேவையில் மிகுந்த அக்கறை கொண்டவர். திண்டிவனத்தில் கல்யாண மண்டபம் கட்டி ஏழைகளின் திருமணத்துக்கு இலவசமாக வாய்ப்பு கொடுப்பவர். என் மீது மிகுந்த பற்றுகொண்ட அவர் தன் மகன் வெங்கடபரணீஸ்வரனுக்குப் பெண் பார்த்துக்கொண்டிருந்தார். அவரும் வக்கீல்தான். வசதி படைத்தவர்கள் பலர் அவருக்குப் பெண் கொடுக்க போட்டி போட்டுக்கொண்டிருந்தனர்.

எனக்குத் தமிழ் கற்றுத்தந்தவர், கடலூர் ஆசிரியர் ஆறுமுக முதலியார். அவருக்கு 4 மகள்கள். வசதியில்லாதவர். அவரது இளைய மகள் ஹேமாம்புஜம்.

ஒருமுறை முருகேசன் அவர்களைச் சந்தித்தபோது, ஹேமாம்புஜம் பற்றி எடுத்துக்கூறி, 'அவளை உங்கள் மகனுக்குத் திருமணம் செய்துவையுங்கள்' என்றேன். மறுபேச்சு இல்லாமல் அவர் ஏற்றுக்கொண்டார். 'பெண்ணுக்குத் தேவையான நகைகளையும் நீங்களே வாங்கி, அணிவியுங்கள்' என்றேன். அதற்கும் சரி என்றார், அந்த அற்புத மனிதர்.

வெங்கடபரணீஸ்வரன் – ஹேமாம்புஜம் திருமணம் இனிதாக திருப்பதியில் நடந்தது. பாண்டிச்சேரியில் திருமண வரவேற்பு நடந்தது. அதில் பத்தாயிரம் பேர் கலந்து கொண்டனர். 28 நீதிபதிகள்

மணமக்களை வாழ்த்த வந்திருந்தார்கள். அவர்கள் மன நிறைவான வாழ்க்கை வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள்.

தூர்தர்ஷனில் பணிபுரிபவர், சபரிநாதன். திருமணத்தைப் பற்றிச் சிந்திக்காமல் வேலையிலே முழு ஆர்வமாக இருந்தவர். திருமணத்தின் அவசியத்தை அவருக்கு எடுத்துக்கூறி, பெண்தேடி திருமணம் செய்து வைத்தோம். அவரது திருமணத்தில் எனக்கு கூடுதலாக ஒரு பொறுப்பும் கிடைத்தது. நானே திருமணத்தை நடத்தி வைத்தேன்.

என் வீட்டில் வேலை பார்த்தவர்கள், தோட்டத்தில் வேலை செய்தவர்கள், பள்ளியில் பணிபுரிந்தவர்கள், உறவினர்கள், தெரிந்தவர்கள் என்று குறைந்தது 25 பேருக்கு நான் திருமணம் செய்துவைத்திருக்கிறேன். அதில் பலருக்கு முழுச் செலவையும் நானே ஏற்றிருக்கிறேன். அவர்களில் லதா – செல்வமணி, சேகர் – ராதிகா, மற்றும் சீனிவாசன், சதீஷ், ராஜகோபால், சிவகாமி, நீத்து போன்ற சிலர் பெயர்தான் இப்போது என் நினைவில் இருக்கிறது.

48 – வருடங்களுக்கு முன்னால் இருந்தே நான் என்பால் அன்பு கொண்டவர்களுக்கும், ஏழைகளுக்கும் திருமணம் நடத்தி வைக்கத் தொடங்கினேன். இன்றும் வாய்ப்பு கிடைத்தால் அதை முன்னின்று நடத்துவேன். காரணம், ஏழைகளுக்கு அவர்கள் விரும்பும் விதத்தில் திருமணம் செய்து வைப்பது பல ஜென்மங்களுக்கு நமக்கு புண்ணியம் தரும். நமது சந்ததிகளின் திருமண வாழ்க்கையும் சிறப்பாக இருக்கும். நமக்கும், நம் குடும்பத்தினருக்கும் புண்ணியம் தேடிக்கொள்ள, நாம் வாழ்ந்துகொண்டிருக்கும் சமுதாயத்தில் உள்ளவர்களுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும். அரசியல் தலைவர்களும், ஆன்மிகப் பெரியவர்களும், பிரமுகர்களும் கூட்டுத் திருமணங்களை இந்த நல்ல நோக்கத்தில்தான் நடத்திவைக்கிறார்கள்.

நீங்களும் முடிந்த அளவு மற்றவர்களுக்கு திருமண உதவியைச் செய்ய வேண்டும் என்பதற்காக இவ்வளவு தெளிவாக இங்கே இதை விளக்குகிறேன். எத்தனை திருமணங்களுக்கு உதவுகிறீர்களோ அந்த அளவுக்கு நீங்கள் உங்கள் குடும்பத்துக்கான புண்ணியத்தைப் பெறுவீர்கள்.

# 21



## அன்பை சம்பாதித்தேன் ஆனந்தமாய் வாழ்கிறேன்

**வ**யது வேறு. மனது வேறு. வயதை நினைத்து மனத்தின் வேகத்துக்கு நாம் யாரும் தடை போட்டுவிடக் கூடாது. நமக்கு யாரும் தடை போடவும் விட்டுவிடக் கூடாது. நான் 65 வயதில் பி.ஏ. தமிழ் பட்டப்படிப்புக்கான தேர்வு எழுதச் சென்றேன். அப்போது என்னைப் பார்த்து 'இந்தப் பாட்டிக்கு இந்த வயதில் பட்டம் தேவையா?' என்றும் 'இந்தப் பாட்டியே எழுதும்போது நாமும் படித்து இந்தப் பரீட்சையை எழுதினால் என்ன?' என்றும் இருவிதமாகப் பேசினார்கள்.

இதில் இரண்டாவது விதமாகப் பேசிய பேச்சுத்தான் எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது. ஏன் என்றால், என்னைப் பார்த்து பலர், படித்து பரீட்சை எழுத முன் வந்தார்கள். படிக்க வேண்டும் என்ற ஆர்வம் அவர்களுக்கு ஏற்பட்டதை நினைத்து நான் சந்தோஷப்பட்டுக்கொண்டேன். படிப்புக்கு முதுமை இல்லை. அதுபோல் படிப்பவர்களுக்கும் முதுமை இல்லை என்பது என் கருத்து. வயதான காலத்திலும் நீங்கள் இளமையாகத் தோன்ற வேண்டும் என்றால், உங்கள் தகுதிக்குத் தக்கபடி ஒரு பட்டப்படிப்பைத் தேர்வு செய்து

நீங்கள் படித்துக்கொண்டே இருக்க வேண்டும். அப்போது உங்கள் மூளை சுறுசுறுப்பாகி, உங்களை சுறுசுறுப்பாக வைத்துக் கொள்ளும்.

முதுமையில் பி.ஏ. பட்டம் பெற்ற நான், சித்தா, வர்மா, நேச்சுரோபதி, காந்த சிகிச்சை போன்றவற்றை எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகக் கற்றேன். அவற்றில் என்னதான் இருக்கிறது என்பதை கற்றுத் தெரிந்துகொள்ள ஆசைப்பட்டதால், அத்தனை விஷயங்களையும் கற்றேன். கம்ப்யூட்டரை கையாளவும் கற்றுத் தெரிந்துகொண்டேன். இந்தத் தலைமுறையோடு எப்படிப் பழக வேண்டும் என்று மட்டும் தெரிந்து வைத்துக்கொண்டால் போதாது. இந்தத் தலைமுறை கருவிகளின் பயன்பாட்டையும் ஓரளவாவது நாம் கற்றுத் தெரிந்துகொண்டால்தான் இந்தக் காலத்துக்குத் தக்கபடி நம்மால் ஈடுகொடுத்துச் செயல்பட முடியும்.

படிப்பு மூலம் நாம் பெறும் கல்வி, தொழில் மூலம் நமக்குக் கிடைக்கும் பணம், வாழ்க்கை மூலம் நமக்குக் கிடைக்கும் அனுபவம் போன்ற அனைத்தையும் சேர்த்து நமக்குள்ளே வைத்துக்கொண்டிருக்காமல் யார் யாருக்குத் தேவையோ அவர்களுக்கு வழங்கிக்கொண்டே இருக்க வேண்டும். அதுதான் மனிதாபிமானம். முடிந்த அளவு நான் அப்படி வழங்கிக்கொண்டிருக்கிறேன்.

'பாரத் ஸ்கவுட்ஸ்'ஸில் நான் உயர்ந்த பதவியை வகித்தேன். எங்கள் பள்ளியிலும் 'ஸ்கவுட்ஸ்' சிறப்பாக இயங்கியது. அதற்கு அமரராகிவிட்ட வக்கீல் சுந்தரம் காரணமாக இருந்தார். 'ஸ்கவுட்ஸ்' உயர்நிலைக் கூட்டங்களில் பங்கேற்க டெல்லிவரை சென்றிருக்கிறேன். எங்கள் பள்ளியில் மாணவ – மாணவிகள், அதிகாரிகள் பங்கேற்கும் 'ஸ்கவுட்ஸ்' கூட்டங்கள் அடிக்கடி நடக்கும். அதில் என்னையும் பேசச் சொல்வார்கள். முதலில் சில முறை எழுதி வைத்துப் படித்தேன். பின்பு மனப்பாடம் செய்துவிட்டுப் பேசினேன். அதிலெல்லாம் எனக்கு திருப்தி இல்லை. ஒப்புக்குச் சப்பாகப் பேசுவதற்குப் பதில், பேசாமலே இருந்துவிடலாம் என்று முடிவு செய்து, 'இனிமேல் என்னை கூட்டங்களில் பேச அழைக்காதீர்கள்' என்றேன். விழாக் குழுவினரும் சரி என்றார்கள்.

சில வாரங்கள் கழித்து இன்னொரு கூட்டத்துக்கு என்னை அழைத்தார்கள். அழைக்கும்போதே 'நீங்கள் பேச வேண்டாம். மேடையில் சும்மா உட்கார்ந்திருந்தால் போதும்' என்றார்கள். நானும் சரி என்று போனேன். ஒவ்வொருவராக கூட்டத்தில் பேசிக்கொண்டே இருந்தார்கள். திடீரென்று என் பெயரை அழைத்து, நானும் பேசுவேன் என்று அறிவித்துவிட்டார்கள். என்ன செய்வது? தயக்கமும், ஏமாற்றமும்தான் ஏற்பட்டது. ஆனால் தட்டுத்தடுமாறி பேசத் தொடங்கினேன். தொடங்கிய பின்பு பேச்சு நன்றாக வந்தது. யதார்த்தமாக அமைந்தது. அன்று என் பேச்சைக் கேட்டவர்கள், இதுவரை பேசியதைவிட சிறப்பாக இருந்ததாகச் சொன்னார்கள். அன்றிலிருந்து எனக்கு மேடைப்பேச்சு வந்துவிட்டது. இப்போதெல்லாம் என்ன தலைப்பு கொடுத்தாலும் அதை வைத்து ஒரு மணிநேரம் பேசிவிடுவேன். நம் உணர்வுகளையும், அனுபவங்களையும் மேடையில் வெளிப்படுத்தும் விதத்தில் பேச்சுக் கலையையும் நாம் கற்று வைத்துக்கொள்ள வேண்டும்.

ஏற்கனவே எனக்கு சுலோகங்கள், ஆன்மிகப் பாடல்கள் தெரியும். மூலமந்திரம், அஷ்டோத்ரம், சகஸ்ரநாமம் போன்றவற்றைக் கற்றுக்கொள்ளவும், வேள்வி, பூஜைகள் நடத்துவது பற்றித் தெரிந்துகொள்ளவும் 1998–ல் ஆசைப்பட்டேன். பசுமடத்து சாமியார் என்பவரிடம் அவற்றைக் கற்றுக்கொள்வதற்காக நானும், என் மருமகள் (அசோக்குமாரின் மனைவி) மாலதியும் சென்றோம். கடலூர் வீட்டிலிருந்து திருப்பாதிரிப்புலியூருக்குச் சென்று படித்தோம். மாலதியும் நன்றாக சுலோகங்கள் கற்று தேர்ந்தாள். நான் தீட்சையும் பெற்றேன். சாது சிவராமன் அவர்களிடம் மூச்சுப்பயிற்சிக் கலையையும் கற்றுக்கொண்டேன்.

என் வாழ்க்கையை இந்த அளவுக்கு சிறப்பித்ததும், என் குடும்பத்தை இந்த அளவுக்கு உயர்த்தியதும் என் ஆன்மிக நம்பிக்கைதான். சாய் பாபா அவர்கள் என் வாழ்க்கையில் பெரும்பாலான உயர்வுக்குக் காரணம். என் அநேக செயல்பாடுகள் அவரது ஆலோசனைகளின் படிதான் நடந்தன.

பாபா அவர்களின் உடல் இந்த மண்ணுலகைவிட்டு மறைவதற்கு ஒரு மாதத்துக்கு முன்னால் அவரிடம் ஆசி பெறச் சென்றேன். நாங்கள் 23 பேர் சென்றோம். எங்களில் இருவருக்கு மிக உயர்ந்த அறையை ஒதுக்கித் தந்தார்கள். ஆறு பேருக்கு வி.ஐ.பி. அறை கிடைத்தது. இரண்டு நாள்கள் தங்கியிருந்தோம்.

என்னைத் தவிர மீதமுள்ள அனைவரும் வெளியே சுற்றிப் பார்க்கக் கிளம்பினார்கள். நான் மட்டும் ஆன்மிகச் சிந்தனையோடு அறையிலே இருந்து பாபாவின் போட்டோவையே பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போது அங்கிருந்து 'நீ.. நீதான்' என்று பாபாவின் குரல் ஒலித்தது. சிலிர்த்துப் போனேன். நான் ஒவ்வொரு முறை புட்டபர்த்திக்குச் செல்லும்போதும் பாபாவின் 'குரல்' எனக்குக் கேட்கும். அவரது நேரடி ஆசீர்வாதமும் கிடைக்கும். அன்று 'குரல்' மட்டும் கிடைத்தது. அவரது பூவுடல் மறைந்தாலும் எனக்கு இப்போதும் அருளையும், சக்தியையும் அள்ளி வழங்கிக்கொண்டிருக்கிறார். அவரோடு நான் சண்டை போட்ட அனுபவமும், வாக்குவாதம் செய்த அனுபவமும் இன்றும் என் நினைவில் வந்து வந்து போய்க்கொண்டிருக்கின்றன.

வயதான காலத்தில் என் பெற்றோரை நான் என்னுடனேயே வைத்து கவனித்தேன். அம்மா, அப்பாவை எந்தக் குறையும் இன்றிப் பாதுகாத்து, பராமரித்தேன். இறுதியில் என் அம்மா சிறிதுகாலம் நோய்வாய்ப்பட்டிருந்தாலும் டாக்டரை தவிர வேறு யாரிடமும் தனக்கு நோய் இருப்பதைச் சொல்லமாட்டார். அழவும் மாட்டார். எப்போதும் சிரித்த முகத்தோடு இருக்கும் அவர், 86 –ஆவது வயதில் சுமங்கலியாக இயற்கை எய்தினார். அப்பா 96 வயது வரை என் வீட்டிலேயே வாழ்ந்து காலமானார். 'ஓம் நமசிவாயா... ஓம் நமோ நாராயணா' என்ற மோட்ச மந்திரங்களை அவர் காதில் சொல்லி அவரை வழியனுப்பி வைத்தேன்.

நாம் பிறந்த இந்த சமூகத்துக்குச் செய்யும் சேவை, நமது நாட்டுக்குச் செய்யும் சேவை போன்றது. இந்த சமூகத்துக்கு என்னால் முடிந்த அளவு சேவை செய்திருப்பதாக நான் கருதுகிறேன். 'பரோபகாரம்

இதம் சரீரம்' என்ற மகா மந்திரத்தில் எனக்கு அதிக நம்பிக்கையுண்டு. அதில் குறிப்பாக பெண்களுக்கு சேவையாற்றுவதை என் கடமையாகக் கொண்டிருந்தேன். அதற்காக கடலூரில் உள்ள எனது வீட்டில் 'women's multipurpose co-op society' என்ற ஒன்றை உருவாக்கி பெண்களுக்கு கம்பளி நெய்தல், மூங்கில் பொருள்கள் தயாரித்தல், டெய்லரிங், அப்பளம், வடகம், ஊறுகாய், பத்தி, சோப்பு, பினாயில் போன்ற பல்வேறு பொருள்களைத் தயாரிப்பதற்கும் கற்றுக்கொடுத்தேன். ஏராளமான பெண்கள் அதன்மூலம் பலனடைந்தார்கள். அவர்கள் தயாரிக்கும் பொருள்களை எல்லாம் விற்பனைக்காக தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கு அனுப்பிவைத்தோம். லாரி லாரியாக அந்தப் பொருள்கள் சென்றன. ருசி மிகுந்த அந்தப் பொருள்கள் சென்னையில் பெருமளவு விற்பனையாகின. இதனால் நிறையப் பெண்கள் பொருளாதார வளர்ச்சியடைந்தார்கள்.

எனக்கும் கலைகளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. கலை மூலம் என் மனத்துக்கு அமைதி கிடைத்தது. மகிழ்ச்சி கிடைத்தது. அது பயனுள்ள பொழுதுபோக்காகவும் அமைந்தது. ஒரு குடும்பத் தலைவிக்கு கலைகளில் ஈடுபாடு ஏற்பட்டால், அந்தக் குடும்பத்துக்கே கலையோடு ஏதாவது ஒரு வகையில் தொடர்பு ஏற்பட்டுவிடும். அதனால் ஏராளமான பெண்களுக்கு கலை ஆர்வத்தை ஊட்ட வேண்டும் என்று தீர்மானித்தேன். 'கலாமந்திர்' என்ற அமைப்பை உருவாக்கி, பெண்களுக்கு பல்வேறு விதமான பொம்மைகள் தயாரிக்கக் கற்றுக் கொடுத்தேன். நான் எதிர்பார்த்ததைவிட பெண்கள் அதிக ஆர்வத்துடன் அவற்றைக் கற்றுக்கொண்டார்கள். நான் எதிர்பார்த்த அளவு அந்தக் கலைப்பொருள்கள் விற்பனை ஆகவில்லை. ஆனாலும் கலைக்குச் செய்யும் சேவையாக நினைத்துக்கொண்டு, அவற்றைத் தயாரிக்கும் பெண்களுக்கு பணம் கொடுத்துக்கொண்டே இருந்தேன். அது எனக்கு ஆத்ம திருப்தியைத் தந்தது.

அரிமா சங்கம், ரோட்டரி சங்கத்தின் பெண்கள் பிரிவு மூலமும் எனது சேவைப் பணிகள் தொடர்ந்தன. ரத்ததான முகாம், கண் சிகிச்சை

முகாம்களை நடத்தினேன். நான் சுறுசுறுப்பாக சேவையாற்றிக் கொண்டிருந்த காலகட்டத்தில், கடலூரில் ஏழைக் குழந்தைகளின் எண்ணிக்கை அதிகமாக இருந்தது. குழந்தைகளைப் படிக்க வைக்க முடியாமல் ஏராளமான தாய்மார்கள் அவதிப்பட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்களின் குழந்தைகள் நல்லபடியாக வளர்ந்து, படித்து முன்னேற வேண்டும் என்பதற்காக வசதிபடைத்த சிலரைச் சந்தித்துப் பேசி உதவிகள் செய்ய வைத்தேன். பெற்றோரிடமே அந்தக்குழந்தைகள் வளர்ந்தனர். ஆனால் அவர்களுக்கான பராமரிப்புச் செலவையும், கல்விச் செலவையும் வசதி படைத்தவர்கள் செய்தனர். கல்விக்கான இந்த தத்தெடுப்பு திட்டத்தின் மூலம் ஏராளமான குழந்தைகள் பலன் அடைந்தனர். அவர்கள் படித்ததால் பல குடும்பங்கள் தலை நிமிர்ந்தன.

சத்ய சாய் பாபாவின் அருளை முழுமையாக நான் பெறுவதற்காக அவர் சார்ந்த ஆன்மிகப் பணிகளிலும் ஈடுபட்டேன். ‘சத்ய சாய் சேவா சமிதி’ என்ற சேவைக் குழு கடலூரில் இயங்கி வருகிறது. அவர்கள் சேவை முகாம்கள் நடத்த நான் உதவுவதுண்டு.

அதில் சிறுவர்களுக்காக ‘பால விகாஸ்’ குழு இருக்கிறது. குழந்தைகள் படிப்பிலும் வாழ்க்கையிலும் வெற்றி அடைய அந்த குழு மூலம் முகாம்கள் நிறைய நடத்துவேன்.

ஒரு கல்வி நிலையம் முழு வெற்றியடைய அங்கு பணிபுரியும் அனைவருமே கற்றவர்களாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் அந்த கல்வி நிலையத்தில் ஏற்றத் தாழ்வுகள் இல்லாமல் அனைவரும் மரியாதையுடனும், மகிழ்ச்சியுடனும் இருப்பார்கள். அதற்காக என்னிடம் வேலை பார்த்த ஆயாக்களுக்கு இரவுப் பள்ளி நடத்தி படிப்பு கற்பித்துக் கொடுத்தேன். லட்சுமி போன்ற ஆயாக்கள் அதன்மூலம் கல்வி பெற்று, மகிழ்ச்சி அடைந்தனர். அதுபோல் என்னிடம் வேலை பார்த்த யாரையும் கை விடமாட்டேன். முடிந்த அளவு என்னோடு சேர்த்து அவர்களையும் உயர்த்திவிடுவேன். அந்த வழியில் கலா, குமாரி சகோதரிகள் அன்றும் இன்றும் எங்களிடம் ஆசிரியைகளாகப் பணிபுரிகிறார்கள்.

நான் எல்லாரிடமும் அன்பு செலுத்தியதுபோல் என் மீதும் நிறையப் பேர் அன்பு செலுத்தினார்கள். நான் எப்போதும் எல்லாருக்கும் பணமும், உதவிகளும் வழங்கிக் கொண்டிருக்கவில்லை. ஆனால் ஒருபோதும் குறையாத அன்பை அவர்கள் மீது செலுத்தினேன். சமீபத்தில் நான் நோய்வாய்ப்பட்டிருந்தபோது, கடலூர் புனித வளனார் பள்ளி முதல்வர் பாதிரியார் பீட்டர் அவர்கள் என்பால் கொண்ட அன்பின் காரணமாக நான் விரைவாக குணமடைய வேண்டி 42 நாள்கள் தினமும் ஒரு நேரம் மட்டும் உணவருந்தி பிரார்த்தனை செய்திருக்கிறார். நான் குணமடைந்து வீட்டுக்குத் திரும்பியபோது அதை உறவினர்கள் சிலர் எப்படியோ தெரிந்துகொண்டு என்னிடம் தெரிவித்தார்கள். நெகிழ்ந்துபோனேன். இந்த ஜென்மத்தில் நான் அதிகம் சம்பாதித்தது இதுபோன்ற நல்ல ஆத்மாக்களின் அன்பைத்தான்! அதுதான் இப்போதும் என்னை வாழ வைத்துக் கொண்டிருக்கிறது.

தீர்க்க தரிசனம் என்பது எப்போதும் நமக்குத் தேவை. அந்த தீர்க்க தரிசனம் என் மாமனாரிடம் இருந்தது. மாமியாரிடமும் இருந்தது. அதற்கு எடுத்துக்காட்டாக இரண்டு சம்பவங்களைச் சொல்கிறேன்.

மாமனார் கேப்டன் டாக்டர் ரங்கநாதன் அவர்கள் ராணுவத்தில் பணிபுரிந்ததால், போர் முனைக்குச் செல்ல வேண்டிய சூழ்நிலை அடிக்கடி ஏற்பட்டது. இரண்டாம் உலகப்போர் நடந்தபோது அவர் ராணுவ டாக்டராக ஈராக்குக்கு செல்ல வேண்டி இருந்தது. 'போருக்கு போகும் இடத்தில் தமக்கு ஏதாவது ஆகிவிட்டால், தமது குடும்பம் கஷ்டப்பட்டு விடக் கூடாது' என்பதற்காக அவர் கையில் இருந்த பணத்தை எல்லாம் கொடுத்து 1930ல் 25 ஏக்கர் இடத்தை வாங்கினார்.

இன்று எங்கள் சாம்ராஜ்ஜியம் கடலூரில் இயங்கிக்கொண்டிருப்பது அந்த இடத்தில்தான்! அவர் அப்போது ஆபத்துக்கு உதவும் என்று வாங்கிப் போட்ட இடம் எங்களை எத்தனையோ ஆபத்துக்களில்

இருந்து காத்திருக்கிறது. அந்த பூமியில் அவர் ஆத்மா கலந்திருக்கிறது. 'Dotor's Garden' என்று இன்றும் கூறுகிறோம்.

மாமியார் மனோரஞ்சிதம் என் மகன் சி.கே.ரங்கநாதனிடம் அதிக பாசம் காட்டுவார். வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் அவனைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு 'உங்க தாத்தா ராணுவத்தில் பெரிய டாக்டராக இருந்தார். அவர் பெயரை உனக்கு ஏன் சூட்டியிருக்கிறோம் தெரியுமா? அவரைப்போல் நீயும் புகழ் பெறணும்' என்று சொல்லிக்கொண்டே இருப்பார். அவர் தீர்க்க தரிசனமாக சொன்ன வாக்கும் சி.கே.ரங்கநாதன் வேகமாக வளர்ந்து புகழ்பெற ஒரு காரணமாக இருக்கும்.

நான் ஒருபோதும் உறவுகளை புறக்கணித்ததில்லை. என் பெரியப்பா, சித்தப்பா பிள்ளைகள் நிறைய பேர் உண்டு. அந்தனை பேரையும் ஒன்றாக பார்க்க வாய்ப்பு குறைவாக இருந்ததால், வருடத்துக்கு ஒருமுறையாவது அனைவரையும் ஒன்றாக என் வீட்டுக்கு அழைப்பேன். அனைவரும் வந்துவிடுவார்கள். அன்போடு சில நாள்களை கழித்துவிட்டு, பாசத்தோடு திரும்பிச் செல்வார்கள்.

நீங்களும் வருடத்துக்கு ஒருமுறையாவது உங்கள் குடும்பத்தினர் அனைவரையும் அழைத்து ஒரே இடத்தில் கூடி, உறவுகளை மேம்படுத்துங்கள்.

நான் இந்த புத்தகத்துக்காக எனது நினைவுகளை கூர்மைப்படுத்திக் கொண்டிருக்கும் இந்த நேரத்தில், இன்னொரு புத்தகத்தின் நினைவும் எனக்கு வருகிறது. கிட்டத்தட்ட 70 ஆண்டுகளுக்கு முன்னால் என் தந்தை 'Sadras Family' என்று ஒரு சிறிய ஆங்கில புத்தகத்தை வெளியிட்டார். நாங்கள் சதுரங்கப் பட்டினத்தை பூர்வீகமாகக் கொண்டு வாழ்ந்து, அங்கிருந்து நெல்லூருக்கு இடம் பெயர்ந்து, புகழ் பெற்றது, சென்னைக்கு வந்தது எல்லாவற்றையும் ஆதாரபூர்வமாக அவர் எழுதியுள்ளார். அது வரலாறு. இப்போது நான் படைப்பது வாழ்க்கை!

# 22



## நான் ஒரு பாடம்! மக்களுக்கு இது ஒரு பாடப் புத்தகம்

'கடவுள் ஒவ்வொருவரையும் படைக்க முடியாது என்பதற்காக பெண்களைப் படைத்தார். அவர்கள் அம்மாக்களாகி, தங்களுக்கு தேவையான குழந்தைகளை தாங்களே படைத்துக்கொண்டிருக் கிறார்கள்' என்பார்கள்.

வயிற்றுக்குள் சிசுவாக்கி, வளர்த்து, பிரசவிப்பதோடு அந்த படைப்புப்பணி நிறைவடைந்துவிட்டதாக தாயால் கருத முடியாது. 'படைப்பது என் வேலை! இதோ பெற்றுப்போட்டுவிட்டேன்! முடிந்தது என் வேலை!!' என்று தாயால் ஒதுங்கிக்கொள்ள முடியாது.

குழந்தையின் உருவத்தை படைப்பது மட்டும் படைப்பல்ல! அது இயற்கை சார்ந்த விஷயம். தன்முனைப்பு என்று அதில் சொல்ல பெரிதாக எதுவும் இல்லை. ஒரு குழந்தையை பெற்று, அதற்கு முழு வாழ்க்கையையும் கற்றுக்கொடுத்து, அதனை வளர்த்து வாழ்க்கைக்கு தயாராக்கி, முழுமைப்படுத்துவதுதான் தாய்மையின் முழுமையான படைப்பாகும்.

கடவுள் அம்மாக்களை படைத்தார். குழந்தைகளின் உருவத்தைப் படைப்பதற்கு மட்டுமல்ல! வாழ்க்கை முழுமைக்கும் தேவையான

விஷயங்களைக் கற்றுக்கொடுத்து அவர்களை முழுமையாக்குவதற்குத் தான் தாயைப் படைத்தார். அந்த படைப்பை செய்வதற்காகத்தான் கடவுள் 'முதல் அம்மாவை' உருவாக்கினார்.

கடவுளின் எண்ணத்தை முழுமையாக புரிந்துகொண்டு எவ்வளவு அம்மாக்கள், குழந்தைகளை முழுமையான படைப்புகளாக மாற்றுகிறார்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால் நான் கடவுள் விருப்பப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அதனால்தானோ என்னவோ கடவுள் என்னை பரிசோதித்துப்பார்க்க நினைத்திருக்கிறார். அழகான ஆறு குழந்தைகளைக் கொடுத்தவர், கூடவே அளவற்ற கஷ்டங்களையும் கொடுத்தார்.

என் குழந்தைகள் வாழ்க்கைக்கு மிக முக்கியமான கல்வியை கற்றுக்கொண்டிருந்த நேரத்தில், கல்விச் செலவுகளுக்காக பணம் நிறைய தேவைப்பட்ட காலத்தில், என் கணவர் இந்தியாவையே திரும்பிப் பார்க்க வைக்கும் புதிய தொழிலின் இறுதிப்படியில் ஏறிக்கொண்டிருந்த நேரத்தில், கடவுளின் பரிசோதனை முயற்சி உச்சக்கட்டத்தை அடைந்துவிட்டது.

என் கணவரை பறித்துக்கொண்டார்.

'எவ்வளவு பெரிய அடி' என்று எல்லோரும் சொன்னார்கள். அப்படியே பலரையும் சொல்லவைத்து, என்னை அடித்துத்தூக்கி மூலையில் போடலாம் என்று விதி நினைத்தது.

அகால மரணம் அடைந்த கணவரின் உடலைப் பார்த்து, 'அழு... அழு' என்று, என்னைப்பார்த்து பலரைச் சொல்ல வைத்தது. 'இனி நீ வாழ்க்கை முழுக்க அழுதுகொண்டே இருக்க இன்றே அழுகையை தொடங்கிவிடு. அழுகைக்கான தொடக்க விழாதான் உன் கணவரின் மரணம்' என்று விதி என்னிடம் சொல்வதுபோல் இருந்தது.

'நான் ஏன் அழ வேண்டும்? என் கணவரை உயிர் பிழைக்க வைக்கும் சக்தி என் அழுகைக்கு இல்லாதபோது நான் ஏன் கண்ணீர் சிந்த வேண்டும். அழுகையை வெளிப்படுத்தி நான் ஏன் சராசரி பெண்ணாக

வேண்டும்? நான் அழவே மாட்டேன்' என்று விதியிடம் திருப்பிச் சொன்னேன்.

நான் அழுதால் அதைப்பார்த்து, நான் ஆக்கமாக படைக்க விரும்பிய என் 6 பிள்ளைகளும் அழுவார்கள். அன்று, அந்த சோகத்தின் முன்னால் நின்று நான் அழுதிருந்தால், சோகம் வரும்போதெல்லாம் அழ வேண்டும் என்ற தவறான பாடத்தை என் பிள்ளைகளுக்கு நான் சொல்லிக்கொடுத்தவராகியிருப்பேன்.

நான் அன்று அழுதிருந்தால், இன்று ஒவ்வொரு பிரச்னையின் போதும், சோகத்தின் போதும் என் பிள்ளைகளும் போட்டி போட்டு அழுதுகொண்டிருந்திருப்பார்கள். சோகத்தோடு அவர்கள் தோல்வியிடம் மண்டியிட்டிருப்பார்கள். வெற்றியின் விலாசம் அவர்களுக்கு தெரியாமல் போயிருக்கும். இன்று தொழில் துறையில் பல ஆயிரம் பேருக்கு வேலை கொடுப்பவர்களாக அவர்களால் ஆகியிருக்க முடியாது.

ஜனனத்தை போன்றது, மரணமும்! அது எல்லோருடைய வாழ்க்கையிலும் எப்போதும் வரும். இழப்புகள் எந்தவிதத்திலும் என்றும் ஏற்படலாம். இழப்புகள் நிறைந்ததுதான் வாழ்க்கை. எப்போது எந்த இழப்பு ஏற்பட்டாலும் அழாதீர்கள். அழுகை உங்களை வாழ்க்கையின் அடுத்த கட்டத்துக்குக் கொண்டு செல்லாது. அடுத்து என்ன? என்ற சிந்தனைதான் உங்களையும், உங்கள் தலைமுறையையும் முன்னோக்கி கொண்டு சென்று முன்னேறச் செய்யும். அதனால் இந்த புத்தகத்தைப் படிக்கும் என் அன்புக்குரிய பிள்ளைகளே நீங்கள் எக்காரணத்தை கொண்டும் அழாதீர்கள். உங்கள் பிள்ளைகளையும் அழவிடாதீர்கள். அழுகை, பெண்களின் அவமானம்.

அவ்வப்போது அழும் பழக்கம் கொண்ட தாய்மார்கள் கையில் இந்த புத்தகத்தை கொண்டு கொடுங்கள். அவர்கள் படித்துப்பார்த்துவிட்டு, அழுகையை மறந்துவிட்டு வாழ்க்கையை தைரியமாக எதிர்கொள்ளத் தொடங்கிவிடுவார்கள்.

கணவர் இறந்தபோது நான் திடீரென்று என்னை அறியாமலே கடன்காரியாகிவிட்டேன். ஒன்றும் அறியாத அப்பாவி பெண்ணான என் தலையில் லட்சங்களில் கடன் சுமையை ஏற்றினார்கள். அப்போது சிலர் வந்து 'அந்த கடன்களை எல்லாம் ஏற்றுக்கொள்ளாதே! உனக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை என்று சொல்லிவிடு' என்றார்கள்.

'என் கணவருக்கும் எனக்கும் ஆயிரம் ஜென்மத்து தொடர்பு இருக்கும்போது, அவர் வாங்கிய கடனுக்கும் எனக்கும் தொடர்பு இல்லாமல் எப்படி இருக்கும்?' என்ற உறுதியோடு கடனை ஏற்றுக்கொண்டு, உழைத்து, உழைத்து, ஐந்தும் பத்துமாக சேர்த்து கடனை அடைத்தேன்.

உங்கள் அன்புக்குரியவர்களால் உங்கள் வாழ்க்கையில் கடன் ஏற்படலாம். அதை நினைத்து கலங்கிப்போகாதீர்கள். கடன் உண்மையாக இருக்கும் பட்சத்தில் சிறிதுசிறிதாகவாவது அந்த கடனைச் செலுத்த முயற்சி செய்யுங்கள்.

நீங்கள் அவ்வாறு நடந்துகொள்ளும்போது, அந்த நல்லபழக்கம் உங்கள் குழந்தைகளிடமும் ஏற்படும். ஜென்மம் முழுக்க அவர்களும் அந்த நல்லபழக்கத்தை கடைப்பிடிப்பார்கள். உழைத்து உங்கள் கடன்களை நீங்கள் எப்படியாவது நிவர்த்தி செய்துவிடுங்கள். இல்லாவிட்டால் உங்கள் தலைமுறையே அதனால் பாதிக்கப்படும்.

'கடன் விஷயத்தில் நாணயமாக நடந்துகொண்டு யாராவது முன்னேறியிருக்கிறார்களா?' என்று யாராவது உங்களிடம் கேட்டால், கேட்பவரிடம் இந்த புத்தகத்தைக் கொண்டு கொடுங்கள். 'கடனை நாம் ஒழுங்காக அடைத்தால், இந்த ஹேமா சின்னிகிருஷ்ணன் மாதிரி புகழோடு வாழலாம்... வளரலாம் என்று சொல்லுங்கள்.'

நாணயமாக நடந்துகொண்டால் எனக்கு கிடைத்தது போன்ற குணநலன்கள் கொண்ட பிள்ளைகள் உங்களுக்கும் கிடைப்பார்கள். அவர்களும் உங்களுக்கு பெருமை சேர்ப்பார்கள். அதன் மூலம் நீங்கள் இந்த பூஉலகிலே சொர்க்கத்தை அனுபவிக்கலாம்.

கஷ்டங்கள் இல்லாத வாழ்க்கையில்லை. கஷ்டங்கள் அவ்வப்போது வந்துபோய்கொண்டுதான் இருக்கும். தளர்ந்து போகாதீர்கள். பிரச்னைகள் வந்துபோய்க்கொண்டுதான் இருக்கும். சோர்ந்து போகாதீர்கள். அதெல்லாம் உங்கள் வாழ்க்கையில் வரும் அத்தியாயங்கள். கஷ்டங்கள், நஷ்டங்கள், பிரச்னைகளின்போது நீங்கள் எப்படி நடந்துகொள்கிறீர்கள் என்பதை உங்கள் பிள்ளைகள் பார்த்துக்கொண்டிருப்பார்கள். ஏனென்றால் உங்கள் மூலம்தான் அவர்கள் வாழ்க்கைப் பாடங்களைப் படிப்பார்கள். உங்கள் வாழ்க்கையும், நீங்கள் எடுக்கும் முடிவுகளும் சிறு வயதில் இருந்தே படம்போல் அவர்கள் மூளையில் பதிவாகிக்கொண்டிருக்கும். அப்படியே ஆழ்மனத்திலும் பதியும். நாம் எடுக்கும் நல்ல முடிவுகள், நமது நடத்தைகள் குழந்தைகளின் ஆழ்மனத்தில் பதிந்துவிட்டால், வாழ்க்கை முழுவதும் அவர்களுக்கு அத்தகைய பிரச்னைகள் ஏற்படும்போது, ஆழ்மனத்தில் பதிவாகி இருக்கும் முடிவை எடுத்துச் சொல்லும். அவர்கள் அந்த முடிவை அமல்படுத்தி எளிதாக அந்த பிரச்னையில் இருந்து மீண்டுவிடுவார்கள்.

நான் ஒரு கைம்பெண். ஆனால் அதன்மூலம் என்னை ஒரு பரிதாபத்துக்குரிய ஜீவன் ஆக்கிக்கொள்ளாமல், இந்த சமூகத்துக்கு மிகச்சிறந்தவர்களாக என் ஆறு பிள்ளைகளையும் படைத்துத் தந்திருக்கிறேன். அதன்மூலம் கடவுள் என்னிடம் கொடுத்த படைப்பு பணியை நான் முழுமையாகச் செய்திருக்கிறேன். பள்ளிக்கூடம் திறந்து, ஏராளமான மாணவ – மாணவிகளை என்னால் முடிந்த அளவு சிறந்த மாணவர்களாக படைத்திருக்கிறேன். என் மகன் சி.கே.ரங்கநாதன், அதையே கல்வி சாம்ராஜ்ஜியமாக மாற்றிக்கொண்டிருக்கிறான்.

நமது சமூகம் இன்று ‘ரிஸ்க்’ எடுக்க ரொம்பவும் தயங்குகிறது. எந்த விதமான முயற்சியும் எடுக்காமல் அரசு அல்லது தனியார் நிறுவனத்தில் ஒரு வேலை என்ற ‘பாதுகாப்பு வட்டத்தின்’ உள்ளே வாழப் பழகிவிட்ட பெற்றோர், தங்கள் குழந்தைகளையும் அதே கோணத்தில் ‘நல்ல வேலைக்காக படி’ என்றே வளர்க்கிறார்கள்.

அந்த பிள்ளைகள் அதில் இருந்து மாறி, வேறு துறையில் புகுந்து வேலை கொடுப்பவராக மாறலாம் என்ற முயற்சியில் ஈடுபட்டால், 'சொந்த தொழில் தொடங்கப்போகிறாயா? அது ஒரு சூதாட்டம். அதில் தோல்விகள் அதிகம். நீ போய் அந்த அளவுக்கு 'ரிஸ்க்' எடுக்க வேண்டியதில்லை' என்று அவர்களது முயற்சிக்கு முற்றுபுள்ளிவைத்து விடுகிறார்கள். உண்மையில் இதில் ரிஸ்க் இருக்கத்தான் செய்யும். கஷ்டமும், நஷ்டமும் இருக்கத்தான் செய்யும். ஆனால், வாழ்க்கையின் வெற்றியை அதில்தான் ருசிக்க முடியும்.

நானும், என் கணவரும் என் பிள்ளைகளிடம் அவர்கள் சிறுவர்களாக இருக்கும்போதே 'நீங்கள் வேலைக்காக படியுங்கள்' என்று சொல்லவில்லை. 'வாழ்க்கைக்காக படியுங்கள்' என்றோம். என் பிள்ளைகளுக்கு ஓரளவு விவரம் வந்ததும், 'வேலை கொடுப்பவராக நீங்கள் உருவாகுங்கள். தொழிலதிபர்களாக ஆக வேண்டும்' என்று அவ்வப்போது உணர்த்தி வளர்த்தோம். அதனால்தான், அவர்கள் பல நூறு பேருக்கு வேலை கொடுப்பவர்களாக உருவாகியிருக்கிறார்கள்.

இதை ஏன் சொல்கிறேன் என்றால் நீங்கள் உங்கள் குழந்தைகளை வேலை பார்ப்பவராக வளர்க்காதீர்கள். வேலை கொடுப்பவராக வேண்டும் என்று கூறியே வளருங்கள்.

வாழ்க்கையில் எப்போது தோல்வி வந்தாலும் அதை வெற்றியின் நுழை வாயிலாக கருதுங்கள். தோல்வியைக் கண்டு பயந்தால் அது சறுக்கல். தோல்வியைக் கண்டு பாய்ந்தால் அது உயர்வு.

நான் எங்கள் குடும்பத்துக்கு மிகப்பெரிய சொத்து ஒன்றை விட்டுச் செல்கிறேன்.

அது எங்கள் மூதாதையர்கள் சேர்த்து எனக்கு வழங்கியது. நான் என் பிள்ளைகளிடம் விட்டுச் செல்கிறேன். அந்த பெரும் சொத்து என்ன தெரியுமா? விருந்தோம்பல்!

மனிதன் ஒரு மகா சமுத்திரம். ஆனால் அதையே வற்ற வைப்பதுபோல் கொடுமையானது பசி. அந்த பசியை போக்கும் மருந்து

விருந்தோம்பல். இதில் பசி மட்டும் ஆறாது. மனமும் ஆறும். முகம் பார்த்தே பசி அறிந்து 'சாப்பிடுங்கள்' என்று பரிமாறிவிடுவேன் நான். என் பிள்ளைகள் வருகிறவர்களின் அகத்தையே பார்த்து, அன்பாக விருந்தோம்பல் செய்கிறார்கள். வாழையடி வாழையாக இந்த விருந்தோம்பல் எங்கள் குடும்ப சொத்தாக இருக்கும். நீங்களும் மனப்பூர்வமாக விருந்தோம்பல் செய்யுங்கள். உங்களுக்கு எந்த குறையும் வராது. அதற்கு நான் 'கியாரண்டி'!

என்னிடம் பத்திரிகையாளர் பால் சுயம்பு, 'முதுமை வரமா – சாபமா?' என்று கேட்டார். 'எனக்கு வரம். என்னைப்போல் எல்லா முதியோர்களாலும் அதை வரமாக்கிக்கொள்ள முடியும்' என்றேன். 'எப்படி?' என்று என்னிடமே, அவர் திருப்பிக்கேட்டார்.

நான் சொன்ன பதிலை, இங்கே இதை படிக்கும் எல்லாருக்கும் சொல்கிறேன். ஏன் என்றால், இன்று நீங்கள் இளமையாக இருந்தாலும், நாளை முதுமை அடைவீர்கள். அப்போது உங்களுக்கும் அது வரமாக இருக்க வேண்டும்!

முதுமையை வரமாக்குவதும், சாபமாக்குவதும் நம் கையில்தான் இருக்கிறது. நான் குழந்தை, சிறுமி, இளம்வயது, தாய், பாட்டி ஆகிய பருவங்களைக் கடந்து வந்திருக்கிறேன். ஒவ்வொரு பருவத்திலும் எனக்கு கொடுக்கப்பட்ட கடமையை செவ்வனே செய்துவந்திருக்கிறேன். நான் நல்ல தாயாக இருந்து என் கடமைகளை செய்துவிட்டபடியால், என் பிள்ளைகள், நல்ல பிள்ளைகளாக இருந்து அவர்கள் செய்ய வேண்டிய கடமையை எனக்கு செய்கிறார்கள். அதனால் எனக்கு முதுமை வரமும், வரப்பிரசாதமும் ஆகிவிட்டது.

பால்குடியை மறக்கும் முன்பே பிள்ளைகளை 'கிரஷ்'ஷில் விடுவதும், மழலை ஆகும் முன்பே பள்ளியில் விடுவதும், அவை இரவில் தூங்கிய பின்பு வந்து தொட்டிலில் எட்டிப் பார்ப்பதுமாக தாய் இருந்தால், அவள் பணத்தை நோக்கியே ஓடினால், அந்த குழந்தைக்கு தாய் ஒரு 'ATM' இயந்திரம்தான். அப்படிப்பட்ட தாய் முதுமை அடையும்போது மகன் 'ATM' இயந்திரமாகி விடுவான். அந்த தாய்க்கு முதுமை ஒரு சாபம்

ஆகிவிடக்கூடும். எனவே நீங்கள் எதிர்காலத்தில் முதியோர் இல்லத்தில் தஞ்சம் ஆகக் கூடாது என்றால், இன்றே உங்கள் குழந்தைகளை நன்றாகக் கவனியுங்கள். கடமைகளை சரிவரச் செய்யுங்கள். முதுமை உங்களுக்கும் வரமாகும்... எனக்கு வாய்த்ததுபோல்...!

தாய்மார்களே! உலகப் புகழ்பெற்ற பல்கலைக் கழகத்தில் உங்கள் பிள்ளைகள் பாடம் படித்தாலும், அங்கு மிகச் சிறந்த ஆசிரியர்கள் பயிற்சி கொடுத்தாலும், அவர்களுக்கு தேவையான முழுமையான வாழ்க்கைப் பாடத்தை உங்களிடமிருந்து மட்டுமே கற்றுக்கொள்ள முடியும். உங்களால் மட்டுமே அவர்களுக்கு வாழ்க்கை பாடங்களை கற்றுக்கொடுக்கவும் முடியும். அதை கற்றுக்கொடுப்பது சிரமம் இல்லை. மிக எளிது. அவர்களுக்கு நீங்கள் எதை கற்றுக்கொடுக்க விரும்புகிறீர்களோ, அப்படியே நீங்கள் வாழ்ந்தால் போதும்! நீங்கள் நல்லவர்களாக, வல்லவர்களாக, திறமைசாலிகளாக வாழ்ந்தால், உங்களிடமிருந்து அவற்றை உங்கள் குழந்தைகள் கற்றுக் கொள்வார்கள். அதுவே அவர்களது மரபணு மூலக்கூறுகளில் பதிந்து, பல தலைமுறைகளுக்கு அவர்களை நல்லவர்களாக்கும்.

நான் அப்படித்தான் வாழ்ந்திருக்கிறேன். என் வாழ்க்கை இந்த சமூகத்துக்கு நிச்சயம் ஒரு பாடமாக இருக்கும். அதனால் என் வாழ்க்கையை தொகுத்து எழுதி எஸ்.பால அமுதா மூலம் ஒரு பாடப்புத்தகம்போல் உங்களுக்குத் தருகிறேன். பத்திரிகையாளர் பாரியின் உதவிக்கும் நன்றி கூறுகிறேன்.

உங்களுக்கு தன்னம்பிக்கை குறையும்போது, மனம் தளரும்போது, கவலை ஏற்படும்போது, பிரச்னைகள் உருவாகும்போது நீங்கள் முடங்கிவிடாமல் அவைகளில் இருந்து விடுபட்டு முன்னோக்கிச்செல்ல நான் கடந்து வந்த இந்த பாதை உங்களுக்கு வழிகாட்டியாக அமையும். உங்களை புரட்டிப்போட முயற்சிக்கும் விதியை புத்திசாலித்தனமாக வெல்ல இந்த ‘ஹேமாலயம்’ துணையிருக்கும் என்ற நம்பிக்கையுடன் விடைபெறுகிறேன்.

# 23



## அன்புத் தாய் மறைந்தார்...

9.9.2013 திங்கள்கிழமை நள்ளிரவைத் தாண்டும் நேரத்தில் 'அம்மா ஹேமலதா சின்னிகிருஷ்ணன் இயற்கை எய்திவிட்டார்' என்ற செய்தி கிடைத்தது. அதிர்ச்சி அடைந்தேன். நோய் வாய்ப்பட்டிருந்த அவரை 80–வது வயதில் இயற்கை தன்னோடு இணைத்துக்கொண்டது.

சென்னை அப்பலோ மருத்துவமனையில் இருந்து அவரது உடல், கடலூர் பங்களாவிற்கு கொண்டு செல்லப்பட்டதாக அடுத்த தகவல் வர, 10.9.2013–ல் அங்கு விரைந்தோம்.

காரில் செல்லும்போது வழி எல்லாம் அவரது வாழ்க்கையை பதிவு செய்த 'ஹேமாலயம்' புத்தகத்தை உருவாக்க, அவரோடு செலவிட்ட ஓராண்டு காலத்தை நினைத்துப் பார்த்தேன். அவர்களோடு எனக்கு எத்தனை ஜென்மத்து தொடர்போ!

இப்படி ஒரு வாய்ப்பு! நினைவு தெரிந்த நாளில் இருந்து ஒவ்வொரு சம்பவத்தையும் அவர் நினைவில் கொண்டுவந்து, மக்களின் வாழ்க்கைக்கு தேவையானவற்றை மட்டும் என்னிடம் எடுத்துச் சொல்லிக்கொண்டே இருந்தார். அத்தனையையும் தொகுத்து, அவர்

விரும்பியபடி மக்களுக்கு பயன்படும் விதத்தில் அது அற்புதமான புத்தகமானது.

அம்மா அகம் மகிழ்ந்தார். 80-வது பிறந்த நாளை அவரது பங்களாவிற்கு அருகில், C.K. School of practical knowledge' மைதானத்தில் கொண்டாடிய போது, 'ஹேமாலயம்' வெளியிடப்பட்டது. 'இவருக்கு 80 வயதா?' என்று வியக்கும் விதத்தில் பளிச்சென்று மேடைக்கு வந்தார், இந்த அன்புத் தாய் உற்சாகமாக எல்லோரையும் ஆசீர்வதித்தார். ஒவ்வொருவர் அன்பையும் அள்ளி எடுத்தார். மேடையிலே பாட்டுப்பாடி, ஆயிரக்கணக்கில் கூடியிருந்த மக்களை உற்சாகப்படுத்தினார். அது ஆனந்த அலை அடித்த அபூர்வ திருவிழாவாக அமைந்தது.

அடுத்து அம்மாவை நான் பார்த்த போதெல்லாம் 'புத்தகம் நல்லா இருக்குது. எல்லோரது வாழ்க்கைக்கும் பயனுள்ளதாய் இருக்கிறது என்று அனைவரும் பாராட்டினார்கள். என் வாழ்க்கை முழுவதும் பதிவு செய்யப்பட்டுவிட்டது' என்று மகிழ்ந்தார்.

'தனது வாழ்க்கை புத்தகமாகி, மக்களுக்கு வழிகாட்டும் விதத்தில் போய் சேர்ந்துவிட்டது. முடிந்துவிட்டது தன் பணி' என்று நினைத்துவிட்டாரோ, என்னவோ போதும் என்று நிறைவாக இறைவனடி சேர்ந்துவிட்டார்.

கடலூர் பங்களாவில் அம்மாவின் பூத உடல் கிடத்தி வைக்கப்பட்டிருந்தது. அவர் காலடி பற்றி நின்றோம். எப்போதும் போல் ஆழ்ந்த தூக்கம். ஆனால் இனி விழிக்க வாய்ப்பில்லை என்ற இறுதித் தூக்கம்.

அவரது கடைசி நிமிடத்தை மகன் சி.கே.அசோக்குமார் விளக்கினார். 'மூன்று மாதங்களாக அம்மா உயிரோடு போராடினார்கள். கடைசிவரை அவரது இதயம் பலமாக இருந்தது. எதிலும் எளிதாக விழாத அம்மா, மரணத்திலும் எளிதாக விழவில்லை. 9.9.2013 அன்று விநாயகர் பிறந்தநாள். அன்றுதான் அம்மா இறைநிலை அடைந்தார்' என்றார்.

அம்மா என்னிடம் நெகிழ்ந்து சொல்லி, 2-வது அத்தியாயத்தில் எழுதி, இந்த புத்தகத்தில் இடம் பெற்றிருப்பவைகளை நினைத்துப் பார்த்தேன். யானை கனவில் வந்து துரத்தியது- அதற்கான காரணத்தை அம்மா காஞ்சி மகா பெரியவரிடம் போய் கேட்டது- அவர் ஆசீர்வதித்து வலம்புரி விநாயகர் கோவில் கட்டு என்றது- கோவில் கட்டப்பட்டது.

பின்பு விநாயகர் கனவில் வந்து தன்னை மூத்த மகனாக ஏற்றுக்கொள்ள அறிவுறுத்தியது - இந்த தாயும் ஏற்றுக் கொண்டது- தனது பேரன், பேத்திகளுக்கெல்லாம் தான்கட்டிய கோவிலுக்குள் இருக்கும் விநாயகரை சுட்டிக்காட்டி, 'அது உங்கள் மாமா! கிளம்பும் போது அவரிடமும் சொல்லிவிட்டு செல்லுங்கள்' என்றது- அவர்களும் அவ்வாறே செய்தது... இப்படியே விநாயகரோடு அம்மாவை இணைத்து சொல்ல எத்தனை அதிசய சம்பவங்கள்! அந்த பந்தத்தை அம்மா நிஜமாக்கிவிட்டார். அவர் (விநாயகர்) பிறந்த நாளில் இந்த அன்புத் தாயின் வாழ்க்கை முற்றுப்பெற்றுவிட்டது. அழகான பூந்தேர் கட்டி அம்மா உடலை ஏற்றினார்கள்! தேர் கிளம்பியது.

ஒவ்வொருமுறை அம்மா காரில் கிளம்பி கோவிலை கடக்கும்போதும் 'ஒரு நிமிடம் நிறுத்துப்பா...' என்று கூறி காரை நிறுத்தி, இறங்கி, விநாயகரிடம் வணங்கி விடைபெற்று செல்வார்! இது அன்றாட நடைமுறை. ஒரு போதும் அவர் நிற்காமல் சென்றதில்லை.

இப்போது...! தேர் கோவிலை கடக்க முயற்சிக்கிறது. உள்ளே உயிரற்ற அம்மா! 'அவரால் எப்படி இப்போது நிறுத்தி விடை பெற முடியும்...! இதோ தேர் கடக்கப்போகிறது' என்று நினைத்த நேரத்தில் தேர் நிற்கிறது. கோவிலைத்தாண்டி நகர முடியவில்லை. மின்சார ஒயர் ஒன்று குறுக்காக செல்கிறது. நிறுத்துங்கள் என்றார்கள். நின்றது. விநாயகர் அருகில் தேரில் அம்மாவின் பூத உடல்! இருவரும் அருகருகே!

'இதுவரை என்னை பார்த்துவிட்டு சென்ற நீ இன்று என்னை பாராமலே போகிறாயா... நில்...!' என்று மின்சார ஒயர் மூலம் நிறுத்தி,

பார்த்த பின்பு செல்ல வைத்தார், விநாயகர். அவர்கள் இருவருக்குள்ளும் ஆத்மார்த்தமாக அவ்வளவு நெருக்கம்!

புதுவண்டி பாளையம் மயானத்தில் உடல் இறங்கி எரியூட்டப்படுகிறது. அழவே கூடாது என்பது அவர் கொய்கை. அவர் விட்டுச் செல்லும் 'ஒற்றைவரி தத்துவம்' அது! அவர் வலியுறுத்தியபடி, அங்கு நின்ற மனிதர்கள் யாரும் அழவில்லை.

ஆனால் வானம் அழுதுவிட்டது. அந்த துளிகள் பட்டு எங்கள் எல்லோர் உடலும் புல்லரித்தது.

11.9.2013 அன்று மகன்களும், குடும்பத்தாரும் அஸ்தியை சேகரித்து கரைக்க கொண்டு சென்றனர். கடலூர் கடலுக்கு! கரைக்க அலைக்குள் இறங்கினார்கள்! அப்போது அலைஅலையாய் விநாயகர் சிலைகளை கடலூர் மக்கள் கொண்டு வந்து, கரைத்தார்கள். அங்கேயும் பிள்ளையாரையும், அம்மாவையும், பிரிக்க முடியவில்லை. இருவரும் ஒன்றாய் கலந்து விட்டனர்.

அம்மா தென்றல்! நம்மோடு மூச்சாய் கலந்திருக்கிறார்.

அவர் மழை! நம்மோடு நீராய் கலந்திருக்கிறார்.

அவர் பூ! நம்மோடு வாசமாய் நிறைந்திருக்கிறார்.

அம்மா பிறந்தார்... வாழ்ந்தார்... வழி காட்டினார்...!

அவர் காட்டிய வழியில் வாழ்ந்து பெருமை சேர்ப்போம்!






*விலை: ரூ.150*




*விலை: ரூ.110*




*விலை: ரூ.75*




*விலை: ரூ.90*




விலை: ரூ.100




விலை: ரூ.100




விலை: ரூ.275




விலை: ரூ.90
















Velvette

AKSHARA VIDYAASHRAM





ஒருவர் தன் வரலாற்று சுயசரித்திரம் எழுதுவது தன் பெருமையை வெளிப் படுத்த அல்ல. பேரறிஞர், தொழிலதிபர், அரசியல் தலைவர்கள் தன் வரலாற்றை எழுதுவதால் அவர் வாழ்ந்தகால வரலாறு எதிர்காலத்துக்கும் தெரிய வருகிறது. ஒரு சிறந்த புதினத்தைப் படிக்கும் உணர்வை ஏற்படுத்தும் இந்த 'ஹேமாலயம்', ஒரு குறும்படமாக எடுத்து தமிழகத்தின் பட்டித்தொட்டி களில் அனைவரும் பார்க்கும் அளவுக்குச் சிறந்த வாழ்க்கை வரலாறு.

- கலைமாமணி விக்கிரமன்

போராட்ட சூறாவளிகளுக்கிடையே லட்சியங்களையும் யதார்த்தத்தையும் புரியவைத்தபடி பிள்ளைகளை ஆளாக்கிய லட்சியத் தாயாக அவர் உருவான கதையை இந்தப் புத்தகம் அருமையும் ஆர்வமும் குறையாமல் சொல்கிறது. முதலில் நமக்கு நம்மீது நம்பிக்கை இருக்க வேண்டும். அடுத்து பிறர் நம்பும்படி நடக்க வேண்டும். மற்றவர்களையும் நம்ப வேண்டும் என்ற இந்த அம்மையாரின் வெற்றிச் சரித்திரம் இந்தப் புத்தகம்.

- 'சொல்வேந்தர்' சுகி சிவம்

டாக்டர் ஹேமா சின்னிகிருஷ்ணன் மிகச்சிறந்த நிர்வாகியா? அன்புத்தாயா? பள்ளியின் தாளாளரா? மனிதநேயம் மிக்கவரா? என்ற வினா இந்நூலைப் படித்து முடித்தபோது என்னுள் எழுந்தது. அதற்கு எனக்குக் கிடைத்த ஒரே விடை, இவர் அனைத்து ஆற்றல்களையும் ஒருங்கே பெற்ற அன்னையார் என்பதுதான்.

- முனைவர் அரங்க. இராமலிங்கம்




₹ 125